3 நான் பிறந்தநாளும் ஒரு ஆண்பிள்ளை
உற்பத்தியாயிற்றென்று சொல்லப்பட்ட
4 ராத்திரியும் அழிவதாக.—அந்த நாள் அந்
தகாரப்படுவதாக; தேவன் உயரத்திலிருந்து
அதை விசாரியாமலும், ஒளி அதின்மேல்
5 பிரகாசியாமலும்,—அந்தகாரமும் மரண
இருளும் அதைக் கறைப்படுத்தி, மப்பு
அதை மூடி, மந்தாரநாளின் பயங்கரங்கள்
அதை அருக்களிப்பாக்குவதாக.
6 அந்த ராத்திரியை அந்தகாரம் பிடிப்ப
தாக; வருஷத்தின் நாட்களில் அது சந்தோ
ஷப்படுகிறநாளாயிராமலும், மாதங்களின்
கணக்கிலே அது வராமலும் போவதாக.—
7 அந்த ராத்திரி தனிமையாயிருப்பதாக;
அதிலே கெம்பீரசத்தம் இல்லாமற் போவ
8 தாக.—நாளைச் சபிக்கிறவர்களும், லிவி
யாதானை எழும்பப்பண்ணத்தக்கவர்களும்,
9 அதைச் சபிப்பார்களாக.—அதின் அஸ்த
மனகாலத்தில் தோன்றிய நட்சத்திரங்கள்
இருண்டு, அது எதிர்பார்த்திருந்த வெளிச்
சம் உண்டாகாமலும், விடியற்காலத்து வெ
ளுப்பை அது காணாமலும் இருப்பதாக.—
10 நான் இருந்த கர்ப்பத்தின் வாசலை அது அ
டைக்காமலும், என் கண்கள் காண்கிறவரு
த்தத்தை மறைத்துவிடாமலும் இருந்ததே.
11 நான் கர்ப்பத்தில்தானே அழியாமலும்,
கர்ப்பத்திலிருந்து புறப்படுகிறபோதே
12 சாகாமலும் போனதென்ன?—என்னை ஏந்
திக்கொள்ள மடியும், நான் பாலுண்ண
ஸ்தனங்களும் உண்டாயிருந்ததென்ன?—
13 அப்படியில்லாதிருந்தால், அசையாமல்
14 கிடந்து அமர்ந்திருந்து,—பாழ்நிலங்களில்
தங்களுக்கு மாளிகையைக் கட்டின பூமி
யின் ராஜாக்களோடும் மந்திரிமார்களோ
15 டும்,—அல்லது, பொன்னை உடையவர்க
ளும், தங்கள் வீடுகளை வெள்ளியினால் நிரப்
பினவர்களுமான பிரபுக்களோடுங்கூட
நான் இப்பொழுது தூங்கி இளைப்பாறுவே
16 னே.—அல்லது, வெளிப்படாத முதிராப்
பிண்டம்போலவும், வெளிச்சத்தைக் கா
ணாத சிசுக்கள்போலவும் இருப்பேனே.—
17 துன்மார்க்கருடைய தொந்தரவு அங்கே
ஓய்ந்திருக்கிறது; பெலனற்று விடாய்த்துப்
போனவர்கள் அங்கே இளைப்பாறுகிறார்
18 கள்.—கட்டுண்டிருந்தவர்கள் அங்கே ஏக
மாக அமைந்திருக்கிறார்கள்; ஒடுக்குகிறவ
னுடைய சத்தம் அங்கே கேட்கப்படுகிற
19 தில்லை.—சிறியவனும் பெரியவனும் அங்
கே சரியாயிருக்கிறார்கள்; அடிமை தன்
எஜமானுக்கு நீங்கலாயிருக்கிறான்.

மரணத்துக்கு ஆசையாய்க் காத்திருந்து, 20
புதையலைத் தேடுகிறதுபோல அதைத் தே
டியும் அடையாமற்போகிறவர்களும்,—
பிரேதக்குழியைக் கண்டுபிடித்ததினால் மிக 21
வும் களிகூர்ந்து,—அதற்காகச் சந்தோஷப் 22
படுகிற நிர்ப்பாக்கியருமாகிய இவர்களுக்கு
வெளிச்சமும், மனச்சஞ்சலமுள்ள இவர்
களுக்கு ஜீவனும் கொடுக்கப்படுகிறதினால்
பலன் என்ன?—தன் வழியைக் காணக் 23
கூடாதபடிக்கு, தேவனால் வளைந்துகொள்
ளப்பட்டவனுக்கு வெளிச்சத்தினால் பலன்
என்ன?—என் போஜனத்துக்கு முன்னே 24
எனக்குப் பெருமூச்சு உண்டாகிறது; என்
கதறுதல் வெள்ளம்போல் புரண்டுபோகி
றது.—நான் பயந்த காரியம் எனக்கு நே 25
ரிட்டது; நான் அஞ்சினது எனக்கு வந்
தது.—எனக்குச் சுகமுமில்லை, இளைப்பாறு 26
தலுமில்லை, அமைதலுமில்லை; எனக்குத்
தத்தளிப்பே நேரிட்டது.

அப்பொழுது தேமானியனாகிய எலிப் 4
பாஸ் பிரதியுத்தரமாக:—நாங்கள், உம்மு 2
டனே பேசத் துணிந்தால், ஆயாசப்படுவீ
ரோ? ஆனாலும் பேசாமல் அடக்கிக்கொள்
ளத்தக்கவன் யார்?—இதோ, நீர் அநேகருக் 3
குப் புத்திசொல்லி, இளைத்த கைகளைத் திடப்
படுத்தினீர். — விழுகிறவனை உம்முடைய 4
வார்த்தைகளால் நிற்கப்பண்ணி, தள்ளாடு
கிற முழங்கால்களைப் பலப்படுத்தினீர்.—
இப்பொழுதோ துன்பம் உமக்கு நேரிட்ட 5
படியினால் ஆயாசப்படுகிறீர்; அது உம்
மைத் தொட்டதினால் கலங்குகிறீர்.—உம் 6
முடைய தேவபக்தி உம்முடைய உறுதி
யாயும், உம்முடைய வழிகளின் உத்தமம்
உம்முடைய நம்பிக்கையாயும் இருக்க
வேண்டியதல்லவோ? — குற்றமில்லாமல் 7
அழிந்தவன் உண்டோ? சன்மார்க்கர் அதம்
பண்ணப்பட்டது எப்போ? இதை நினைத்
துப்பாரும்.—நான் கண்டிருக்கிறபடி, அநி 8
யாயத்தை உழுது, தீவினையை விதைத்தவர்
கள், அதையே அறுக்கிறார்கள்.—தேவனு 9
டைய சுவாசத்தினாலே அவர்கள் அழிந்து,
அவருடைய நாசியின் காற்றினாலே நிர்
மூலமாகிறார்கள். — சிங்கத்தின் கெர்ச்சிப் 10
பும், துஷ்டசிங்கத்தின் முழக்கமும் அடங்
கும்; பாலசிங்கங்களின் பற்களும் தகர்ந்து
போம். — கிழச்சிங்கம் இரையில்லாமை 11
யால் மாண்டுபோம், பாலசிங்கங்கள் சித
றுண்டுபோம்.

இப்போதும் ஒரு வார்த்தை என்னிடத் 12
தில் இரகசியமாய் அறிவிக்கப்பட்டது,

அதினுடைய மெல்லிய ஓசை என் செவி
13 யில் விழுந்தது.—மனுஷர்மேல் அயர்ந்த
நித்திரை இறங்குகையில், இராத்தரிசனங்
களில் பலவித தோற்றங்கள் உண்டாகும்
14 போது, — திகிலும் நடுக்கமும் என்னைப்
பிடித்தது, என் எலும்புகளெல்லாம் நடுங்
15 கினது.—அப்பொழுது ஒரு ஆவி என் முக
த்துக்கு முன்பாகக் கடந்தது, என் உட
16 லின் மயிர் சிலிர்த்தது.—அது ஒரு உருப்
போல என் கண்களுக்குமுன் நின்றது,
ஆனாலும் அதின் ரூபம் இன்னதென்று விள
ங்கவில்லை; அமைதலுண்டாயிற்று, அப்
17 பொழுது நான் கேட்ட சத்தமாவது:—மனு
ஷன் தேவனைப்பார்க்கிலும் நீதிமானாயிருப்
பானோ? மனுபுத்திரன் தன்னை உண்டாக்
கினவரைப்பார்க்கிலும் சுத்தமாயிருப்பா
18 னோ?—கேளும், அவர் தம்முடைய பணி
விடைக்காரரிடத்தில் நம்பிக்கை வைப்ப
தில்லை; தம்முடைய தூதரின்மேலும் புத்தி
19 யீனத்தைச் சுமத்துகிறாரே. — புழுதியில்
அஸ்திபாரம் போட்டு, மண் வீடுகளில் வா
சம்பண்ணி, பொட்டுப்பூச்சியால் அரிக்கப்
படுகிறவர்கள்மேல் அவர் நம்பிக்கை வைப்
20 பது எப்படி?—காலைமுதல் மாலைவரைக்
கும் மடிந்து, கவனிப்பார் ஒருவருமில்லா
21 மல், நித்திய அழிவடைகிறார்கள்.—அவர்
களிலிருக்கிற அவர்களுடைய மேன்மை
போய்விடுமல்லவோ? ஞானமடையாமல்
சாகிறார்களே என்று சொன்னான்.

5 இப்போது கூப்பிடும், உமக்கு உத்த
ரவு கொடுப்பார் உண்டோ பார்ப்போம்?
பரிசுத்தவான்களில் யாரை நோக்கிப்பார்ப்
2 பீர்?—கோபம் நிர்மூடனைக் கொல்லும்;
பொறாமை புத்தியில்லாதவனை அதம்பண்
3 ணும்.—நிர்மூடன் ஒருவன் வேரூன்றுகிற
தை நான் கண்டு, உடனே அவன் வாசஸ்
4 தலத்தைச் சபித்தேன்.—அவன் பிள்ளைகள்
இரட்சிப்புக்குத் தூரமாகி, தப்புவிப்பா
ரில்லாமல், வாசலிலே நொறுக்கப்பட்டார்
5 கள்.—பசித்தவன் அவன் விளைச்சலை முட்
செடிகளுக்குள்ளுமிருந்து பறித்துத் தின்
றான்; பறிகாரன் அவன் ஆஸ்தியை விழுங்
6 கினான்.—தீங்கு புழுதியிலிருந்து உண்டா
கிறதுமில்லை; வருத்தம் மண்ணிலிருந்து
7 முளைக்கிறதுமில்லை.—அக்கினிப்பொறிகள்
மேலே பறக்கிறதுபோல, மனுஷன் வருத்
தம் அனுபவிக்கப் பிறந்திருக்கிறான்.

8 ஆனாலும் நான் தேவனை நாடி, என் நியா
யத்தை தேவனிடத்தில் ஒப்புவிப்பேன்.—
9 ஆராய்ந்து முடியாத பெரிய காரியங்களை
யும், எண்ணிமுடியாத அதிசயங்களையும்
அவர் செய்கிறார். — தாழ்ந்தவர்களை உய 10
ரத்தில் வைத்து, துக்கிக்கிறவர்களை இரட்
சித்து உயர்த்துகிறார். — அவர் பூமியின் 11
மேல் மழையை வருஷிக்கப்பண்ணி, வெ
ளிநிலங்களின்மேல் தண்ணீர்களை வருவிக்
கிறார்.—தந்திரக்காரரின் கைகள் காரியத் 12
தை முடிய நடத்தக்கூடாதபடிக்கு, அவர்
களுடைய உபாயங்களை அவர் அபத்தமாக்
குகிறார்.—அவர் ஞானிகளை அவர்களுடைய 13
தந்திரத்திலே பிடிக்கிறார்; திரியாவரக்கார
ரின் ஆலோசனை கவிழ்க்கப்படும்.—அவர் 14
கள் பகற்காலத்திலே அந்தகாரத்துக்குள்
ளாகி, மத்தியானவேளையிலே இரவில் தட
வுகிறதுபோல தடவித் திரிகிறார்கள்.—ஆனா 15
லும் எளியவனை அவர்கள் வாயிலிருக்கிற
பட்டயத்துக்கும், பெலவானின் கைக்கும்
விலக்கி இரட்சிக்கிறார்.—அதினால் தரித்தி 16
ரனுக்கு நம்பிக்கை உண்டு; தீமையானது
தன் வாயை மூடும்.

இதோ, தேவன் தண்டிக்கிற மனுஷன் 17
பாக்கியவான்; ஆகையால் சர்வவல்லவ
ருடைய சிட்சையை அற்பமாக எண்ணா
திரும். — அவர் காயப்படுத்திக் காயங்கட் 18
டுகிறார்; அவர் அடிக்கிறார், அவருடைய
கை ஆற்றுகிறது.—ஆறு இக்கட்டுகளுக்கு 19
உம்மை நீங்கலாக்குவார்; ஏழாவதிலும்
பொல்லாப்பு உம்மைத் தொடாது.—பஞ் 20
சகாலத்திலே அவர் உம்மை மரணத்துக்
கும், யுத்தத்திலே பட்டயத்தின் வெட்டுக்
கும் விலக்கி மீட்பார்.—நாவின் சவுக்குக் 21
கும் மறைக்கப்படுவீர்; பாழாக்குதல் வரு
ம்போதும் பயப்படாமலிருப்பீர்.—பாழாக் 22
குதலையும் பஞ்சத்தையும் பார்த்து நகைப்
பீர்; காட்டுமிருகங்களுக்கும் பயப்படாம
லிருப்பீர். — வெளியின் கல்லுகளோடும் 23
உமக்கு உடன்படிக்கையிருக்கும்; வெளி
யின் மிருகங்களும் உம்மோடே சமாதான
மாயிருக்கும். — உம்முடைய கூடாரம் 24
சமாதானத்தோடிருக்கக் காண்பீர்; உம்மு
டைய வாசஸ்தலத்தை விசாரிக்கும்போது
குறைவைக் காணமாட்டீர்.—உம்முடைய 25
சந்தானம் பெருகி, உம்முடைய சந்ததி
யார் பூமியின் பூண்டுகளைப்போல இருப்
பார்கள் என்பதை அறிந்துகொள்வீர்.—
தானியம் ஏற்றகாலத்திலே அம்பாரத்தில் 26
சேருகிறதுபோல, முதிர்வயதிலே கல்லறை
யில் சேருவீர்.—இதோ, நாங்கள் ஆராய் 27
ந்து அறிந்தது இதுதான்; காரியம் இப்படி
யிருக்கிறது; இதை நீர் கேட்டு உமக்கு நன்

மையுண்டாக அறிந்துகொள்ளும் என்றான்.

**6** 2 யோபு பிரதியுத்தரமாக:—என் சஞ்சலம் நிறுக்கப்பட்டு, என் நிர்ப்பந்தம் எல்லாம் தராசிலே வைக்கப்பட்டால் நலமா 3 யிருக்கும்.—அப்பொழுது அது கடற்கரை மணலைப்பார்க்கிலும் பாரமாயிருக்கும்; ஆகையால் என் துக்கம் சொல்லிமுடியாது.- 4 சர்வவல்லவரின் அம்புகள் எனக்குள் தைத்திருக்கிறது; அவைகளின் விஷம் என் உயிரைக் குடிக்கிறது; தேவனால் உண்டாகும் பயங்கரங்கள் எனக்குமுன்பாக அணியணி 5 யாய் நிற்கிறது.--புல்லிருக்கிற இடத்திலே காட்டுக்கழுதை கத்துமோ? தனக்குத் தீவனமிருக்கிற இடத்திலே எருது கதறுமோ?- 6 ருசியில்லாத பதார்த்தத்தை உப்பில்லாமல் சாப்பிடக்கூடுமோ? முட்டையின் வெள் 7 ளைக்கருவில் சுவை உண்டோ?—உங்கள் வார்த்தைகளை என் ஆத்துமா தொடமாட்டேன் என்கிறது; அவைகள் அரோசிகமான போஜனம்போல் இருக்கிறது.

8 ஆ, என் மன்றாட்டு எனக்கு அருளப்பட்டு, நான் வாஞ்சிப்பதை தேவன் எனக் 9 குத் தந்து,—தேவன் என்னை நொறுக்கச் சித்தமாய், தம்முடைய கையை நீட்டி என்னைத் துண்டித்துப்போட்டால் நலமா 10 யிருக்கும்.—அப்பொழுதாவது எனக்கு ஆறுதல் இருக்குமே; அப்பொழுது என்னைத் தப்பவிடாத நோவிலே மரத்திருப்பேன்; பரிசுத்தருடைய வார்த்தைகளை நான் மறைத்துவைக்கவில்லை, அவர் என் 11 னைத் தப்பவிடாராக.—நான் காத்துக்கொண்டிருக்க என் பெலன் எம்மாத்திரம்? என் ஜீவனை நீடித்திருக்கப்பண்ண என் 12 முடிவு எப்படிப்பட்டது?—என் பெலன் கற்களின் பெலனோ? என் மாம்சம் வெண் 13 கலமோ?—எனக்கு உதவியானது ஒன்றும் இல்லையல்லவோ? சகாயம் என்னைவிட்டு நீங்கிற்றே.

14 உபாதிக்கப்படுகிறவனுக்கு அவனுடைய சிநேகிதனால் தயை கிடைக்கவேண்டும்; அவனோ சர்வவல்லவருக்குப் பயப் 15 படாதே போகிறான்.—என் சகோதரர் காட்டாறுபோலமோசம்பண்ணுகிறார்கள்; ஆறுகளின் வெள்ளத்தைப்போலக் கடந்து 16 போகிறார்கள்.—அவைகள் குளிர்காலப் பனிக்கட்டியினாலும், அதில் விழுந்திருக்கிற உறைந்த மழையினாலும் கலங்கலாகி,- 17 உஷ்ணங் கண்டவுடனே உருகி வற்றி, அனல் பட்டவுடனே தங்கள் ஸ்தலத்தில் உருவழிந்துபோகின்றன.—அவைகளு 18 டைய வழிகளின் போக்குகள் இங்குமங்கும் பிரியும்; அவைகள் விருதாவிலே பரவி ஒன்றும் இல்லாமற்போகும்.—தேமாவின் 19 பயணக்காரர் தேடி, சேபாவின் பயணக் கூட்டங்கள் அவைகள்மேல் நம்பிக்கை வைத்து,—தாங்கள் இப்படி நம்பினதினா 20 லே வெட்கப்படுகிறார்கள்; அவ்விடமட்டும் வந்து கலங்கிப்போகிறார்கள்.—அப் 21 படியே நீங்களும் இப்பொழுது ஒன்றுக்கும் உதவாமற்போனீர்கள்; என் ஆபத்தைக் கண்டு பயப்படுகிறீர்கள்.—எனக்கு 22 ஏதாகிலும் கொண்டுவாருங்கள் என்றும், உங்கள் ஆஸ்தியிலிருந்து எனக்கு யாதொரு வெகுமானம் கொடுங்கள் என்றும்;— அல்லது சத்துருவின் கைக்கு என்னைத் 23 தப்புவியுங்கள், வல்லடிக்காரரின் கைக்கு என்னை நீங்கலாக்கி மீட்டுவிடுங்கள் என்றும் நான் சொன்னதுண்டோ?

எனக்கு உபதேசம்பண்ணுங்கள், நான் 24 மவுனமாயிருப்பேன்; நான் எதிலே தவறினேனோ அதை எனக்குத் தெரியப்படுத்துங்கள்.—செம்மையான வார்த்தைகளில் 25 எவ்வளவு வல்லமை உண்டு? உங்கள் கடிந்துகொள்ளுதலினால் காரியம் என்ன?— கடிந்துகொள்ள நீங்கள் வார்த்தைகளை 26 யோசித்து, நம்பிக்கையற்றவனுடைய வார்த்தைகளைக் காற்றிலே விட்டுவிடுகிறீர்களோ?—இப்படிச் செய்து திக்கற்றவன் 27 மேல் நீங்கள் விழுந்து, உங்கள் சிநேகிதனுக்குப் படுகுழியை வெட்டுகிறீர்கள்.— இப்போதும் உங்களுக்குச் சித்தமானால் 28 என்னை நோக்கிப்பாருங்கள்; அப்பொழுது நான் பொய்சொல்லுகிறேனோ என்று உங்களுக்குப் பிரத்தியட்சமாய் விளங்கும்.— நீங்கள் திரும்புங்கள், அக்கிரமம் காணப் 29 படாதிருக்கும்; திரும்புங்கள் என் நீதி அதிலே விளங்கும்.—என் நாவிலே அக் 30 கிரமம் உண்டோ? என் வாய் ஆகாதவைகளைப் பகுத்தறியாதோ?

பூமியிலே போராட மனுஷனுக்குக் **7** குறிக்கப்பட்ட காலம் உண்டல்லவோ? அவன் நாட்கள் ஒரு கூலிக்காரன் நாட்களைப்போல் இருக்கிறதல்லவோ?—ஒரு வே 2 லையாள் நிழலை வாஞ்சித்து, ஒரு கூலிக்காரன் தன் கூலியை வரப் பார்த்திருக்கிறது போல,—மாயையான மாதங்கள் என்னு 3 டைய சுதந்தரமாகி, சஞ்சலமான ராத்திரிகள் எனக்குக் குறிக்கப்பட்டது.—நான் 4 படுத்துக்கொள்ளுகிறபோது, எப்பொழுது

எழுந்திருப்பேன்? இராக்காலம் எப்பொழுது முடியும் என்று சொல்லி, கிழக்கு வெளுக்குமட்டும் அரண்டு புரளுகிறதினால் எனக்குப் போதுமென்று போகிறது.—5 என் மாம்சம் பூச்சிகளினாலும், அடைபற்றின புழுதியினாலும் மூடப்பட்டிருக்கிறது; என் தோல் வெடித்து அருவருப்பாயிற்று.—6 என் நாட்கள் நெய்கிறவன் எறிகிற நாடாவிலும் தீவிரமாய் ஓடுகிறது; அவைகள் நம்பிக்கையில்லாமல் முடிந்துபோகும். —7 என் பிராணன் காற்றைப்போலிருக்கிறதென்றும், என் கண்கள் இனி நன்மையைக் காணப்போகிறதில்லையென்றும் நினைத்தருளும்.—8 இப்போது என்னைக் காண்கிறவர்களின் கண்கள் இனி என்னைக் காண்பதில்லை; உம்முடைய கண்கள் என்மேல் நோக்கமாயிருக்கிறது; நானோ இல்லாமற்போகிறேன்.—9 மேகம் பறந்துபோகிறதுபோல, பாதாளத்தில் இறங்குகிறவன் இனி ஏறிவரான்.—10 இனி தன் வீட்டுக்குத் திரும்பான், அவன் ஸ்தலம் இனி அவனை அறியாது.—11 ஆகையால் நான் என் வாயை அடக்காமல், என் ஆவியின் வேதனையினால் பேசி, என் ஆத்துமத்தின் கசப்பினால் அங்கலாய்ப்பேன்.

12 தேவரீர் என்மேல் காவல் வைக்கிறதற்கு நான் சமுத்திரமோ? நான் ஒரு திமிங்கிலமோ?—13 என் கட்டில் எனக்கு ஆறுதல் கொடுக்கும் என்றும், என் படுக்கை என் தவிப்பை ஆற்றும் என்றும் நான் சொல்வேனாகில்,—14 நீர் சொப்பனங்களால் என்னைக் கலங்கப்பண்ணி, தரிசனங்களால் எனக்குத் திகிலுண்டாக்குகிறீர்.—15 அதினால் என் ஆத்துமா, நெருக்குண்டு சாகிறதையும், என் எலும்புகளோடே உயிரோடிருக்கிறதைப்பார்க்கிலும் மரணத்தையும் விரும்புகிறது.—16 இப்படியிருக்கிறதை அரோசிக்கிறேன்; எந்நாளும் உயிரோடிருக்க விரும்பேன், என்னை விட்டுவிடும்; என் நாட்கள் மாயைதானே.—17 மனுஷனை நீர் ஒரு பொருட்டாக எண்ணுகிறதற்கும், அவன்மேல் சிந்தை வைக்கிறதற்கும்,—18 காலைதோறும் அவனை விசாரிக்கிறதற்கும், நிமிஷந்தோறும் அவனைச் சோதிக்கிறதற்கும், அவன் எம்மாத்திரம்?—19 நான் என் உமிழ்நீரை விழுங்காதபடி எத்தனைகாலம் என்னை நெகிழாமலும், என்னை விடாமலும் இருப்பீர்.—20 மனுஷரைக் காப்பவரே, பாவஞ்செய்தேனானால் உமக்கு நான் செய்யவேண்டியது என்ன? நான் எனக்குத்தானே பாரமாயிருக்கும்படிக்கு, நீர் என்னை உமக்கு இலக்காக வைத்தது என்ன?—21 என் மீறுதலை நீர் மன்னியாமலும், என் அக்கிரமத்தை நீக்காமலும் இருக்கிறது என்ன? இப்பொழுதே மண்ணில் படுத்துக்கொள்வேன்; விடியற்காலத்திலே என்னைத் தேடுவீரானால் நான் இரேன் என்றான்.

**8** அப்பொழுது சூகியனான பில்தாத் பிரதியுத்தரமாக:—2 நீர் எந்தமட்டும் இப்படிப்பட்டவைகளைப் பேசுவீர்? எதுவரைக்கும் உம்முடைய வாயின் வார்த்தைகள் பலமான காற்றைப்போலிருக்கும்?—3 தேவன் நியாயத்தைப்புரட்டுவாரோ? சர்வவல்லவர் நீதியைப்புரட்டுவாரோ?—4 உம்முடைய பிள்ளைகள் அவருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்திருந்தாலும், அவர்களுடைய பாதகத்தின் ஆக்கினைக்கு அவர்களை அவர் ஒப்புக்கொடுத்திருந்தாலும்,—5 நீர் தேவனை ஏற்கனவே தேடி, சர்வவல்லவரை நோக்கி விண்ணப்பஞ்செய்து,—6 சுத்தமும் செம்மையுமாய் இருந்தீரேயானால், அப்பொழுது அவர் உமக்காக விழித்து நீதியுள்ள உம்முடைய வாசஸ்தலத்தைச் சாங்கோபாங்கமாக்குவார்.—7 உம்முடைய துவக்கம் அற்பமாயிருந்தாலும், உம்முடைய முடிவு சம்பூரணமாயிருக்கும்.

8 ஆகையால், நீர் முந்தின தலைமுறையாரிடத்தில் விசாரித்து, அவர்கள் முன்னோர்களின் செய்தியை ஆராய்ந்துபாரும்.—9 நாம் நேற்று உண்டானவர்கள், ஒன்றும் அறியோம்; பூமியின்மேல் நம்முடைய நாட்கள் நிழலைப்போலிருக்கிறது.—10 அவர்கள் உமக்கு உபதேசித்து, உமக்குத் தெரிவித்து, தங்கள் இருதயத்திலிருக்கும் நியாயங்களை வெளிப்படுத்துவார்கள் அல்லவோ?—11 சேறில்லாமல் நாணல் ஓங்கி வளருமோ? தண்ணீரில்லாமல் கோரைப்புல் முளைக்குமோ?—12 அது இன்னும் பச்சையாயிருக்கும்போதே, அறுக்கப்படாதிருந்தும் மற்ற எந்தப் புல்லைப்பார்க்கிலும் சீக்கிரமாய் வாடிப்போம் அல்லவோ?—13 தேவனை மறக்கிற எல்லாருடைய வழிகளும் அப்படியே இருக்கும்; மாயக்காரரின் நம்பிக்கை அழிந்துபோம்.—14 அவனுடைய வீண் எண்ணம் அற்றுப்போய், அவனுடைய நம்பிக்கை சிலந்திப்பூச்சி வீடுபோலிருக்கும்.—15 ஒருவன் அதின் வீட்டின்மேல் சாய்ந்தால், அது நிலைக்கமாட்டாது, அதைப் பிடித்தால், அது நிற்காது.—16 வெயில் எறிக்காததற்கு முன்னே

அவன் பச்சைச்செடி, அதின் கொடிகள்
அவன் தோட்டத்தின் மேலே படரும்;—
17 அதின் வேர்கள் கற்குவியலில் சிக்கி, கற்
18 பாறையை நாடும்.—அது அதினிடத்தில்
இராதபடிக்கு நிர்மூலமானபின், அது
இருந்த இடம் உன்னை நான் கண்ட
19 தில்லையென்று மறுதலிக்கும். — இதோ,
அவன் வழியின் மகிழ்ச்சி இப்படியே போ
கிறது; ஆனாலும் வேறே பேர் மண்ணிலி
ருந்து முளைப்பார்கள்.
20 இதோ, தேவன் உத்தமனை வெறுக்கிறது
மில்லை, பொல்லாதவர்களுக்குக் கைகொ
21 டுக்கிறதுமில்லை. — இனி அவர் உம்மு
டைய வாயை நகைப்பினாலும், உம்மு
டைய உதடுகளைக் கெம்பீரத்தினாலும் நிரப்
22 புவார்.—உம்மைப் பகைக்கிறவர்கள் வெட்
கத்தால் மூடப்படுவார்கள்; துன்மார்க்க
ருடைய கூடாரம் அழிந்துபோகும் என்
றான்.

9 2 அதற்கு யோபு பிரதியுத்தரமாக:-ஆம்,
காரியம் இப்படியிருக்கிறது என்று அறி
வேன்; தேவனுக்கு முன்பாக மனுஷன் நீதி
3 மானாயிருப்பதெப்படி?—அவர் அவனோடே
வழக்காடச் சித்தமாயிருந்தால், ஆயிரத்
தில் ஒன்றுக்காகிலும் அவருக்கு உத்தரவு
4 சொல்லமாட்டானே. — அவர் இருதயத்
தில் ஞானமுள்ளவர், பெலத்தில் பராக்
கிரமமுள்ளவர்; அவருக்கு விரோதமாகத்
தன்னைக் கடினப்படுத்தி வாழ்ந்தவன் யார்?-
5 அவர் பர்வதங்களைச் சடிதியாய்ப் பேர்க்கி
றார்; தம்முடைய கோபத்தில் அவைக
6 ளைப் புரட்டிப்போடுகிறார்.—பூமியின் தூண்
கள் அதிரத்தக்கதாய் அதை அதின் ஸ்தா
னத்தினின்று அசையப்பண்ணுகிறார்.—
7 அவர் சூரியனுக்குக் கட்டளையிட அது
உதிக்காதிருக்கும்; அவர் நட்சத்திரங்களை
8 மறைத்துப்போடுகிறார்.—அவர் ஒருவரே
வானங்களை விரித்து, சமுத்திர அலைகளின்
9 மேல் நடக்கிறவர்.—அவர் துருவச்சக்கர
நட்சத்திரங்களையும், மிருகசீரிஷத்தையும்,
அறுமீனையும், தட்சணமண்டலங்களையும்
10 உண்டாக்கினவர். — ஆராய்ந்துமுடியாத
பெரிய காரியங்களையும், எண்ணிமுடியாத
11 அதிசயங்களையும் அவர் செய்கிறார்.-இதோ,
அவர் என் அருகில் போகிறார், நான் அவ
ரைக் காணேன்; அவர் கடந்துபோகிறார்,
12 நான் அவரை அறியேன்.-இதோ, அவர்
பறித்துக்கொண்டுபோகிறார், அவரை மறிப்
பவன் யார்? நீர் என்னசெய்கிறீர் என்று
13 அவரைக் கேட்பவன் யார்?—தேவன் தம்

முடைய கோபத்தைத் திருப்பமாட்டார்;
ஒருவருக்கொருவர் துணைநிற்கிற அகங்கா
ரிகள் அவருக்கு அடங்கவேண்டும்.—இப் 14
படியிருக்க, அவருக்கு மறுமொழி கொடுக்
கவும், அவரோடே வழக்காடும் வார்த்தை
களைத் தெரிந்துகொள்ளவும் நான் எம்மாத்
திரம்?—நான் நீதிமானாயிருந்தாலும் அவ 15
ரோடே வழக்காடாமல், என் நியாயாதிபதி
யினிடத்தில் இரக்கத்துக்குக் கெஞ்சு
வேன்.—நான் கெஞ்ச, அவர் எனக்கு உத் 16
தரவு அருளினாலும், அவர் என் விண்ணப்
பத்துக்குச் செவிகொடுத்தார் என்று நம்
பேன்.—அவர் புசலினால் என்னை முறிக்கி 17
றார்; முகாந்தரமில்லாமல் அநேகம் காயங்
களை எனக்கு உண்டாக்குகிறார்.—நான் மூச் 18
சுவிட எனக்கு இடங்கொடாமல், கசப்பி
னால் என்னை நிரப்புகிறார்.—பெலத்தைப் 19
பார்த்தால், அவரே பெலத்தவர்; நியாயத்
தைப் பார்த்தால், என் பட்சத்தில் சாட்சி
சொல்லுகிறவன் யார்?—நான் என்னை நீதி 20
மானாக்கினாலும் என் வாயே என்னைக் குற்
றவாளியாக்கும்; நான் உத்தமன் என்று
சொன்னாலும், நான் மாறுபாடானவன்
என்று அது சாட்சிகொடுக்கும். — நான் 21
உத்தமனென்றாலும் என் உள்ளத்தை நான்
அறியேன்; என் ஜீவனை அரோசிப்பேன்.
ஒரு காரியம் உண்டு, அதைச் சொல்லு 22
சன்மார்க்கனையும் துன்மார்க்கனை
யும் அவர் அழிக்கிறார்.—சவுக்கானது அசுப் 23
பிலே வாதித்துக் கொல்லும்போது, அவர்
குற்றமில்லாதவர்களின் சோதனையைப்பா
ர்த்து நகைக்கிறார். — உலகம் துன்மார்க் 24
கர் கையில் விடப்பட்டிருக்கிறது; அதிலி
ருக்கிற நியாயாதிபதிகளின் முகத்தை
மூடிப்போடுகிறார்; அவர் இதைச் செய்கிற
தில்லையென்றால், பின்னை யார் இதைச் செய்
கிறார்.—என் நாட்கள் அஞ்சற்காரர் ஓட் 25
டத்திலும் தீவிரமாயிருக்கிறது; அவைகள்
நன்மையைக் காணாமல் பறந்துபோம்.—
அவைகள் வேகமாய் ஓடுகிற கப்பல்களைப் 26
போலவும், இரையின்மேல் பாய்கிற கழு
கைப்போலவும் கடந்துபோகிறது.—என் 27
அங்கலாய்ப்பை நான் மறந்து, என் முகத்
தின் துக்கத்தை மாற்றி, திடன்கொள்வேன்
என்று சொன்னால்,-என் வருத்தங்களைப்பற் 28
றிப் பயமாயிருக்கிறேன்; என்னைக் குற்ற
மில்லாதவனாக எண்ணமாட்டீர் என்று
அறிவேன். — நான் பொல்லாதவனாயிருந் 29
தால், விருதாவாய்ப் போராடவேண்டியது
என்ன?—நான் உறைந்த மழைத்தண்ணீ 30

ரில் முழுகி, என் கைகளைச் சவுக்காரத்தி
31 னால் சுத்தம்பண்ணினாலும்,—நீர் என்னைச்
சேற்றுப்பள்ளத்திலே அமிழ்த்துவீர்; அப்
பொழுது என் வஸ்திரமே என்னை அருவ
32 ருக்கும்.—நான் அவருக்குப் பிரதியுத்தரம்
சொல்லுகிறதற்கும், நாங்கள் கூடி நியா
யத்திற்கு வருகிறதற்கும், அவர் என்னைப்
33 போல மனுஷன் அல்லவே.—எங்கள்
இருவர்மேலும் தன் கையை வைக்கத்தக்க
மத்தியஸ்தன் எங்களுக்குள் இல்லையே.—
34 அவர் தமது மிலாற்றை என்னைவிட்டு அக
ற்றுவாராக; அவருடைய பயங்கரம் என்
35 னைக் கலங்கப்பண்ணாதிருப்பதாக.—அப்
பொழுது நான் அவருக்குப் பயப்படாமல்
பேசுவேன்; இப்பொழுதோ அப்படிச் செ
ய்ய இடமில்லை.

**10** என் ஆத்துமா ஜீவனை அரோசிக்கிறது,
நான் என் துயரத்துக்கு எனக்குள்ளே
இடங்கொடுத்து, என் மனச்சஞ்சலத்தினா
2 லே பேசுவேன்.—நான் தேவனை நோக்கி:
என்னைக் குற்றவாளியென்று தீர்க்காதிரும்;
நீர் எதினிமித்தம் என்னோடே வழக்காடு
கிறீர், அதை எனக்குத் தெரியப்படுத்தும்
3 என்பேன்.—நீர் என்னை ஒடுக்கி, உம்மு
டைய கைகளின் கிரியையை வெறுத்து,
துன்மார்க்கரின் யோசனையைக் கிருபை
யாய்ப் பார்க்கிறது உமக்கு நன்றாயிருக்கு
4 மோ?—மாம்சக் கண்கள் உமக்கு உண்
டோ? மனுஷன் பார்க்கிறபிரகாரமாய்ப்
5 பார்க்கிறீரோ?—நீர் என் அக்கிரமத்தைக்
கிண்டிக் கிளப்பி, என் பாவத்தை ஆராய்
6 ந்து விசாரிக்கிறதற்கு,—உம்முடைய நாட்
கள் ஒரு மனுஷனுடைய நாட்களைப்
போலவும், உம்முடைய வருஷங்கள் ஒரு
புருஷனுடைய ஜீவகாலத்தைப்போலவும்
7 இருக்கிறதோ?-நான் துன்மார்க்கன் அல்ல
என்பது உமக்குத் தெரியும்; உம்முடைய
கைக்கு என்னைத் தப்புவிக்கிறவன் இல்லை
8 உம்முடைய கரங்கள் என்னையும் என
க்குரிய எல்லாவற்றையும் உருவாக்கிப்
படைத்திருந்தும், என்னை நிர்மூலமாக்கு
9 கிறீர்.—களிமண்போல என்னை உருவாக்
கினீர் என்பதையும், என்னைத் திரும்பத்
தூளாகப் போகப்பண்ணுவீர் என்பதையும்
10 நினைத்தருளும்.—நீர் என்னைப் பால்போல்
வார்த்து, தயிர்போல் உறையப்பண்ணினீர்
11 அல்லவோ? — தோலையும் சதையையும்
எனக்குத் தரித்து, எலும்புகளாலும் நரம்பு
12 களாலும் என்னை இசைத்தீர். — எனக்கு
ஜீவனைத் தந்ததும் அல்லாமல், தயவையும்
எனக்குப் பாராட்டினீர்; உம்முடைய பரா
மரிப்பு என் ஆவியைக் காப்பாற்றினது.—
13 இவைகள் உம்முடைய உள்ளத்தில் மறை
ந்திருந்தாலும், இது உமக்குள் இருக்கிறது
என்று அறிவேன்.

14 நான் பாவஞ்செய்தால், அதை நீர் என்
னிடத்தில் விசாரித்து, என் அக்கிரமத்தை
15 என்மேல் சுமத்தாமல் விடீர்.—நான் துன்
மார்க்கனாயிருந்தால் எனக்கு ஐயோ! நான்
நீதிமானாயிருந்தாலும் என் தலையை நான்
எடுக்கமாட்டேன்; அவமானத்தால் நிரப்
பப்பட்டேன்; நீர் என் சிறுமையைப் பார்த்
16 தருளும், அது அதிகரிக்கிறது. — சிங்கத்
தைப்போல என்னை வேட்டையாடி, என
க்கு விரோதமாய் உமது அதிசய வல்ல
17 மையை விளங்கப்பண்ணுகிறீர்.—நீர் உம்
முடைய சாட்சிகளை எனக்கு விரோதமாய்
இரட்டிக்கப்பண்ணுகிறீர்; என்மேல் உம்
முடைய கோபத்தை அதிகரிக்கப்பண்ணு
கிறீர்; போராட்டத்தின்மேல் போராட்டம்
அதிகரிக்கிறது.

18 நீர் என்னைக் கர்ப்பத்திலிருந்து புறப்ப
டப்பண்ணினது என்ன? ஒரு கண்ணும்
என்னைக் காணாதபடி, நான் அப்பொழுதே
19 ஜீவித்துப்போனால் நலமாமே.—நான் ஒருக்
காலும் இல்லாததுபோலிருந்து, கர்ப்பத்தி
லிருந்து பிரேதக்குழிக்குக் கொண்டுபோகப்
20 பட்டிருப்பேன்.—என் நாட்கள் கொஞ்ச
21 மல்லவோ?—காரிருளும் மரணாந்தகாரமு
மான இருண்ட தேசமும், இருள்சூழ்ந்த
ஒழுங்கில்லாத மரணாந்தகாரமுள்ள தேச
மும், ஒளியும் இருளாகும் தேசமுமாகிய,
போனால் திரும்பிவராத தேசத்துக்கு, நான்
22 போகுமுன்னே,—நான் சற்று இளைப்பாறும்
படி நீர் என்னைவிட்டு ஓய்ந்திரும் என்றான்.

**11** அப்பொழுது நாகமாத்தியனாகிய சோப்
2 பார் பிரதியுத்தரமாக:—ஏராளமான வார்த்
தைகளுக்கு உத்தரவு சொல்லவேண்டா
மோ? வாய்ச்சாலகன் நீதிமானாய் விளங்கு
3 வானோ?—உம்முடைய வீம்புவார்த்தை
களுக்கு மனுஷர் மவுனமாயிருப்பார்க
ளோ? நீர் பரியாசம்பண்ணும்போது, ஒரு
வரும் உம்மை வெட்கப்படுத்தவேண்
4 டாமோ?—என் சொல் சுத்தம் என்றும்,
நான் தேவரீருடைய பார்வைக்குத் துப்புர
வானவன் என்றும் நீர் சொல்லுகிறீர்.—
5 ஆனாலும் தேவன் பேசி, உமக்கு விரோத
மாய்த் தம்முடைய உதடுகளைத் திறந்து,—
6 உமக்கு ஞானத்தின் இரகசியங்களை வெளிப்
படுத்தினால் நலமாயிருக்கும்; உள்ளபடி

பார்த்தால், அது இரட்டிப்புள்ளதாயிருக்கிறது; ஆகையால் உம்முடைய அக்கிரமத்திற்கேற்றபடி தேவன் உம்மைத் தண்டிக்கவில்லையென்று அறிந்துகொள்ளும்.

7 தேவனுடைய அந்தரங்க ஞானத்தை நீர் ஆராய்ந்து, சர்வவல்லவருடைய சம் 8 பூரணத்தை நீர் அறியக்கூடுமோ?—அது வானபரியந்தம் உயர்ந்தது; உம்மால் என்ன ஆகும்? அது பாதாளத்திலும் ஆழமானது, நீர் அறியக்கூடியது என்ன?— 9 அதின் அளவு பூமியைப்பார்க்கிலும் நீளமும், சமுத்திரத்தைப்பார்க்கிலும் அகல 10 முமாயிருக்கிறது.— அவர் பிடித்தாலும், அவர் அடைத்தாலும், அவர் நியாயத்தில் கொண்டுவந்து நிறுத்தினாலும், அவரைத் 11 தடைபண்ணுகிறவன் யார்? — மனுஷருடைய மாயத்தை அவர் அறிவார்; அக்கிரமத்தை அவர் கண்டும், அதைக் கவனியா 12 திருப்பாரோ? — புத்தியில்லாத மனுஷன் காட்டுக் கழுதைக்குட்டிக்கு ஒப்பாகப் பிறந்திருந்தாலும், பெருநெஞ்சுள்ளவனாயிருக்கிறான்.

13 நீர் உம்முடைய இருதயத்தை ஆயத்தப்படுத்தி, உம்முடைய கைகளை அவருக்கு நேராக விரித்தால் நலமாயிருக்கும்.— 14 உம்முடைய கையிலே அக்கிரமம் இருந்தால், அதைத் தூரத்தில் அகற்றிவிட்டு, அநியாயம் உம்முடைய கூடாரங்களில் 15 வாசமாயிருக்கவொட்டாதிரும். — அப்பொழுது உம்முடைய முகத்தை மாசில்லாமல் ஏறெடுத்து, பயப்படாமல் திடன் 16 கொண்டிருப்பீர்.—அப்பொழுது நீர் வருத்தத்தை மறந்து, கடந்துபோன தண்ணீ 17 ரைப்போல அதை நினைப்பீர். — அப்பொழுது உம்முடைய ஆயுசுகாலம் பட்டப்பகலைப்பார்க்கிலும் பிரகாசமாயிருக்கும்; இருள் அடைந்த நீர் விடியற்காலத்தைப் 18 போலிருப்பீர்.—நம்பிக்கை உண்டாயிருக்கிறதினால் திடனாயிருப்பீர்; தோண்டி ஆராய்ந்து சுகமாய்ப் படுத்துக்கொள்வீர்.— 19 பயப்படுத்துவாரில்லாமல் நித்திரைசெய்வீர்; அநேகர் உமது முகத்தை நோக்கி 20 விண்ணப்பம்பண்ணுவார்கள்.—துன்மார்க்கருடைய கண்கள் பூத்துப்போய், அவர்கள் அடைக்கலம் அவர்களை விட்டொழிந்து, அவர்கள் நம்பிக்கை சாகிறவன் சுவாசம்போல் அழிந்துபோகும் என்றான்.

**12** 2 யோபு பிரதியுத்தரமாக:—ஆம், நீங்களே ஞானமுள்ள ஜனங்கள்; உங்களுடனே ஞானம் சாகும்.—உங்களைப்போல 3 எனக்கும் புத்தியுண்டு; உங்களிலும் நான் தாழ்ந்தவன் அல்ல; இப்படிப்பட்டவைகளை அறியாதவன் யார்?—என் சிநேகித 4 ரால் நான் நிந்திக்கப்பட்டு, தேவனை நோக்கிப் பிரார்த்திப்பேன்; அவர் எனக்கு மறுஉத்தரவு அருளுவார்; உத்தமனாகிய நீதிமான் பரியாசம்பண்ணப்படுகிறான்.—ஆ 5 பத்துக்குள்ளானவன் சுகமாயிருக்கிறவனுடைய நினைவில் இகழ்ச்சியடைகிறான்; கால்இடறினவர்களுக்கு இது நேரிடும்.

கள்ளருடைய கூடாரங்களில் செல்வ 6 முண்டு; தேவனைக் கோபப்படுத்துகிறவர்களுக்குச் சாங்கோபாங்கமுண்டு; அவர்கள் கையிலே தேவன் கொண்டுவந்து கொடுக்கிறார்.—இப்போதும் நீ மிருகங்க 7 ளைக் கேட்டுப்பார், அவைகள் உனக்குப் போதிக்கும்; ஆகாயத்துப் பறவைகளைக் கேள், அவைகள் உனக்கு அறிவிக்கும்.— அல்லது பூமியை விசாரித்துக் கேள், அது 8 உனக்கு உபதேசிக்கும்; சமுத்திரத்தின் மச்சங்களைக் கேள், அவைகள் உனக்கு விவரிக்கும்.—கர்த்தருடைய கரம் இதைச் 9 செய்ததென்று இவைகளெல்லாவற்றினாலும் அறியாதவன் யார்? — சகல பிராணி 10 களின் ஜீவனும், மாம்சமான சகல மனுஷரின் ஆவியும் அவர் கையிலிருக்கிறது.

வாயானது போஜனத்தைருசிபார்க்கிறது 11 போல, செவியானது வார்த்தைகளைச் சோதித்துப்பார்க்கிறதல்லவா?—முதியோரிடத் 12 தில் ஞானமும் வயதுசென்றவர்களிடத்தில் புத்தியும் இருக்குமே.—அவரிடத்தில் ஞா 13 னமும் வல்லமையும் எத்தனை அதிகமாய் இருக்கும்? அவருக்குத்தான் ஆலோசனையும் புத்தியும் உண்டு.—இதோ, அவர் இடித் 14 தால் கட்டமுடியாது; அவர் மனுஷனை அடைத்தால் விடுவிக்கமுடியாது.—இதோ, 15 அவர் தண்ணீர்களை அடக்கினால் எல்லாம் உலர்ந்துபோம்; அவர் அவைகளை வரவிட்டால்,பூமியைக்கீழதுமேலதாக்கும்.—அவரி 16 டத்தில்பெலனும்ஞானமுமுண்டு; மோசம்போகிறவனும் மோசம்போக்குகிறவனும், அவர்கையின்கீழிருக்கிறார்கள்.—அவர் ஆ 17 லோசனைக்காரரைச் சிறைபிடித்து, நியாயாதிபதிகளை மதிமயக்குகிறார்.—அவர் ராஜாக் 18 களுடைய கட்டுகளை அவிழ்த்து, அவர்கள் இடுப்புகளைக் கச்சை கட்டுகிறார்.—அவர் 19 மந்திரிகளைச்சிறைபிடித்துக்கொண்டுபோய், பெலவான்களைக் கவிழ்த்துப்போடுகிறார்.— அவர் நம்பிக்கையுள்ளவர்களுடைய வா 20 க்கை விலக்கி, முதிர்வயதுள்ளவர்களின்

21 ஆலோசனையை வாங்கிப்போடுகிறார்.—அவர் பிரபுக்களின்மேல் இகழ்ச்சிவரப்பண்ணுகிறார்; பலவான்களின் கச்சையைத் தளர்ந்துபோகப்பண்ணுகிறார்.— 22 அவர் அந்தகாரத்திலிருக்கிற ஆழங்களை வெளியரங்கமாக்கி, மரண இருளை வெளிச்சத்தில் கொண்டுவருகிறார்.— 23 அவர் ஜாதிகளைப் பெருகவும் அழியவும் பண்ணுகிறார்; அவர் ஜாதிகளைப் பரவவும் குறுகவும் பண்ணுகிறார்.— 24 அவர் பூமியிலுள்ள ஜனத்தினுடைய அதிபதிகளின் நெஞ்சை அகற்றிப்போட்டு, அவர்களை வழியில்லாத அந்தரத்திலே அலையப்பண்ணுகிறார்.— 25 அவர்கள் வெளிச்சமற்ற இருளிலே தடவித் திரிகிறார்கள்; வெறித்தவர்களைப்போல அவர்களைத் தடுமாறித் திரியப்பண்ணுகிறார்.

13 இதோ, இவைகளெல்லாவற்றையும் என் கண் கண்டு, என் காது கேட்டு அறிந்திருக்கிறது. — 2 நீங்கள் அறிந்திருக்கிறதை நானும் அறிந்திருக்கிறேன்; நான் உங்களுக்குத் தாழ்ந்தவன் அல்ல.

3 சர்வவல்லவரோடே நான் பேசினால் நல்லது; தேவனோடே நியாயத்திற்காக வழக்காட விரும்புவேன்.— 4 நீங்கள் பொய்யைப் பிணைக்கிறவர்கள்; நீங்கள் எல்லாரும் காரியத்துக்குதவாத வைத்தியர்கள்.— 5 நீங்கள் பேசாமலிருந்தால் நலமாகும்; அது உங்களுக்கு ஞானமாயிருக்கும்.

6 நீங்கள் என் நியாயத்தைக் கேட்டு, என் உதடுகள் சொல்லும் விசேஷங்களைக் கவனியுங்கள்.— 7 நீங்கள் தேவனுக்காக நியாயக்கேடாய்ப் பேசி, அவருக்காக வஞ்சகமாய் வசனிக்கவேண்டுமோ?— 8 அவருக்கு முகதாட்சிணியம்பண்ணுவீர்களோ? தேவனுக்காக வழக்காடுவீர்களோ?— 9 அவர் உங்களை ஆராய்ந்துபார்த்தால் அது உங்களுக்கு நலமாயிருக்குமோ? மனுஷனைப் பரியாசம்பண்ணுகிறதுபோல அவரைப் பரியாசம்பண்ணுவீர்களோ?— 10 நீங்கள் அந்தரங்கமாய் முகதாட்சிணியம்பண்ணினால், அவர் உங்களை எவ்விதத்திலும் கண்டிப்பார்.— 11 அவருடைய மகத்துவம் உங்களைத் திடுக்கிடப்பண்ணாதோ? அவருடைய பயங்கரம் 12 உங்களைப் பிடிக்கமாட்டாதோ?—உங்கள் பேரை நினைக்கப்பண்ணும் அடையாளங்கள் சாம்பலுக்குச் சரி; உங்கள் மேட்டிமைகள் சேற்றுக் குவியல்களுக்குச் சமானம்.

13 நீங்கள் மவுனமாயிருங்கள், நான் பேசுகிறேன், எனக்கு வருகிறது வரட்டும்.— 14 நான் என் பற்களினால் என் சதையைப் பிடுங்கி, என் பிராணனை என் கையிலே வைப்பானேன்?— 15 அவர் என்னைக் கொன்றுபோட்டாலும், அவர்மேல் நம்பிக்கையாயிருப்பேன்; ஆனாலும் என் வழிகளை அவருக்கு முன்பாக ரூபகாரம்பண்ணுவேன்.— 16 அவரே என் இரட்சிப்பு; மாயக்காரனோ அவர் சந்நிதியில் சேரான்.— 17 என் வசனத்தையும், நான் சொல்லிக் காண்பிக்கிறதையும், உங்கள் செவிகளால் கவனமாய்க் கேளுங்கள்.— 18 இதோ, என் நியாயங்களை அணியணியாக வைத்தேன்; என் நீதி விளங்கும் என்று அறிவேன்.— 19 என்னோடே வழக்காடவேண்டுமென்று இருக்கிறவன் யார்? நான் மவுனமாயிருந்தால் ஜீவித்துப்போவேனே.

20 இரண்டு காரியங்களைமாத்திரம் எனக்குச் செய்யாதிருப்பீராக; அப்பொழுது உமது முகத்துக்கு முன்பாக ஒளித்துக்கொள்ளாதிருப்பேன்.— 21 உம்முடைய கையை என்னைவிட்டுத் தூரப்படுத்தும்; உம்முடைய பயங்கரம் என்னைக் கலங்கப்பண்ணாதிருப்பதாக.— 22 நீர் கூப்பிடும், நான் உத்தரவு கொடுப்பேன்; அல்லது நான் பேசுவேன்; நீர் எனக்கு மறுமொழி சொல்லும். — 23 என் அக்கிரமங்களும் பாவங்களும் எத்தனை? என் மீறுதலையும் என் பாவத்தையும் எனக்கு உணர்த்தும்.— 24 நீர் உமது முகத்தை மறைத்து, என்னை உமக்குப் பகைஞனாக எண்ணுவானேன்?— 25 காற்றடித்த சருகை நொறுக்குவீரோ? காய்ந்துபோன துரும்பைப் பின்தொடருவீரோ?— 26 மகா கசப்பான தீர்ப்புகளை என்பேரில் எழுதுகிறீர்; என் சிறுவயதின் அக்கிரமங்களை எனக்குப் பலிக்கப்பண்ணுகிறீர்.— 27 என் கால்களைத் தொழுவடித்துப்போட்டு, என் வழிகளையெல்லாம் காவல்பண்ணுகிறீர்; என் காலடிகளில் அடையாளத்தைப் போடுகிறீர். — 28 இப்படிப்பட்டவன் அழுகிப்போகிற வஸ்துபோலவும், பொட்டரித்த வஸ்திரம்போலவும் அழிந்துபோவான்.

14 ஸ்திரீயினிடத்தில் பிறந்த மனுஷன் வாழ்நாள் குறுகினவனும் சஞ்சலம் நிறைந்தவனுமாயிருக்கிறான்.— 2 அவன் பூவைப் போலப் பூத்து அறுப்புண்கிறான்; நிழலைப் போல நிலைநிற்காமல் ஓடிப்போகிறான்.— 3 ஆகிலும் இப்படிப்பட்டவன்மேல் நீர் உம்முடைய கண்களைத் திறந்துவைத்து, உம்முடைய நியாயத்துக்கு என்னைக் கொண்டுபோவீரோ?— 4 அசுத்தமானதிலிருந்து சுத்தமானதைப் பிறப்பிக்கத்தக்கவன் உண்

5 டோ? ஒருவனுமில்லை.—அவனுடைய நாட்கள் இம்மாத்திரம் என்று குறிக்கப்பட்டிருக்கையால், அவனுடைய மாதங்களின் தொகை உம்மிடத்தில் இருக்கிறது; அவன் கடந்துபோகக்கூடாத எல்லையை அவ 6 னுக்கு ஏற்படுத்தினீர்.—அவன் ஒரு கூலிக்காரனைப்போல் தன் நாளின் வேலையாயிற்று என்று ரம்மியப்படுமட்டும் அவன் ஓய்ந்திருக்கும்படி உமது பார்வையை அவனை விட்டு விலக்கும்.

7 ஒரு மரத்தைக்குறித்தாவது நம்பிக்கையுண்டு; அது வெட்டிப்போடப்பட்டாலும் திரும்பத் தழைக்கும், அதின் இளங்கிளை 8 கள் துளிர்க்கும்;—அதின் வேர் தரையிலே பழையதாகி, அதின் அடிக்கட்டை மண் 9 ணிலே செத்தாலும்,—தண்ணீரின் வாசனையினால் அது துளிர்த்து, இளமரம்போலக் 10 கிளைவிடும்.—மனுஷனோவென்றால் செத்தபின் ஒழிந்துபோகிறான், மனுபுத்திரன் ஜீவித்துப்போனபின் அவன் எங்கே?

11 தண்ணீர் ஏரியிலிருந்து வடிந்து, வெள்ளம் வற்றிச் சுவறிப்போகிறதுபோல,— 12 மனுஷன் படுத்துக்கிடக்கிறான், வானங்கள் ஒழிந்துபோகுமளவும் எழுந்திருக்கிறதும் இல்லை, நித்திரைதெளிந்து விழிக்கிறதும் இல்லை.

13 நீர் என்னைப் பாதாளத்தில் ஒளித்து, உமது கோபம் தீருமட்டும் என்னை மறைத்து, என்னைத் திரும்ப நினைக்கும்படிக்கு எனக்கு ஒரு காலத்தைக் குறித்தால் நலமா 14 யிருக்கும்.—மனுஷன் செத்தபின் பிழைப்பானோ? எனக்கு மாறுதல் எப்போது வருமென்று எனக்குக் குறிக்கப்பட்ட போராட்டத்தின் நாளெல்லாம் நான் காத்திருக்கிறேன்.

15 என்னைக் கூப்பிடும், அப்பொழுது நான் உமக்கு உத்தரவு சொல்லுவேன்; உமது கைகளின் கிரியையின்மேல் விருப்பம் 16 வைப்பீராக.—இப்பொழுது என் நடைகளை எண்ணுகிறீர்; என் பாவத்தின்மேலல் 17 லவோ கவனமாயிருக்கிறீர்.—என் மீறுதல் ஒரு கட்டாகக் கட்டப்பட்டு முத்திரைபோடப்பட்டிருக்கிறது, என் அக்கிரமத்தை ஒருமிக்கச் சேர்த்தீர்.

18 மலைமுதலாய் விழுந்து கரைந்துபோம்; கன்மலை தன் இடத்தைவிட்டுப் பேர்ந்து 19 போம்.—தண்ணீர் கற்களைக் குடையும்; ஜலப்பிரவாகம் பூமியின் தூளில் முளைத்ததை மூடும்; அப்படியே மனுஷன் கொண்டிருக்கும் நம்பிக்கையை அழிக்கிறீர்.— 20 நீர் என்றைக்கும் அவனைப் பெலனாய் நெருக்குகிறதினால் அவன் போய்விடுகிறான்; அவன் முகரூபத்தைமாறப்பண்ணி அவனை 21 அனுப்பிவிடுகிறீர்.—அவன் பிள்ளைகள் கனமடைந்தாலும் அவன் உணரான்; அவர்கள் சிறுமைப்பட்டாலும் அவர்களைக் கவ 22 னியான்.—அவன் மாம்சம் அவனிலிருக்குமளவும் அதற்கு நோவிருக்கும்; அவன் ஆத்துமா அவனுக்குள்ளிருக்குமட்டும் அதற்குத் துக்கமுண்டு என்றான்.

15 அப்பொழுது தேமானியனாகிய எலிப்பாஸ் பிரதியுத்தரமாக:— 2 ஞானவான் காற்றைப்போன்ற நியாயங்களைச் சொல்லி, தன் வயிற்றைக் கொண்டல்காற்றினால் நிரப்பி,— 3 பிரயோஜனமில்லாத வார்த்தைகளாலும், உபயோகமில்லாத வசனங்களாலும் தர்க்கிக்கலாமோ?— 4 நீர் பயபக்தியை வீணென்று சொல்லி, தேவனுக்கு முன்பாக ஜெபத்தியானத்தைக் குறையப்பண்ணுகிறீர்.— 5 உம்முடைய வாய் உம்முடைய அக்கிரமத்தைச் சொல்லிக் காட்டுகிறது; நீர் தந்திரமுள்ளவர்களின் நாவைத் தெரிந்துகொண்டீர்.— 6 நான் அல்ல, உம்முடைய வாயே உம்மைக் குற்றவாளி என்று தீர்க்கிறது; உம்முடைய உதடுகளே உமக்கு விரோதமாய்ச் சாட்சியிடுகிறது.

7 மனுஷரில் முந்திப் பிறந்தவர் நீர்தானோ? பர்வதங்களுக்குமுன்னே உருவாக்கப்பட்டீரோ?— 8 நீர் தேவனுடைய இரகசிய ஆலோசனையைக் கேட்டு, ஞானத்தை உம்மிடமாய்ச் சேர்த்துக்கொண்டீரோ?— 9 நாங்கள் அறியாத எந்தக் காரியத்தை நீர் அறிந்திருக்கிறீர்? எங்களுக்கு விளங்காத எந்தக் காரியமாவது உமக்கு விளங்கியிருக்கிறதோ?— 10 உம்முடைய தகப்பனைப் பார்க்கிலும் பெரிய வயதுள்ள நரைத்தோரும் விருத்தாப்பியரும் எங்களுக்குள் இருக்கிறார்களே.— 11 தேவன் அருளிய ஆறுதல்களும், உம்மோடே சொல்லப்படுகிற மிருதுவான பேச்சும் உமக்கு அற்பகாரியமாயிருக்கிறதோ?

12 உம்முடைய இருதயம் உம்மை எங்கே கொண்டுபோகிறது? உம்முடைய கண்கள் நெறித்துப்பார்க்கிறது என்ன?— 13 தேவனுக்கு விரோதமாக உம்முடைய ஆவியை எழுப்பி, உம்முடைய வாயிலிருந்து வசனங்களைப் புறப்படப்பண்ணுகிறீர்.— 14 மனுஷனானவன் பரிசுத்தமாயிருக்கிறதற்கும், ஸ்திரீயினிடத்தில் பிறந்தவன் நீதிமானாயிருக்கிறதற்கும், அவன் எம்மாத்திரம்?—

5 இதோ, தம்முடைய பரிசுத்தவான்களையும் அவர் நம்புகிறதில்லை; வானங்களும் அவர் பார்வைக்குச் சுத்தமானவைகள் அல்ல.—
16 அநியாயத்தைத் தண்ணீரைப்போலக் குடிக்கிற மனுஷன் எத்தனை அதிகமாய் அருவருப்பும் அசுத்தமுமாயிருக்கிறான்?
17 உமக்குக் காரியத்தைத் தெரியப்பண்ணுவேன், என்னைக் கேளும்; நான் கண்டதை உமக்கு விவரித்துச் சொல்லுவேன்.—
18 ஞானிகள் தங்கள் பிதாக்கள் சொல்லக் கேட்டு மறைக்காமல் அறிவித்ததையே
19 நான் சொல்லுவேன்.—அவர்களுக்குமாத்திரம் பூமி அளிக்கப்பட்டது; அந்நியர் அவர்கள் நடுவே கடந்துபோக இடமி
20 ல்லை. — துன்மார்க்கன் உயிரோடிருக்கிற நாளெல்லாம் துன்பத்தால் வாதிக்கப்படுகிறான்; பலவந்தம்பண்ணுகிறவனுக்கு அவன் வருஷங்களின் தொகை மறைக்
21 கப்பட்டிருக்கிறது.—பயங்கரமான சத்தம் அவன் காதுகளில் தொனிக்கிறது; அவன் சமாதானமாயிருக்கையில் பாழாக்கிறவன்
22 அவன்மேல் வருவான். — இருளிலிருந்து திரும்பிவர அவனுக்கு நம்பிக்கையில்லாமல், பதிவிருக்கிறவர்களின் பட்டயத்துக்கு
23 அவன் பயப்படுகிறான்.—அப்பம் எங்கே -க்கும் என்று அவன் அலைந்து திரிகி · அந்தகாரநாள் தனக்குச் சமீபித்தி
24 ருக்கிறதை அறிவான்.—இக்கட்டும் நெருக்கமும் அவனைக் கலங்கப்பண்ணி, யுத்தசன்னத்தனான ராஜாவைப்போல அவனை
25 மேற்கொள்ளும். — அவன் தேவனுக்கு விரோதமாகக் கைநீட்டி, சர்வவல்லவருக்கு விரோதமாகப் பராக்கிரமம் பாராட்டு
26 கிறான்.—கடினக்கழுத்தோடும், பருத்த குமிழுள்ள தன் கேடயங்களோடும் அவருக்கு
27 எதிராக ஓடுகிறான்.—அவன் முகத்தைக் கொழுப்பு மூடியிருக்கிறது; அடிவயிறு
28 தொங்கிவிட்டிருக்கிறது. — ஆனாலும் பாழான பட்டணங்களிலும், குடிபோன கற்குவியலான வீடுகளிலும் வாசம்பண்ணு
29 வான்.—அவன் ஐசுவரியவானாவதுமில்லை, அவன் ஆஸ்தி நிலைப்பதுமில்லை; அப்படிப்பட்டவர்களின் செல்வம் பூமியில் நீடித்தி
30 ருப்பதில்லை. இருளுக்கு அவன் தப்புவதில்லை; அக்கினி ஜுவாலை அவனுடைய கிளையைக் காய்ந்துபோகப்பண்ணும்; அவருடைய வாயின் சுவாசத்தால் அற்றுப்போ
31 வான்.—வழிதப்பினவன் மாயையை நம்பானாக; நம்பினால் மாயையே அவன் பல
32 னாயிருக்கும்.—அது அவன் நாள் வருமுன்னே அவனுக்குப் பூரணமாய்ப் பலிக்கும்; அவனுடைய கொப்புப் பச்சைகொள்வதில்லை.—பிஞ்சுகள் உதிர்ந்துபோகிற திராட் 33
சச்செடியைப்போலவும், பூக்கள் உதிர்ந்துபோகிற ஒலிவமரத்தைப்போலவும் அவன் இருப்பான். — மாயக்காரரின் கூட்டம் 34
வெறுமையாய்ப் போம்; பரிதானம் வாங்கினவர்களின் கூடாரங்களை அக்கினி பட்சிக்கும்.—அப்படிப்பட்டவன் அநியாயத் 35
தைக் கர்ப்பந்தரித்து அக்கிரமத்தைப் பெறுகிறான்; அவர்கள் கர்ப்பம் மாயையைப் பிறப்பிக்கும் என்றான்.

அதற்கு யோபு பிரதியுத்தரமாக:— 16
இப்படிப்பட்ட அநேகங் காரியங்களை 2
நான் கேட்டிருக்கிறேன்; நீங்கள் எல்லாரும் அலட்டுண்டாக்குகிற தேற்றரவாளர்.—காற்றைப்போன்ற வார்த்தைகளுக்கு 3
முடிவிராதோ? இப்படி நீ உத்தரவு சொல்ல உனக்குத் துணிவு உண்டானதென்ன?—
உங்களைப்போல நானும் பேசக்கூடும்; 4
நான் இருக்கும் நிலைமையில் நீங்கள் இருந்தால், நான் உங்களுக்கு விரோதமாக வார்த்தைகளைக் கோத்து, உங்களுக்கு எதிரே என் தலையைத் துலுக்கவுங்கூடும்?—
ஆனாலும் நான் என் வாயினால் உங்களுக் 5
குத் திடன் சொல்லுவேன்; என் உதடுகளின் அசைவு உங்கள் துக்கத்தை ஆற்றும்.

நான் பேசினாலும் என் துக்கம் ஆறாது; 6
நான் பேசாமலிருந்தாலும் எனக்கு என்ன ஆறுதல்?—இப்போது அவர் என்னை இளைத் 7
துப்போகச் செய்தார்; என் கூட்டத்தையெல்லாம் பாழாக்கினீர்.—நீர் என்னைச் 8
சுருங்கிப்போகப்பண்ணினது அதற்குச் சாட்சி; என் மெலிவு என்னில் அத்தாட்சியாக நின்று, என் முகத்துக்கு முன்பாக உத்தரவு சொல்லும்.—என்னைப் பகைக் 9
கிறவனுடைய கோபம் என்னைப் பீறுகிறது, என்பேரில் பற்கடிக்கிறான்; என் சத்துரு கொடிய கண்ணினால் என்னைப் பார்க்கிறான்.—எனக்கு விரோதமாகத் தங் 10
கள் வாயை விரிவாய்த் திறந்தார்கள்; நிந்தையாக என்னைக் கன்னத்தில் அடித்தார்கள்; எனக்கு விரோதமாக ஏகமாய்க் கூட்டங்கூடினார்கள்.

தேவன் என்னை அநியாயக்காரன் வச 11
மாக ஒப்புவித்து, துன்மார்க்கரின் கையில் என்னை அகப்படப்பண்ணினார். — நான் 12
சுகமாய் வாழ்ந்திருந்தேன்; அவர் என்னை நருக்கி, என் பிடரியைப் பிடித்து, என்னை

நொறுக்கி, என்னைத் தமக்கு இலக்காக
13 நிறுத்தினார். — அவருடைய வில்லாளர்
என்னைச் சூழ்ந்துகொண்டார்கள்; என்
இரலைத் தப்பவிடாமல் பிளந்தார்; என்
14 பிச்சைத் தரையில் ஊற்றிவிட்டார்.—நொ
றுக்குதலின்மேல் நொறுக்குதலை என்மேல்
வரப்பண்ணினார்; பராக்கிரமசாலியைப்
15 போல என்மேல் பாய்ந்தார்.—நான் இரட்
டுச்சேலையைத் தைத்து, என் தோளின்
மேல் போர்த்துக்கொண்டேன்; என் மகி
மையைப் புழுதியிலே போட்டுவிட்டேன்.-
16 அழுகிறதினால் என் முகம் அழுக்கடைந்
தது; மரண இருள் என் கண்ணிமைகளின்
17 மேல் உண்டாயிருக்கிறது.—என் கைகளி
லே கொடுமையில்லாதிருக்கையிலும், என்
ஜெபம் சுத்தமாயிருக்கையிலும், அப்படி
யாயிற்று.

18 பூமியே, என் இரத்தத்தை மூடிப்போ
டாதே; என் அலறுதலுக்கு மறைவிடம்
19 உண்டாகாதிருப்பதாக.—இப்போதும்
இதோ, என் சாட்சி பரலோகத்திலிருக்கி
றது, எனக்குச் சாட்சி பகருகிறவர் உன்
20 னதங்களில் இருக்கிறார். — என் சிநேகி
தர் என்னைப் பரியாசம்பண்ணுகிறார்கள்;
என் கண் தேவனை நோக்கிக் கண்ணீர்
21 சொரிகிறது. — ஒரு மனுபுத்திரன் தன்
சிநேகிதனுக்காக வழக்காடுகிறதுபோல,
தேவனோடே மனுஷனுக்காக வழக்காடு
கிறவர் ஒருவர் உண்டானால் நலமாயிருக்
22 கும்.—குறுகின வருஷங்களுக்கு முடிவு
வருகிறது; நான் திரும்பிவராத வழியே
போவேன்.

**17** என் சுவாசம் ஒழிகிறது, என் நாட்கள்
முடிகிறது; பிரேதக்குழி எனக்கு ஆயத்த
மாயிருக்கிறது.

2 பரியாசம்பண்ணுகிறவர்கள் என்னிடத்
தில் இல்லையோ? அவர்கள் செய்யும் அநி
யாயங்களை என் கண் பார்த்துக்கொண்
3 டிருக்கிறது.—தேவரீர் என் காரியத்தை
மேல்போட்டுக்கொண்டு, எனக்காகப்
பிணைப்படுவீராக; வேறே யார் எனக்குக்
4 கைகொடுக்கத்தக்கவர்? — நீர் அவர்கள்
இருதயத்துக்கு ஞானத்தை மறைத்தீர்;
ஆகையால் அவர்களை உயர்த்தாதிருப்பீர்.-
5 எவன் தன் சிநேகிதருக்குக் கேடாகத்
துரோகம் பேசுகிறானோ, அவன் பிள்ளைக
ளின் கண்களும் பூத்துப்போகும்.

6 ஜனங்களுக்குள்ளே அவர் என்னைப் பழ
மொழியாக வைத்தார்; அவர்கள் முகத்
துக்குமுன் நான் அருவருப்பானேன்.—
இதினிமித்தம் என் கண்கள் சஞ்சலத்தி 7
னால் இருளடைந்தது; என் அவயவங்க
ளெல்லாம் நிழலைப்போலிருக்கிறது.—சன் 8
மார்க்கர் இதற்காகப் பிரமிப்பார்கள்; குற்
றமில்லாதவன் மாயக்காரனுக்கு விரோத
மாக எழும்புவான்.-நீதிமான் தன் வழியை 9
உறுதியாய்ப் பிடிப்பான்; சுத்தமான கைக
ளுள்ளவன் மேன்மேலும் பலத்துப்போ
வான்.—இப்போதும் நீங்கள் எல்லாரும் 10
போய்வாருங்கள்; உங்களில் ஞானமுள்ள
ஒருவனையும் காணேன்.

என் நாட்கள் போயிற்று; என் இருத 11
யத்தில் எனக்கு உண்டாயிருந்த சிந்தனை
கள் அற்றுப்போயிற்று.—அவைகள் இர 12
வைப் பகலாக்கிற்று; இருளை வெளிச்சம்
தொடர்ந்துவரும் என்று எண்ணச்செய்
தது.—அப்படி நான் காத்துக்கொண்டி 13
ருந்தாலும், பாதாளம் எனக்கு வீடாயிருக்
கும்; இருளில் என் படுக்கையைப் போ
டுவேன்.—அழிவைப் பார்த்து, நீ எனக்குத் 14
தகப்பன் என்கிறேன்; புழுக்களைப் பார்த்து,
நீங்கள் எனக்குத் தாயும் எனக்குச் சகோ
தரியும் என்கிறேன்.— என் நம்பிக்கை 15
இப்போது எங்கே? நான் நம்பியிருந்த
தைக் காண்பவன் யார்? — அது பாதா 16
ளத்தின் காவலுக்குள் இறங்கும்; அப்
போது தூளில் ஏகமாய் இளைப்பாறுவோம்
என்றான்.

அப்பொழுது சூகியனான பில்தாத் பிர **18**
தியுத்தரமாக:—நீங்கள் எந்தமட்டும் பேச் 2
சுகளை முடிக்காதிருப்பீர்கள்? புத்திமான்க
ளாயிருங்கள்; நாங்களும் பேசட்டும்.—
நாங்கள் மிருகங்களைப்போல எண்ணப் 3
பட்டு, உங்கள் பார்வைக்குத் தீழ்ப்பான
வர்களாயிருப்பானேன்? — கோபத்தினால் 4
உம்மைத்தானே பீறுகிற உமது நிமித்தம்
பூமி பாழாய்ப்போகுமோ? கன்மலை தன்
னிடத்தைவிட்டுப் பேருமோ?

துன்மார்க்கனுடைய விளக்கு அணைந் 5
துபோம்; அவன் அடுப்பின் நெருப்பும்
அவிந்துபோம்.—அவன் கூடாரத்தில் வெ 6
ளிச்சம் அந்தகாரப்படும்; அவன் விளக்கு
அவனுடனே அணைந்துபோம். — அவன் 7
பெலனாய் நடந்த நடைகள் குறைந்து
போம்; அவன் ஆலோசனை அவனை விழப்
பண்ணும். — அவன் தன் கால்களினால் 8
வலையில் அகப்பட்டு, வலைச்சிக்கலிலே
நடக்கிறான்.—கண்ணி அவன் குதிகாலைப் 9
பிடிக்கும்; பறிகாரர் அவனை மேற்கொள்
வார்கள்.—அவனுக்காகச் சுருக்கு தரையி 10

னும், அவனுக்காகக் கண்ணி வழியிலும்
11 வைக்கப்பட்டிருக்கிறது. — சுற்றிலுமிருந்
துண்டாகும் பயங்கரங்கள் அவனைத் திடுக்
கிடப்பண்ணி, அவன் கால்களைத் திசை
12 தெரியாமல் அலையப்பண்ணும்.—அவன்
பெலனைப் பட்டினி தின்றுபோடும்; அவன்
பக்கத்தில் கேடு ஆயத்தப்பட்டு நிற்கும்.—
13 அது அவன் அங்கத்தின் பலத்தைப் பட்
சிக்கும்; பயங்கரமான மரணமே அவன்
14 அவயவங்களைப் பட்சிக்கும்.—அவன் நம்
பிக்கை அவன் கூடாரத்திலிருந்து வேரோ
டே பிடுங்கப்படும்; அது அவனைப் பயங்
15 கர ராஜாவினிடத்தில் துரத்தும்.—அவ
னுக்கு ஒன்றுமில்லாமற்போனதினால், பய
ங்கரம் அவன் கூடாரத்தில் குடியிருக்கும்;
கந்தகம் அவன் வாசஸ்தலத்தின்மேல் தெ
16 ளிக்கப்படும். — கீழே இருக்கிற அவன்
வேர்கள் அழிந்துபோகும்; மேலே இருக்
17 கிற அவன் கிளைகள் பட்டுப்போகும்.—அவ
னை நினைக்கும் நினைப்புப் பூமியிலிருந்தழி
யும், வீதிகளில் அவன் பேரில்லாமற்போ
18 கும்.—அவன் வெளிச்சத்திலிருந்து இரு
ளில் துரத்திவிடப்பட்டு, பூலோகத்திலி
19 ருந்து தள்ளுண்டுபோவான்.-அவன் ஜனத்
துக்குள்ளே அவனுக்குப் புத்திரனும் இல்லை
பௌத்திரனும் இல்லை; அவன் வீட்டில்
மீதியாயிருக்கத்தக்கவன் ஒருவனும் இல்
20 லை.—அவன் காலத்தோர் அவன் நாளுக்
காகத் திடுக்கிட்டதுபோல, பின்னடியா
21 ரும் பிரமிப்பார்கள். — அக்கிரமக்காரன்
குடியிருந்த ஸ்தானங்கள் இவைகள்தான்;
தேவனை அறியாமற்போனவனுடைய ஸ்த
லம் இதுவே என்பார்கள் என்றான்.

**19** யோபு பிரதியுத்தரமாக:
2 நீங்கள் எந்தமட்டும் என் ஆத்துமாவை
வருத்தப்படுத்தி, வார்த்தைகளினால் என்னை
3 நொறுக்குவீர்கள்? — இப்போது பத்து
தரம் என்னை நிந்தித்தீர்கள்; நீங்கள் எனக்
குக் கடினமுகம் காண்பிக்கிறதினால் உங்
4 களுக்கு வெட்கமில்லை.—நான் தப்பிநடந்
தது மெய்யானாலும், என் தப்பிதம் என்
5 னோடேதான் இருக்கிறது.—நீங்கள் என
க்கு விரோதமாகப் பெருமைபாராட்டி,
எனக்கு நிந்தையாக என்னைக் கடிந்துகொ
ள்ளவேண்டும் என்றிருப்பீர்களாகில்,—
6 தேவன் என்னைக் கவிழ்த்து, தம்முடைய
வலையை என்மேல் வீசினார் என்று அறி
7 யுங்கள்.—இதோ, கொடுமை என்று கூப்
பிடுகிறேன், கேட்பார் ஒருவரும் இல்லை;
கூக்குரலிடுகிறேன், நியாயவிசாரணை இல்
லை.—நான் கடந்துபோகக்கூடாதபடிக்கு 8
அவர் என் பாதையை வேலியடைத்து,
என் வழிகளை இருளாக்கிவிட்டார்.—என் 9
னிலிருந்த என் மகிமையை அவர் உரிந்து
கொண்டு, என் சிரசின் கிரீடத்தை எடுத்
துப்போட்டார். — அவர் என்னை நான்கு 10
புறத்திலும் நாசமாக்கினார், நான் அற்றுப்
போகிறேன்; என் நம்பிக்கையை ஒரு
செடியைப்போலப் பிடுங்கிப்போட்டார்.—
அவர் தமது கோபத்தை என்மேல் எரி 11
யப்பண்ணினார்; என்னைத் தம்முடைய
சத்துருக்களில் ஒருவனாக எண்ணிக்கொள்
ளுகிறார்.—அவருடைய தண்டுப் படைகள் 12
ஏகமாய் வந்து, எனக்கு விரோதமாய்த்
தங்கள் வழியை உயர்த்தி, என் கூடா
ரத்தைச் சுற்றிப் பாளயமிறங்குகிறார்
கள்.—என் சகோதரரை என்னைவிட்டுத் 13
தூரப்படுத்தினார்; எனக்கு அறிமுகமான
வர்கள் எனக்கு அந்நியராய்ப்போனார்கள்.-
என் பந்துஜனங்கள் விலகிப்போனார்கள்; 14
என் சிநேகிதர் என்னை மறந்துவிட்டார்
கள்.—என் வீட்டு ஜனங்களும், என் வே 15
லைக்காரிகளும், என்னை அந்நியனாக எண்
ணுகிறார்கள்; அவர்கள் பார்வைக்கு நான்
பரதேசியானேன்.—நான் என் வேலைக்கார 16
னைக் கூப்பிடுகிறபோது அவன் எனக்கு
உத்தரவுகொடான்; என் வாயினால் நான்
அவனைக் கெஞ்சவேண்டியதாயிற்று.—என் 17
சுவாசம் என் மனைவிக்கு வேறுபட்டிருக்
கிறது; என் கர்ப்பத்தின் பிள்ளைகளுக்கா
கப் பரிதபிக்கிறேன். — சிறுபிள்ளைகளும் 18
என்னை அசட்டைபண்ணுகிறார்கள்; நான்
எழுந்தால், அவர்கள் எனக்கு விரோத
மாய்ப் பேசுகிறார்கள்.—என் பிராண சிநே 19
கிதர் எல்லாரும் என்னை வெறுக்கிறார்கள்;
நான் சிநேகித்தவர்கள் எனக்கு விரோதிக
ளானார்கள்.—என் எலும்புகள் என் தோ 20
லோடும் என் மாம்சத்தோடும் ஒட்டிக்
கொண்டிருக்கிறது; என் பற்களை மூடக்
கொஞ்சம் தோல்மாத்திரம் தப்பினது.—
என் சிநேகிதரே, எனக்கு இரங்குங்கள், 21
எனக்கு இரங்குங்கள்; தேவனுடைய கை
என்னைத் தொட்டது. — தேவனைப்போல 22
நீங்களும் என்னைத் துன்பப்படுத்துவா
னேன்? என் மாம்சம் பட்சிக்கப்பட்டா
லும் நீங்கள் திருப்தியற்றிருக்கிறதென்ன?
ஆ, நான் இப்பொழுது சொல்லும் வார் 23
த்தைகள் எழுதப்பட்டால் நலமாயிருக்
கும்; அவைகள் ஒரு புஸ்தகத்தில் வரை
யப்பட்டு,—அல்லது என்றைக்கும் நிலை 24

க்க அவைகள் கருங்கல்லிலே உளிவெட்
டாகவும் இய எழுத்தாகவும் பதிந்தால்
25 நலமாயிருக்கும்.—என் மீட்பர் உயிரோ
டிருக்கிறார் என்றும், அவர் கடைசிநாளில்
பூமியின்மேல் நிற்பார் என்றும் நான் அறிந்
26 திருக்கிறேன்.—இந்த என் தோல்முதலா
னவை அழுகிப்போனபின்பு, நான் என்
மாம்சத்தில் இருந்து தேவனைப் பார்ப்
27 பேன்.—அவரை நானே பார்ப்பேன்; அந்
நிய கண்கள் அல்ல, என் கண்களே அவ
ரைக் காணும்; இந்த வாஞ்சையால் என்
உள்ளிந்திரியங்கள் எனக்குள் சோர்ந்து
போகிறது.

28 காரியத்தின் மூலம் எனக்குள் கண்டு
பிடிக்கப்படுகையில், நாம் ஏன் அவனைத்
துன்பப்படுத்துகிறோம் என்று நீங்கள்
29 சொல்லவேண்டியதாமே.—பட்டயத்துக்
குப் பயப்படுங்கள்; நியாயத்தீர்ப்பு உண்
டென்கிறதை நீங்கள் அறியும்பொருட்டு,
மூர்க்கமானது பட்டயத்தினால் உண்டா
கும் ஆக்கினையை வரப்பண்ணும் என்
றான்.

**20** அப்பொழுது நாகமாத்தியனான சோப்
2 பார் பிரதியுத்தரமாக:—இதற்காக மறு
உத்தரவு கொடுக்க என் சிந்தனைகள் என்னை
ஏவுகிறபடியால் நான் தீவிரித்துச் சொல்
3 லுகிறேன்.—நிந்தித்தேன் என்று நான்
கடிந்துகொள்ளப்பட்டதைக் கேட்டேன்;
ஆனாலும் உணர்வினால் என் ஆவி பிரதி
யுத்தரம் சொல்ல என்னை ஏவுகிறது.

4 துன்மார்க்கனின் கெம்பீரம் குறுகினது
என்பதையும், மாயக்காரனின் சந்தோ
ஷம் ஒரு நிமிஷம்மாத்திரம் நிற்கும் என்
5 பதையும்,—அவர் மனுஷனைப் பூமியில்
வைத்த ஆதிகாலமுதல் இப்படியிருக்கி
6 றது என்பதையும் நீர் அறியீரோ?—அவனு
டைய மேன்மை வானபரியந்தம் உயர்ந்
தாலும், அவனுடைய தலை மேகங்கள்மட்
7 டும் எட்டினாலும்,—அவன் தன் மலத்
தைப்போல என்றைக்கும் அழிந்துபோ
வான்; அவனைக் கண்டவர்கள், அவன்
8 எங்கே என்பார்கள்?—அவன் ஒரு சொப்
பனத்தைப்போல் பறந்துபோய்க் காணப்
படாதவனாவான்; இரவில் தோன்றும் தரி
சனத்தைப்போல் பறக்கடிக்கப்படுவான்.—
9 அவனைப் பார்த்த கண் இனி அவனைப்
பார்ப்பதில்லை; அவன் இருந்த ஸ்தலம்
10 இனி அவனைக் காண்பதில்லை.—அவன்
பிள்ளைகள் எளிமையானவர்களின் சகா
யத்தைத் தேடுவார்கள்; அவன் பறித்
ததை அவன் கைகள் திரும்பக் கொடுக்க
வேண்டியதாகும்.—அவன் எலும்புகள் 11
அவனுடைய வாலவயதின் பாவங்களி
னால் நிறைந்திருந்து, அவனோடேகூட
மண்ணிலே படுத்துக்கொள்ளும்.

பொல்லாப்பு அவன் வாயிலே இனி 12
மையாயிருப்பதால், அவன் அதைத் தன்
நாவின்கீழ் அடக்கி,—அதை விடாமல், 13
பதனம்பண்ணி, தன் வாய்க்குள்ளே வைத்
துக்கொண்டிருந்தாலும்,—அவன் போஜ 14
னம் அவன் குடல்களில் மாறி, அவனுக்
குள் விரியன்பாம்புகளின் பிச்சாய்ப்போ
கும்.—அவன் விழுங்கின ஆஸ்தியைக் கக் 15
குவான்; தேவன் அதை அவன் வயிற்றி
லிருந்து வெளியே தள்ளிவிடுவார்.

அவன் விரியன்பாம்புகளின் விஷத்தை 16
உறிஞ்சுவான்; விரியனின் நாக்கு அவ
னைக் கொல்லும்.—தேனும் நெய்யும் ஓடும் 17
வாய்க்கால்களையும் ஆறுகளையும் அவன்
காண்பதில்லை.—தான் பிரயாசப்பட்டுத் 18
தேடினதை அவன் விழுங்காமல் திரும்
பக் கொடுப்பான்; அவன் திரும்பக் கொ
டுக்கிறது அவன் ஆஸ்திக்குச் சரியாயிருக்
கும்; அவன் களிகூராதிருப்பான்—அவன் 19
ஒடுக்கி, ஏழைகளைக் கைவிட்டு, தான் கட்
டாத வீட்டைப் பறித்தபடியினாலும்,—தன் 20
வயிறு திருப்தியற்றிருந்தபடியினாலும்,
அவன் இச்சித்த காரியங்களில் அவனு
க்கு ஒன்றும் இருப்பதில்லை.—அவன் போஜ 21
னத்தில் ஒன்றும் மீதியாவதில்லை; ஆகை
யால் அவன் ஆஸ்தி நிலைநிற்பதில்லை.—
அவன் வேண்டுமென்கிற பரிபூரணம் அவ 22
னுக்கு வந்தபின், அவனுக்கு வியாகுலம்
உண்டாகும்; சிறுமைப்படுகிற ஒவ்வொரு
வருடைய கையும் அவன்மேல் வரும்.

தன் வயிற்றை நிரப்பத்தக்கது இன் 23
னும் அவனுக்கு இருந்தாலும், அவர்
அவன்மேல் தமது கோபத்தின் உக்கிரத்
தை வரவிட்டு, அவன் போஜனம்பண்ணு
கையில், அதை அவன்மேல் சொரியப்
பண்ணுவார்.—இருப்பு ஆயுதத்துக்கு 24
அவன் தப்பியோடினாலும் உருக்கு வில்
அவனை உருவ எய்யும்.—உருவின பட்ட 25
யம் அவன் சரீரத்தையும், மின்னுகிற
அம்பு அவன் பிச்சையும் உருவிப்போ
கும்; பயங்கரங்கள் அவன்மேல் வரும்.—
அவன் ஒளிக்கும் இடங்களில் காரிருள் 26
அடங்கியிருக்கும்; அவியாத அக்கினி
அவனைப் பட்சிக்கும்; அவன் கூடாரத்
தில் மீதியாயிருக்கிறவன் தீங்கு அநுபவிப்

27 பான்.—வானங்கள் அவன் அக்கிரமத்தை
வெளிப்படுத்தி, பூமி அவனுக்கு விரோத
28 மாக எழும்பும்.—அவன் வீட்டின் சம்பத்
து போய்விடும்; அவருடைய கோபத்
தின் நாளிலே அவைகள் கரைந்துபோ
29 கும்.—இதுவே தேவனால் துன்மார்க்க
னுக்குக் கிடைக்கும் பங்கும், அவன்
செய்கைக்கு தேவனால் அவனுக்கு வரும்
சுதந்தரமுமாம் என்றான்.

21 2 யோபு பிரதியுத்தரமாக:—என் வச
னத்தைக் கவனமாய்க் கேளுங்கள்; இது
நீங்கள் என்னைத் தேற்றரவுபண்ணுவது
3 போல இருக்கும்.—நான் பேசப்போகி
றேன், சகித்திருங்கள்; நான் பேசினபின்பு
4 பரியாசம்பண்ணுங்கள்.—நான் மனுஷ
னைப் பார்த்தா அங்கலாய்க்கிறேன்? அப்
படியானாலும் என் ஆவி விசனப்படா
5 திருக்குமா?—என்னைக் கவனித்துப்பாருங்
கள், அப்பொழுது நீங்கள் பிரமித்து, உங்
கள் வாயைக் கையால் பொத்திக்கொள்
வீர்கள்.

6 இதை நான் நினைக்கையில் கலங்கு
கிறேன்; நடுக்கம் என் மாம்சத்தைப் பிடிக்
7 கும்.—துன்மார்க்கர் ஜீவித்து விருத்தராகி,
8 வல்லவராவானேன்? — அவர்களோடுங்
கூட அவர்கள் சந்ததியார் அவர்களுக்கு
முன்பாகவும், அவர்கள் பிள்ளைகள் அவர்
கள் கண்களுக்கு முன்பாகவும் திடப்படு
9 கிறார்கள்.—அவர்கள் வீடுகள் பயமில்
லாமல் பத்திரப்பட்டிருக்கும்; தேவனு
டைய மிலாறு அவர்கள்மேல் வருகிற
10 தில்லை.—அவர்களுடைய எருது பொலிந்
தால், வீணாய்ப்போகாது; அவர்களுடைய
11 பசு சினை அழியாமல் ஈனுகிறது.—அவர்
கள் தங்கள் குழந்தைகளை ஒரு மந்தை
யைப்போல வெளியே போகவிடுகிறார்
கள்; அவர்கள் பிள்ளைகள் குதித்து விளை
12 யாடுகிறார்கள்.—அவர்கள் தம்புரையும்
சுரமண்டலத்தையும் எடுத்துப் பாடி,
கின்னரத்தின் ஓசைக்குச் சந்தோஷப்படு
13 கிறார்கள்.—அவர்கள் செல்வவான்களா
ய்த் தங்கள் நாட்களைப் போக்கி, ஒரு
க்ஷணப்பொழுதிலே பாதாளத்தில் இறங்
14 குகிறார்கள்.—அவர்கள் தேவனை நோக்கி:
எங்களைவிட்டு விலகியிரும், உம்முடைய
15 வழிகளை அறிய விரும்போம்;—சர்வவல்ல
வரை நாம் சேவிக்க அவர் யார்? அவரை
நோக்கி ஜெபம்பண்ணுவதினால் நமக்குப்
பிரயோஜனம் என்ன என்கிறார்கள்.

16 ஆனாலும் அவர்கள் வாழ்வு அவர்கள்
கையிலிராது; துன்மார்க்கரின் ஆலோ
சனை எனக்குத் தூரமாயிருப்பதாக.—எத் 17
தனைச் சடுதியில் துன்மார்க்கரின் விளக்கு
அணைந்துபோம்; அவர் தமது கோபத்தி
னால் வேதனைகளைப் பகிர்ந்துகொடுக்கை
யில், அவர்கள் ஆபத்து அவர்கள்மேல்
வரும்.—அவர்கள் காற்றுமுகத்திலிருக் 18
கிற துரும்பைப்போலவும், பெருங்காற்று
பறக்கடிக்கிற பதரைப்போலவும் இருக்
கிறார்கள்.—தேவன் அவனுடைய அக்கிரம 19
த்தை அவன் பிள்ளைகளுக்கு வைத்துவைக்
கிறார்; அவன் உணரத்தக்கவிதமாய் அதை
அவனுக்குப் பலிக்கப்பண்ணுகிறார்.—அவ 20
னுடைய அழிவை அவனுடைய கண்கள்
காணும், சர்வவல்லவருடைய உக்கிரத்
தைக் குடிப்பான்.—அவன் மாதங்களின் 21
தொகை குறுக்கப்படும்போது, அவனுக்
குப் பிற்பாடு அவன் வீட்டைப்பற்றி அவ
னுக்கு இருக்கும் விருப்பமென்ன?

உயர்ந்தோரை நியாயந்தீர்க்கிற தேவ 22
னுக்கு அறிவை உணர்த்த யாராலாகும்?—
ஒருவன் நிர்வாகத்தோடும் சுகத்தோடும் 23
வாழ்ந்து குறையற்ற பெலனுள்ளவனாய்ச்
சாகிறான்.—அவனுடைய பால்பாத்திரங் 24
கள் பாலால் நிரம்பியிருக்கிறது, அவன்
எலும்புகளில் ஊன் புஷ்டியாயிருக்கிறது.-
வேறொருவன் ஒருநாளாவது சந்தோஷத் 25
தோடே சாப்பிடாமல், மனக்கிலேசத்
தோடே சாகிறான்.—இருவரும் சமமாய் 26
மண்ணிலே படுத்துக்கொள்ளுகிறார்கள்;
புழுக்கள் அவர்களை மூடும்.

இதோ, நான் உங்கள் நினைவுகளையும், 27
நீங்கள் என்னைப்பற்றி அநியாயமாய்க்
கொண்டிருக்கும் ஆலோசனைகளையும் அறி
வேன்.-பிரபுவினுடைய வீடு எங்கே? துன் 28
மார்க்கருடைய கூடாரம் எங்கே? என்று
சொல்லுகிறீர்கள்.—வழிநடந்து போகிற 29
வர்களை நீங்கள் கேட்கவில்லையா, அவர்
கள் சொல்லும் குறிப்புகளை நீங்கள் அறிய
வில்லையா?—துன்மார்க்கன் ஆபத்துநாளுக் 30
கென்று வைக்கப்படுகிறான்; அவன் கோ
பாக்கினையின் நாளுக்கென்று கொண்டு
வரப்படுகிறான்.—அவன் வழியை அவன் 31
முகத்துக்கு முன்பாகத் தூண்டிக் காண்
பிக்கிறவன் யார்? அவன் செய்கைக்குத்
தக்க பலனை அவனுக்குச் சரிக்கட்டுகிற
வன் யார்?—அவன் கல்லறைக்குக் கொ 32
ண்டுவரப்படுகிறான்; அவன் கோரி காக்
கப்பட்டிருக்கும்.—பள்ளத்தாக்கின் புல் 33
பத்தைகள் அவனுக்கு இன்பமாயிருக்

வாயை உவமைகளால் திறப்பேன்; பூர்வ காலத்து மறைபொருள்களை வெளிப்படுத்து
3 வேன். — அவைகளை நாங்கள் கேள்விப்பட்டு அறிந்தோம்; எங்கள் பிதாக்கள் அவைகளை எங்களுக்குத் தெரிவித்தார்
4 கள்.—பின்வரும் சந்ததியான பிள்ளைகளுக்கு நாங்கள் அவைகளை மறைக்காமல், கர்த்தரின் துதிகளையும், அவருடைய பலத்தையும், அவர் செய்த அவருடைய அதிசயங்களையும் விவரிப்போம்.

5 அவர் யாக்கோபிலே சாட்சியை ஏற்படுத்தி, இஸ்ரவேலிலே வேதத்தை ஸ்தாபித்து, அவைகளைத் தங்கள் பிள்ளைகளுக்கு அறிவிக்கும்படி நம்முடைய பிதாக்
6 களுக்குக் கட்டளையிட்டார். — இனிப் பிறக்கும் பிள்ளைகளாகிய பின் சந்ததியார் அதை அறிந்துகொண்டு, அவர்கள் எழும்பித் தங்கள் பிள்ளைகளுக்கு அவைகளைச்
7 சொல்லும்படிக்கும்;—தேவன்மேல் அவர்கள் தங்கள் நம்பிக்கையை வைத்து, தேவனுடைய செயல்களை மறவாமல், அவர் கற்பனைகளைக் கைக்கொள்ளும்படிக்கும்;—
8 இருதயத்தைச் செவ்வைப்படுத்தாமலும், தேவனை உறுதியாய்ப் பற்றிக்கொள்ளாமலும் இருந்த முரட்டாட்டமும் கலகமுமுள்ள சந்ததியாகிய தங்கள் பிதாக்களுக்கு அவர்கள் ஒப்பாகாதபடிக்கும், இவைகளைக் கட்டளையிட்டார்.

9 ஆயுதமணிந்த வில்வீரரான எப்பிராயீம் புத்திரர் யுத்தநாளிலே முதுகுகாட்டி
10 னார்கள்.—அவர்கள் தேவனுடைய உடன்படிக்கையைக் கைக்கொள்ளாமலும், அவருடைய கட்டளைகளின்படி நடக்கச்
11 சம்மதியாமலும்,—அவருடைய செயல்களையும், அவர் தங்களுக்குக் காண்பித்த அதிசயங்களையும் மறந்தார்கள்.

12 அவர்களுடைய பிதாக்களுக்கு முன்பாக, எகிப்துதேசத்துச் சோவான் வெளியிலே, அவர் அதிசயமானவைகளைச் செய்
13 தார்.—கடலைப் பிளந்து, அவர்களைக் கடக்கப்பண்ணி, ஜலத்தைக் குவியலாக நிற்கு
14 ம்படி செய்தார் — பகலிலே மேகத்தினாலும், இராமுழுதும் அக்கினி வெளிச்சத்தினாலும் அவர்களை வழிநடத்தினார். —
15 வனாந்தரத்திலே கன்மலைகளைப் பிளந்து, மகா ஆழங்களிலிருந்து தண்ணீரை அவர்
16 களுக்குக் குடிக்கக் கொடுத்தார். — கன்மலையிலிருந்து நீரோட்டங்களைப் புறப்படப்பண்ணி, தண்ணீரை நதிபோல ஓடிவரும்படி செய்தார்.

என்றாலும், அவர்கள் பின்னும் அவரு
17 க்கு விரோதமாய்ப் பாவஞ்செய்து, வறண்ட வெளியிலே உன்னதமானவருக்குக் கோபம் மூட்டினார்கள். — தங்கள் இச்
18 சைக்கேற்ற போஜனத்தைக் கேட்டு, தங்கள் இருதயத்தில் தேவனைப் பரீட்சை பார்த்தார்கள் — அவர்கள் தேவனுக்கு
19 விரோதமாய்ப் பேசி: தேவன் வனாந்தரத்திலே போஜனபந்தியை ஆயத்தப்படுத்தக்கூடுமோ?—இதோ, அவர் கன்மலையை
20 அடித்ததினால் தண்ணீர் புறப்பட்டு, நதிகளாய்ப் புரண்டுவந்தது; அவர் அப்பத்தையும் கொடுக்கக்கூடுமோ? தம்முடைய ஜனத்திற்கு மாம்சத்தையும் ஆயத்தப்படுத்துவாரோ? என்றார்கள். — ஆகையால்
21 கர்த்தர் அதைக் கேட்டுக் கோபங்கொண்டார்; அவர்கள் தேவனை விசுவாசியாமலும், அவருடைய இரட்சிப்பை நம்பாமலும் போனதினால்,—யாக்கோபுக்கு விரோ
22 தமாய் அக்கினி பற்றியெரிந்தது; இஸ்ரவேலுக்கு விரோதமாய்க் கோபம் மூண்டது — அவர் உயரத்திலுள்ள மேகங்களுக்
23 குக் கட்டளையிட்டு, வானத்தின் கதவுகளைத் திறந்து,—மன்னாவை அவர்களுக்கு ஆகார
24 மாக வருஷிக்கப்பண்ணி, வானத்தின் தானியத்தை அவர்களுக்குக் கொடுத்தார்.—
25 தூதர்களின் அப்பத்தை மனுஷன் சாப்பிட்டான்; அவர்களுக்கு ஆகாரத்தைப் பூரணமாய் அனுப்பினார்.—ஆகாசத்திலே கீழ்
26 காற்றை வரப்பண்ணி, தம்முடைய வல்லமையினால் தென்றலையும் வீசச்செய்து,—
27 மாம்சத்தைத் தூளத்தனையாயும், சிறகுள்ள பறவைகளைக் கடற்கரை மணலத்தனையாயும் வருஷிக்கப்பண்ணி,-அவைகளை அவர்
28 கள் பாளயத்தின் நடுவிலும், அவர்கள் கூடாரங்களைச் சுற்றிலும் இறங்கப்பண்ணினார்.—அவர்கள் புசித்துத் திருப்தியடைந்
29 தார்கள். அவர்கள் இச்சித்ததை அவர்களுக்குக் கொடுத்தார்.—அவர்கள் தங்கள்
30 இச்சையை வெறுக்கவில்லை; அவர்களுடைய போஜனம் அவர்கள் வாயில் இருக்கும்போதே,—தேவகோபம் அவர்கள்மேல்
31 எழும்பி, அவர்களில் கொழுத்தவர்களைச் சங்காரித்து, இஸ்ரவேலில் விசேஷித்தவர்களை மடியப்பண்ணிற்று.—இவையெல்லாம்
32 நடந்தும், அவர் செய்த அதிசயங்களை அவர்கள் நம்பாமல், பின்னும் பாவஞ்செய்தார்கள்.—ஆதலால் அவர்கள் நாட்
33 களை விருதாவிலும், அவர்கள் வருஷங்களைப் பயங்கரத்திலும் கழியப்பண்ணினார்.

34 அவர்களை அவர் கொல்லும்போது, அவ
ரைக்குறித்து விசாரித்து, அவர்கள் திரும்
பிவந்து தேவனை அதிகாலமே தேடி,—
35 தேவன் தங்கள் கன்மலையென்றும், உன்ன
தமான தேவன் தங்கள் மீட்பர் என்றும்,
36 நினைவுகூர்ந்தார்கள்.—ஆனாலும் அவர்கள்
தங்கள் வாயினால் அவருக்கு இச்சகம்
பேசி, தங்கள் நாவினால் அவரிடத்தில் பொ
37 ய்சொன்னார்கள். — அவர்கள் இருதயம்
அவரிடத்தில் நிலைவரப்படவில்லை; அவரு
டைய உடன்படிக்கையில் அவர்கள் உண்
38 மையாயிருக்கவில்லை.—அவரோ அவர்களை
அழிக்காமல், இரக்கமுள்ளவராய் அவர்
கள் அக்கிரமத்தை மன்னித்தார்; அவர்
தமது உக்கிரம் முழுவதையும் எழுப்பா
மல், அநேகந்தரம் தமது கோபத்தை வில
39 க்கிவிட்டார்.—அவர்கள் மாம்சமென்றும்,
திரும்பிவராமல் அகலுகிற காற்றென்றும்
நினைவுகூர்ந்தார்.

40 எத்தனைதரமோ வனாந்தரத்திலே அவ
ருக்குக் கோபம் மூட்டி, அவாந்தரவெளி
யிலே அவரை விசனப்படுத்தினார்கள்.—
41 அவர்கள் திரும்பி தேவனைப் பரீட்சைபார்
த்து, இஸ்ரவேலின் பரிசுத்தரை மட்டுப்ப
42 டுத்தினார்கள்.—அவருடைய கரத்தையும்,
அவர் தங்களைச் சத்துருவுக்கு விலக்கி மீட்ட
43 நாளையும் நினையாமற்போனார்கள்.—அவர்
எகிப்திலே தம்முடைய அடையாளங்களை
யும், சோவான் வெளியிலே தம்முடைய
44 அற்புதங்களையும் செய்தார். — அவர்களு
டைய நதிகளை இரத்தமாக மாற்றி, அவர்க
ளுடைய ஆறுகளிலுள்ள ஜலத்தைக் குடிக்
45 கக்கூடாதபடி செய்தார்.-அவர்களை அழிக்
கும்படி வண்டு ஜாதிகளையும், அவர்களைக்
கெடுக்கும்படி தவளைகளையும் அவர்களுக்
46 குள்ளே அனுப்பினார். — அவர்களுடைய
விளைச்சலைப் புழுக்களுக்கும், அவர்களு
டைய பிரயாசத்தின் பலனை வெட்டுக்கிளி
47 களுக்கும் கொடுத்தார்.—கல்மழையினால்
அவர்களுடைய திராட்சச்செடிகளையும்,
ஆலாங்கட்டியினால் அவர்களுடைய அத்தி
48 மரங்களையும் அழித்து,— அவர்களுடைய
மிருகஜீவன்களைக் கல்மழைக்கும், அவர்க
ளுடைய ஆடுமாடுகளை இடிகளுக்கும் ஒப்
49 புக்கொடுத்தார்.—தமது உக்கிரமான கோ
பத்தையும், மூர்க்கத்தையும், சினத்தையும்,
உபத்திரவத்தையும், தீங்குசெய்யும் தூதர்
களையும் அவர்களுக்குள்ளே அனுப்பினார்.-
50 அவர் தம்முடைய கோபத்துக்கு வழிதிறந்
து, அவர்கள் ஆத்துமாவை மரணத்துக்கு
விலக்கிக் காவாமல், அவாகள ஜீவனைக்
கொள்ளைநோய்க்கு ஒப்புக்கொடுத்தார்.—
51 எகிப்திலே தலைச்சன்கள் அனைத்தையும்,
காமின் கூடாரங்களிலே அவர்களுடைய
பெலனில் முதற்பலனானயாவரையும் அழி
52 த்து;—தம்முடைய ஜனங்களை ஆடுகளைப்
போல் புறப்படப்பண்ணி, அவர்களை வனாந்
தரத்திலே மந்தையைப்போல் கூட்டிக்கொ
53 ண்டுபோய்,—அவர்கள் பயப்படாதபடிக்கு
அவர்களைப் பத்திரமாய் வழிநடத்தினார்;
அவர்கள் சத்துருக்களைக் கடல் மூடிப்போ
54 ட்டது.—அவர்களைத் தமது பரிசுத்த ஸ்த
லத்தின் எல்லைவரைக்கும், தமது வலது
கரம் சம்பாதித்த இந்தப் பர்வதமட்டுக்கும்
55 அழைத்துக்கொண்டுவந்து,—அவர்கள் மு
கத்திற்கு முன்பாக ஜாதிகளைத் துரத்திவிட்
டு, தேசத்தை நூல்போட்டுப் பங்கிட்டு,
அவர்களுடைய கூடாரங்களில் இஸ்ரவே
லின் கோத்திரங்களைக் குடியேற்றினார்.

56 ஆனாலும் அவர்கள் உன்னதமான தேவ
னைப் பரீட்சைபார்த்து, அவருக்குக் கோ
பம் மூட்டி, அவருடைய சாட்சிகளைக் கை
57 க்கொள்ளாமற்போய்,—தங்கள் பிதாக்க
ளைப்போல வழிவிலகி, துரோகம்பண்ணி,
மோசம்போக்கும் வில்லைப்போல் துவண்
58 டு,—தங்கள் மேடைகளினால் அவருக்குக்
கோபம்மூட்டி, தங்கள் விக்கிரகங்களினால்
எரிச்சல் உண்டாக்கினார்கள்.

59 தேவன் அதைக் கேட்டு உக்கிரமாகி,
60 இஸ்ரவேலை மிகவும் வெறுத்து,-தாம் மனு
ஷருக்குள்ளே போட்ட கூடாரமாகிய
சீலோவிலுள்ள வாசஸ்தலத்தை விட்டு வில
61 கி,—தமது பலத்தைச் சிறையிருப்புக்கும்,
தமது மகிமையைச் சத்துருவின் கைக்கும்
62 ஒப்புக்கொடுத்து,—தமது ஜனத்தைப் பட்
டயத்துக்கு இரையாக்கி, தமது சுதந்தரத்
63 தின்மேல் கோபங்கொண்டார்.—அவர்கள்
வாலிபரை அக்கினி பட்சித்தது, அவர்கள்
கன்னியாஸ்திரீகள் வாழ்க்கைப்படாதிருந்
64 தார்கள்.—அவர்களுடைய ஆசாரியர்கள்
பட்டயத்தால் விழுந்தார்கள், அவர்களு
டைய விதவைகள் அழவில்லை.

65 அப்பொழுது ஆண்டவர் நித்திரை தெளி
ந்தவனைப்போலவும், திராட்சரசத்தால் கெ
ம்பீரிக்கிற பராக்கிரமசாலியைப்போலவும்
66 விழித்து,— தம்முடைய சத்துருக்களைப்
பின்புறமாக அடித்து, அவர்களுக்கு நித்திய
67 நிந்தையை வரப்பண்ணினார்.—அவர் யோ
சேப்பின் கூடாரத்தைப் புறக்கணித்தார்;
எப்பிராயீம் கோத்திரத்தை அவர் தெரிந்து

68 கொள்ளாமல்,—யூதா கோத்திரத்தையும் தமக்குப் பிரியமான சீயோன் பர்வதத்தை 69 யும் தெரிந்துகொண்டார்.—தம்முடைய பரிசுத்த ஸ்தலத்தை மலைகளைப்போலவும், என்றைக்கும் நிற்கும்படி தாம் அஸ்திபாரப்படுத்தின பூமியைப்போலவும் கட்டி 70 னார்.—தம்முடைய தாசனாகிய தாவீதைத் தெரிந்துகொண்டு, ஆட்டுத்தொழுவங்களி 71 லிருந்து அவனை எடுத்தார்.—கறவலாடுகளின் பின்னாகத் திரிந்த அவனை, தம்முடைய ஜனமாகிய யாக்கோபையும் தம்முடைய சுதந்தரமாகிய இஸ்ரவேலையும் மேய்ப்பதற்காக, அழைத்துக்கொண்டுவந்தார்.- 72 இவன் அவர்களைத் தன் இருதயத்தின் உண்மையின்படியே மேய்த்து, தன் கைகளின் திறமையினால் அவர்களை நடத்தினான்.

**79** (ஆசாபின் சங்கீதம்.)

தேவனே, புறஜாதியார் உமது சுதந்தரத்தில் வந்து, உமது பரிசுத்த ஆலயத்தைத் தீட்டுப்படுத்தி, எருசலேமை மண்மேடுக 2 ளாக்கினார்கள்.—உமது ஊழியக்காரரின் பிரேதங்களை ஆகாயத்துப் பறவைகளுக்கும், உமது பரிசுத்தவான்களின் மாம்சத்தை பூமியின் மிருகங்களுக்கும் இரையாகக் 3 கொடுத்தார்கள்.—எருசலேமைச் சுற்றிலும் அவர்களுடைய இரத்தத்தைத் தண்ணீரைப்போலச் சிந்தினார்கள்; அவர்களை அட 4 க்கம்பண்ணுவாருமில்லை.—எங்கள் அயலாருக்கு நிந்தையும், எங்கள் சுற்றுப்புறத்தாருக்குப் பரியாசமும் சக்கந்தமுமானோம்.- 5 எதுவரைக்கும் கர்த்தாவே! நீர் என்றைக்கும் கோபமாயிருப்பீரோ? உம்முடைய எரிச்சல் அக்கினியைப்போல் எரியுமோ?- 6 உம்மை அறியாத ஜாதிகள்மேலும், உமது நாமத்தைத் தொழுதுகொள்ளாத ராஜ்யங்கள்மேலும், உம்முடைய உக்கிரத்தை 7 ஊற்றிவிடும்.—அவர்கள் யாக்கோபைப் பட்சித்து, அவன் குடியிருப்பைப் பாழாக்கினார்களே.

8 பூர்வகாலத்து அக்கிரமங்களை எங்களுக்கு விரோதமாக நினையாதேயும், உம்முடைய இரக்கங்கள் சீக்கிரமாய் எங்களுக்கு நேரிடுவதாக; நாங்கள் மிகவும் தாழ்த் 9 தப்பட்டுப் போனோம்.—எங்களை இரட்சிக்கும் தேவனே, நீர் உமது நாமத்தின் மகிமையினிமித்தம் எங்களுக்கு உதவிசெய்து, உமது நாமத்தினிமித்தம் எங்களை விடுவித்து, எங்கள் பாவங்களை நிவிர்த்தியாக் 10 கும்.—அவர்களுடைய தேவன் எங்கே என்று புறஜாதிகள் சொல்வானேன்? உமது ஊழியக்காரருடைய சிந்துண்ட இரத்தத்தின் பழிவாங்குதல் ஜாதிகளுக்குள்ளே எங்கள் கண்களுக்கு முன்பாக விளங்கும்படி செய்யும்.— 11 கட்டுண்டவனுடைய பெருமூச்சு உமக்கு முன்பாக வரட்டும்; கொலைக்கு நியமிக்கப்பட்டவர்களை உமது புயபலத்தினால் உயிரோடே காத்தருளும்.— 12 ஆண்டவரே, எங்கள் அயலார் உம்மை நிந்தித்த நிந்தையை, ஏழத்தனையாக அவர்கள் மடியிலே திரும்பப்பண்ணும்.— 13 அப்பொழுது, உம்முடைய ஜனங்களும் உம்முடைய மேய்ச்சலின் ஆடுகளுமாகிய நாங்கள் உம்மை என்றென்றைக்கும் புகழுவோம்; தலைமுறை தலைமுறையாக உமது துதியைச் சொல்லிவருவோம்.

**80** (சாட்சி விளங்கும்படி சோஷானீம் எதேத் என்னும் வாத்தியத்தில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

இஸ்ரவேலின் மேய்ப்பரே, யோசேப்பை ஆட்டுமந்தையைப்போல் நடத்துகிறவரே, செவிகொடும்; கேருபீன்கள் மத்தியில் வாசம்பண்ணுகிறவரே, பிரகாசியும்.— 2 எப்பிராயீம் பென்யமீன் மனாசே என்பவர்களுக்கு முன்பாக, நீர் உமது வல்லமையை எழுப்பி, எங்களை இரட்சிக்க வந்தருளும்.— 3 தேவனே, எங்களைத் திருப்பிக் கொண்டுவாரும், உமது முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும், அப்பொழுது இரட்சிக்கப்படுவோம்.

4 சேனைகளின் தேவனாகிய கர்த்தாவே, உமது ஜனத்தின் விண்ணப்பத்துக்கு விரோதமாய் நீர் எதுவரைக்கும் கோபங்கொள்வீர்.— 5 கண்ணீராகிய அப்பத்தை அவர்களுக்குப் போஜனமாகவும், மிகுதியான கண்ணீரையே அவர்களுக்குப் பானமாகவும் கொடுத்தீர்.— 6 எங்கள் அயலாருக்கு எங்களை வழக்காக வைக்கிறீர்; எங்கள் சத்துருக்கள் எங்களைப் பரியாசம்பண்ணுகிறார்கள்.— 7 சேனைகளின் தேவனே, எங்களைத் திருப்பிக்கொண்டுவாரும், உமது முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும், அப்பொழுது இரட்சிக்கப்படுவோம்.

8 நீர் எகிப்திலிருந்து ஒரு திராட்சக்கொடியைக் கொண்டுவந்து, ஜாதிகளைத் துரத்திவிட்டு, அதை நாட்டினீர்.— 9 அதற்கு இடத்தை ஆயத்தப்படுத்தினீர்; அது வேரூன்றி, தேசமெங்கும் படர்ந்தது.— 10 அதின் நிழலால் மலைகளும், அதின் கிளைகளால் திவ்வியமான கேதுருக்களும் மூடப்பட்டது.- 11 அது தன் கொடிகளைச் சமுத்திரமட்டாக

வும், தன் கிளைகளை நதிமட்டாகவும் படர
12 விட்டது. — இப்பொழுதோ வழிநடக்கிற
யாவரும் அதைப் பறிக்கும்படியாக, அதின்
அடைப்புகளை ஏன் தகர்த்துப்போட்டீர்?—
13 காட்டுப்பன்றி அதை உழுதுபோடுகிறது,
வெளியின் மிருகங்கள் அதை மேய்ந்து
போடுகிறது.

14 சேனைகளின் தேவனே, திரும்பிவாரும்,
வானத்திலிருந்து கண்ணோக்கிப் பார்த்து,
இந்தத் திராட்சச்செடியை விசாரித்தரு
15 ளும்;—உம்முடைய வலதுகரம் நாட்டின
கொடியையும், உமக்கு நீர் திடப்படுத்தின
16 கிளையையும் கடாட்சித்தருளும். — அது
அக்கினியால் சுடப்பட்டும் வெட்டுண்டும்
போயிற்று; உம்முடைய முகத்தின் பயமு
17 றுத்தலால் அழிந்துபோகிறார்கள்.—உமது
கரம் உமது வலதுபாரிசத்துப் புருஷன்
மீதிலும், உமக்கு நீர் திடப்படுத்தின மனுஷ
18 குமாரன்மீதிலும் இருப்பதாக.—அப்பொ
ழுது உம்மைவிட்டுப் பின்வாங்கமாட்
டோம்; எங்களை உயிர்ப்பியும், அப்பொ
ழுது உமது நாமத்தைத் தொழுதுகொள்ளு
19 வோம்.—சேனைகளின் தேவனாகிய கர்த்தா
வே, எங்களைத் திருப்பிக்கொண்டு வாரும்;
உமது முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும்,
அப்பொழுது இரட்சிக்கப்படுவோம்.

## 81

(கித்தீத் என்னும் வாத்தியத்தில் வாசிக்கும்படி இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

நம்முடைய பெலனாகிய தேவனைக்கெம்
பீரமாய்ப் பாடி, யாக்கோபின் தேவனைக்
2 குறித்து ஆர்ப்பரியுங்கள்.—தம்புரு வாசித்
து, வீணையையும் இனிய ஓசையான சுர
மண்டலத்தையும் எடுத்து, சங்கீதம் பா
3 டுங்கள். — மாதப்பிறப்பிலும், நியமித்த
காலத்திலும், நம்முடைய பண்டிகைநாட்
4 களிலும்; எக்காளம் ஊதுங்கள்.—இது
இஸ்ரவேலுக்குப் பிரமாணமும், யாக்கோ
பின் தேவன் விதித்த நியாயமுமாயிருக்கி
5 றது.—நாம் அறியாத பாஷையைக் கேட்ட
எகிப்துதேசத்தைவிட்டுப் புறப்படுகையில்,
இதை யோசேப்பிலே சாட்சியாக ஏற்படுத்
6 தினார்.—அவன் தோளைச் சுமைக்கு விலக்கி
னேன்; அவன் கைகள் கூடைக்கு நீங்கலாக்
7 கப்பட்டது.—நெருக்கத்திலே நீ கூப்பிட்
டாய், நான் உன்னைத் தப்புவித்தேன்; இடி
முழக்கம் உண்டாகும் மறைவிடத்திலிரு
ந்து உனக்கு உத்தரவு அருளினேன்; மேரி
பாவின் தண்ணீர்களிடத்தில் உன்னைச் சோ
8 தித்து அறிந்தேன். (சேலா.)—என் ஜன
மே கேள், உனக்குச் சாட்சியிட்டுச் சொ
ல்லுவேன்; இஸ்ரவேலே, நீ எனக்குச் செவி
கொடுத்தால் நலமாயிருக்கும்.—உனக்குள் 9
வேறு தேவன் உண்டாயிருக்கவேண்டாம்;
அந்நிய தேவனை நீ நமஸ்கரிக்கவும் வேண்
டாம். — உன்னை எகிப்துதேசத்திலிருந்து 10
புறப்படப்பண்ணின உன் தேவனாகிய கர்த்
தர் நானே; உன் வாயை விரிவாய்த் திற,
நான் அதை நிரப்புவேன்.—என் ஜனமோ 11
என் சத்தத்துக்குச் செவிகொடுக்கவில்லை;
இஸ்ரவேல் என்னை விரும்பவில்லை.—ஆகை 12
யால் அவர்களை அவர்கள் இருதயத்தின்
கடினத்திற்கு விட்டுவிட்டேன்; தங்கள்
யோசனைகளின்படியே நடந்தார்கள்.—ஆ, 13
என் ஜனம் எனக்குச் செவிகொடுத்து, இஸ்
ரவேல் என் வழிகளில் நடந்தால் நலமா
யிருக்கும்! — நான் சீக்கிரத்தில் அவர்கள் 14
எதிராளிகளைத் தாழ்த்தி, என் கையை அவர்
கள் சத்துருக்களுக்கு விரோதமாகத் திருப்
புவேன். — அப்பொழுது கர்த்தரைப் 15
பகைக்கிறவர்கள் அவருக்கு இச்சகம்பேசி
அடங்குவார்கள்; அவர்களுடைய காலம்
என்றென்றைக்கும் இருக்கும். — உச்சித 16
மான கோதுமைய ால் அவர்களைப் போ
ஷிப்பார்; கன்மலை னால் உன்னைத்
திருப்தியாக்குவேன்.

## 82

(ஆசாபின் சங்கீதம்.)

தேவசபையிலே தேவன் எழுந்தருளி
யிருக்கிறார்; தேவர்களின் நடுவிலே அவர்
நியாயம் விசாரிக்கிறார்.—எதுவரைக்கும் 2
நீங்கள் அநியாயத் தீர்ப்புச்செய்து, துன்
மார்க்கருக்கு முகதாட்சிணியம் பண்ணு
வீர்கள். (சேலா.)—ஏழைக்கும் திக்கற்ற 3
பிள்ளைக்கும் நியாயஞ்செய்து, சிறுமைப்
பட்டவனுக்கும் திக்கற்றவனுக்கும் நீதி
செய்யுங்கள்.—பலவீனனையும் எளியவனை 4
யும் விடுவித்து, துன்மார்க்கரின் கைக்கு
அவர்களைத் தப்புவியுங்கள்.

அறியாமலும் உணராமலும் இருக்கிறார் 5
கள், அந்தகாரத்திலே நடக்கிறார்கள்; தே
சத்தின் அஸ்திபாரங்களெல்லாம் அசை
கிறது.—நீங்கள் தேவர்கள் என்றும், நீங்க 6
ளெல்லாரும் உன்னதமானவரின் மக்கள்
என்றும் நான் சொல்லியிருந்தேன்.—ஆனா 7
லும் நீங்கள் மனுஷரைப்போலச் செத்து,
லோகப் பிரபுக்களில் ஒருவனைப்போல
விழுந்துபோவீர்கள்.

தேவனே, எழுந்தருளும், பூமிக்கு நியா 8
யத்தீர்ப்புச் செய்யும்; நீரே சகல ஜாதி
களையும் சுதந்தரமாகக் கொண்டிருப்பவர்.

83 (ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)
தேவனே, மவுனமாயிராதேயும், பேசாம
லிராதேயும்; தேவனே, சும்மாயிராதேயும்.
2 இதோ, உம்முடைய சத்துருக்கள் கொந்
தளித்து, உம்முடைய பகைஞர் தலையெடுக்
3 கிறார்கள். — உமது ஜனத்துக்கு விரோத
மாக உபாய தந்திரங்களை யோசித்து, உமது
மறைவிலிருக்கிறவர்களுக்கு விரோதமாக
4 ஆலோசனை பண்ணுகிறார்கள்.—அவர்கள்
இனி ஒரு ஜாதியாராயிராமலும், இஸ்ரவே
லின் பேர் இனி நினைக்கப்படாமலும் போ
வதற்காக, அவர்களை அதம்பண்ணுவோம்
5 வாருங்கள் என்கிறார்கள்.—இப்படி, ஏதோ
மின் கூடாரத்தாரும், இஸ்மவேலரும்,
6 மோவாபியரும், ஆகாரியரும்,—கேபால
ரும், அம்மோனியரும், அமலேக்கியரும்,
தீருவின் குடிகளோடுகூடிய பெலிஸ்தரும்,-
7 ஏகமன நிர்ணயமாய் ஆலோசனைசெய்து,
உமக்கு விரோதமாய் ஒப்பந்தம்பண்ணிக்
8 கொண்டிருக்கிறார்கள்.—அசீரியரும் அவர்
களோடேகூடக் கலந்து, லோத்தின் புத்திர
ருக்குப் புயபலமானார்கள். (சேலா.)
9 மீதியானியருக்குச் செய்ததுபோலவும்,
கீசோன் என்னும் ஆற்றண்டை எந்தோ
10 ரிலே அழிக்கப்பட்டு, — நிலத்துக்கு எரு
வாய்ப்போன சிசெரா, யாபீன் என்பவர்
களுக்குச் செய்ததுபோலவும், அவர்களுக்
11 குச் செய்யும்.—அவர்களையும், அவர்கள்
அதிபதிகளையும் ஓரேபுக்கும் சேபுக்கும்,
அவர்கள் பிரபுக்களையெல்லாம் சேபாவுக்
12 கும் சல்முனாவுக்கும் சமமாக்கும்.—தேவ
னுடைய வாசஸ்தலங்களை எங்களுக்குச்
சுதந்தரமாக நாங்கள் கட்டிக்கொள்
13 வோம் என்று சொல்லுகிறார்களே.—என்
தேவனே, அவர்களைச் சுழல்காற்றின் புழு
திக்கும், காற்றுமுகத்தில் பறக்கும் துரும்
14 புக்கும் சமமாக்கும். — நெருப்பு காட்
டைக் கொளுத்துவதுபோலவும், அக்கினி
ஜுவாலைகள் மலைகளை எரிப்பதுபோல
15 வும்,—நீர் உமது புசலினாலே அவர்களைத்
தொடர்ந்து, உமது பெருங்காற்றினாலே
16 அவர்களைக் கலங்கப்பண்ணும்.—கர்த்தா
வே, அவர்கள் உமது நாமத்தைத் தேடும்
படிக்கு, அவர்கள் முகங்களை அவமானத்
17 தாலே நிரப்பும்.—யேகோவா என்னும் நா
மத்தையுடைய தேவரீர் ஒருவரே பூமிய
னைத்தின்மேலும் உன்னதமானவர் என்று
18 மனுஷர் உணரும்படி,—அவர்கள் என்றை
க்கும் வெட்கிக் கலங்கி, நாணமடைந்து
அழிந்துபோவார்களாக.

84 (கித்தீத் என்னும் வாத்தியத்தில் வாசிக்க கோரா
கின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்பு
விக்கப்பட்ட சங்கீதம்.)
சேனைகளின் கர்த்தாவே, உமது வாசஸ் 1
தலங்கள் எவ்வளவு இன்பமானவைகள்!—
என் ஆத்துமா கர்த்தருடைய ஆலயப் 2
பிராகாரங்களின்மேல் வாஞ்சையும் தவ
னமுமாயிருக்கிறது; என் இருதயமும்
என் மாம்சமும் ஜீவனுள்ள தேவனை நோக்
கிக் கெம்பீர சத்தமிடுகிறது.—என் ராஜா 3
வும் என் தேவனுமாகிய சேனைகளின் கர்த்
தாவே, உம்முடைய பீடங்களண்டை
யில் அடைக்கலான் குருவிக்கு வீடும்,
தகைவிலான் குருவிக்குத் தன் குஞ்சுகளை
வைக்கும் கூடும் கிடைத்ததே. — உம்மு 4
டைய வீட்டில் வாசமாயிருக்கிறவர்கள்
பாக்கியவான்கள்; அவர்கள் எப்பொழு
தும் உம்மைத் துதித்துக்கொண்டிருப்பார்
கள். (சேலா.)
உம்மிலே பெலன்கொள்ளுகிற மனுஷ 5
னும், தங்கள் இருதயங்களில் செவ்வை
யான வழிகளைக் கொண்டிருக்கிறவர்களும்
பாக்கியவான்கள்.—அழுகையின் பள்ளத் 6
தாக்கை உருவநடந்து அதை நீரூற்றாக்
கிக்கொள்ளுகிறார்கள்; மழையும் குளங்
களை நிரப்பும்.—அவர்கள் பலத்தின்மேல் 7
பலம் அடைந்து, சீயோனிலே தேவசந்நி
தியில் வந்து காணப்படுவார்கள்.
சேனைகளின் தேவனாகிய கர்த்தாவே, 8
என் விண்ணப்பத்தைக் கேளும்; யாக்கோ
பின் தேவனே, செவிகொடும். (சேலா.) —
எங்கள் கேடகமாகிய தேவனே, கண் 9
ணோக்கமாயிரும்; நீர் அபிஷேகம்பண்ணி
னவரின் முகத்தைப் பாரும்.—ஆயிரம் நா 10
ளைப்பார்க்கிலும் உமது பிராகாரங்களில்
செல்லும் ஒரேநாள் நல்லது; ஆகாமியக்
கூடாரங்களில் வாசமாயிருப்பதைப்பார்க்
கிலும் என் தேவனுடைய ஆலயத்தின் வா
சற்படியில் காத்திருப்பதையே தெரிந்து
கொள்ளுவேன்.—தேவனாகிய கர்த்தர் சூரி 11
யனும் கேடகமுமானவர்; கர்த்தர் கிரு
பையையும் மகிமையையும் அருளுவார்;
உத்தமமாய் நடக்கிறவர்களுக்கு நன்மை
யை வழங்காதிரார். — சேனைகளின் கர்த் 12
தாவே, உம்மை நம்பியிருக்கிற மனுஷன்
பாக்கியவான்.

85 (கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு
ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)
கர்த்தாவே, உமது தேசத்தின்மேல் பிரி
யம் வைத்து, யாக்கோபின் சிறையிருப்

2 யைத் திருப்பினீர்.—உமது ஜனத்தின் அக்
கிரமத்தை மன்னித்து, அவர்கள் பாவத்
3 தையெல்லாம் மூடினீர். (சேலா.)—உமது
உக்கிரத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு,
உமது கோபத்தின் எரிச்சலை விட்டுத்
திரும்பினீர்.

4 எங்கள் இரட்சிப்பின் தேவனே, நீர் எங்
களைத் திருப்பிக் கொண்டுவாரும், எங்கள்
மேலுள்ள உமது கோபத்தை ஆறப்பண்
5 ணும்.—என்றைக்கும் எங்கள்மேல் கோ
பமாயிருப்பீரோ? தலைமுறை தலைமுறை
யாக உமது கோபத்தை நீடித்திருக்கப்ப
6 ண்ணுவீரோ?—உமது ஜனங்கள் உம்மில்
மகிழ்ந்திருக்கும்படி நீர் எங்களைத் திரும்ப
7 உயிர்ப்பிக்கமாட்டீரோ? — கர்த்தாவே,
உமது கிருபையை எங்களுக்குக் காண
பித்து, உமது இரட்சிப்பை எங்களுக்கு
அருளிச்செய்யும்.

8 கர்த்தராகிய தேவன் விளம்புவதைக்
கேட்பேன்; அவர் தம்முடைய ஜனங்க
ளுக்கும் தம்முடைய பரிசுத்தவான்களுக்
கும் சமாதானம் கூறுவார்; அவர்களோ
மதிகேட்டுக்குத் திரும்பாதிருப்பார்களாக.—
9 நம்முடைய தேசத்தில் மகிமை வாசமா
யிருக்கும்படி, அவருடைய இரட்சிப்பு
அவருக்குப் பயந்தவர்களுக்குச் சமீபமா
10 யிருக்கிறது.—கிருபையும் சத்தியமும் ஒன்
றையொன்று சந்திக்கும், நீதியும் சமாதான
மும் ஒன்றையொன்று முத்தஞ்செய்யும்.—
11 சத்தியம் பூமியிலிருந்து முளைக்கும், நீதி
12 வானத்திலிருந்து தாழப்பார்க்கும்.—கர்த்தர்
நன்மையானதைத் தருவார்; நம்முடைய
13 தேசமும் தன் பலனைக் கொடுக்கும்.—நீதி
அவருக்கு முன்னாகச் சென்று, அவருடைய
அடிச்சுவடுகளின் வழியிலே நம்மை நிறு
த்தும்.

## 86 (தாவீதின் விண்ணப்பம்.)

கர்த்தாவே, உமது செவியைச்சாய்த்து,
என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்;
நான் சிறுமையும் எளிமையுமானவன்.—
2 என் ஆத்துமாவைக் காத்தருளும், நான்
பக்தியுள்ளவன்; என் தேவனே, உம்
மை நம்பியிருக்கிற உமது அடியேனை நீர்
3 இரட்சியும்.—ஆண்டவரே, எனக்கு இரங்
கும், நாடோறும் உம்மை நோக்கிக் கூப்
4 பிடுகிறேன்.—உமது அடியேனுடைய ஆத்
துமாவை மகிழ்ச்சியாக்கும்; ஆண்டவரே,
உம்மிடத்தில் என் ஆத்துமாவை உயர்த்து
5 கிறேன். — ஆண்டவரே, நீர் நல்லவரும்,
மன்னிக்கிறவரும், உம்மை நோக்கிக் கூப்
பிடுகிற யாவர்மேலும் கிருபை மிகுந்த
வருமாயிருக்கிறீர்.—கர்த்தாவே, என் ஜெ 6
பத்திற்குச் செவிகொடுத்து, என் விண்ணப்
பங்களின் சத்தத்தைக் கவனியும்.—நான் 7
துயரப்படுகிறநாளில் உம்மை நோக்கிக்
கூப்பிடுவேன்; நீர் என்னைக் கேட்டருளு
வீர்.

ஆண்டவரே, தேவர்களுக்குள்ளே உம 8
க்கு நிகருமில்லை; உம்முடைய கிரியைக
ளுக்கு ஒப்புமில்லை. — ஆண்டவரே, நீர் 9
உண்டாக்கின எல்லா ஜாதிகளும் வந்து,
உமக்கு முன்பாகப் பணிந்து, உமது நா
மத்தை மகிமைப்படுத்துவார்கள்.—தேவ 10
ரீர் மகத்துவமுள்ளவரும் அதிசயங்களைச்
செய்கிறவருமாயிருக்கிறீர்; நீர் ஒருவரே
தேவன்.

கர்த்தாவே, உமது வழியை எனக்குப் 11
போதியும், நான் உமது சத்தியத்திலே நடப்
பேன்; நான் உமது நாமத்திற்குப் பயந்திருக்
கும்படி என் இருதயத்தை ஒருமுகப்படுத்
தும்.—என் தேவனாகிய ஆண்டவரே, உம் 12
மை என் முழு இருதயத்தோடும் துதித்து,
உமது நாமத்தை என்றென்றைக்கும் மகி
மைப்படுத்துவேன்.—நீர் எனக்குப் பாரா 13
ட்டின உமது கிருபை பெரியது; என் ஆத்
துமாவைத் தாழ்ந்த பாதாளத்திற்குத் தப்பு
வித்தீர்.

தேவனே, அகங்காரிகள் எனக்கு விரோ 14
தமாய் எழும்புகிறார்கள், கொடுமைக்கார
ராகிய கூட்டத்தார் என் பிராணனை வாங்
கத் தேடுகிறார்கள், உம்மைத் தங்களுக்கு
முன்பாக நிறுத்தி நோக்காதிருக்கிறார்கள்.—
ஆனாலும் ஆண்டவரே, நீர் மனவுருக்க 15
மும், இரக்கமும், நீடிய பொறுமையும்,
பூரண கிருபையும், சத்தியமுமுள்ள தே
வன். — என்மேல் நோக்கமாகி, எனக்கு 16
இரங்கும்; உமது வல்லமையை உமது
அடியானுக்கு அருளி உமது அடியாளின்
குமாரனை இரட்சியும்.—கர்த்தாவே, நீர் 17
எனக்குத் துணைசெய்து என்னைத் தேற்றுகி
றதை என் பகைஞர் கண்டு வெட்கப்படும்
படிக்கு, எனக்கு அநுகூலமாக ஒரு அடை
யாளத்தைக் காண்பித்தருளும்.

## 87 (கோராகின் புத்திரருக்கு ஒப்புவிக்கப்பட்ட பாட்டாகிய சங்கீதம்.)

அவர் அஸ்திபாரம் பரிசுத்த பர்வதங்
களில் இருக்கிறது. — கர்த்தர் யாக்கோ 2
பின் வாசஸ்தலங்களெல்லாவற்றைப்பார்
க்கிலும் சீயோனின் வாசல்களில் பிரியமா
யிருக்கிறார்.—தேவனுடைய நகரமே! உன் 3

லைக்குறித்து மகிமையான விசேஷங்கள் வசனிக்கப்படும். (சேலா.)
4 என்னை அறிந்தவர்களுக்குள்ளே ராகாபையும் பாபிலோனையும் குறித்துப் பேசுவேன்; இதோ, பெலிஸ்தியரிலும், தீரியரிலும், எத்தியோப்பியரிலுங்கூட, இன்னான்
5 அங்கே பிறந்தான் என்றும்;—சீயோனைக் குறித்து, இன்னான் இன்னான் அதிலே பிறந்தானென்றும் சொல்லப்படும்; உன்னதமானவர்தாமே அதை ஸ்திரப்படுத்துவார்.-
6 கர்த்தர் ஜனங்களைப் பேரெழுதும்போது, இன்னான் அதிலே பிறந்தான் என்று அவர்
7 களைத் தொகையிடுவார். (சேலா.)—எங்கள் ஊற்றுகளெல்லாம் உன்னில் இருக்கிறது என்று பாடுவாரும் ஆடுவாரும் ஏகமாய்ச் சொல்லுவார்கள்.

88 (மகலாத்லேயனோத் வாத்தியத்தில் வாசிக்க கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட எஸ்ராகியனாகிய ஏமானின் போதக சங்கீதம்.)

என் இரட்சிப்பின் தேவனாகிய கர்த்தாவே, இரவும் பகலும் உம்மை நோக்
2 கிக் கூப்பிடுகிறேன்.—என் விண்ணப்பம் உமது சமுகத்தில் வருவதாக; என் கூப்பிடுதலுக்கு உமது செவியைச் சாய்த்தருளும்.-
3 என் ஆத்துமா துக்கத்தால் நிறைந்திருக்கிறது; என் ஜீவன் பாதாளத்திற்குச் சமீப
4 மாய் வந்திருக்கிறது.—நான் குழியில் இறங்குகிறவர்களோடு எண்ணப்பட்டு, பெலனற்ற
5 மனுஷனைப்போலானேன். — மரித்தவர்களில் ஒருவனைப்போல் நெகிழப்பட்டிருக்கிறேன்; நீர் இனி ஒருபோதும் நினையாதபடி, உமது கையால் அறுப்புண்டுபோய்ப் பிரேதக்குழிகளிலே கிடக்கிறவர்
6 களைப்போலானேன்.—என்னைப் பாதாளக் குழியிலும் இருளிலும் ஆழங்களிலும் வை
7 த்தீர். — உம்முடைய கோபம் என்னை இருத்துகிறது; உம்முடைய அலைகள் எல்லாவற்றினாலும் என்னை வருத்தப்படுத்து
8 கிறீர். (சேலா.)—எனக்கு அறிமுகமானவர்களை எனக்குத் தூரமாக விலக்கி, அவர்களுக்கு என்னை அருவருப்பாக்கினீர்; நான் வெளியே புறப்படக்கூடாதபடி அடைபட்
9 டிருக்கிறேன். — துக்கத்தினால் என் கண் தொய்ந்துபோயிற்று; கர்த்தாவே, அநுதினமும் நான் உம்மை நோக்கிக் கூப்பிட்டு, உமக்கு நேராக என் கைகளை விரிக்கிறேன்.
10 மரித்தவர்களுக்கு அதிசயங்களைச் செய்வீரோ? செத்துப்போன வீரர் எழுந்து உம்மைத் துதிப்பார்களோ? (சேலா.) — பிரே 11
தக்குழியில் உமது கிருபையும், அழிவில் உமது உண்மையும் விவரிக்கப்படுமோ?—
இருளில் உமது அதிசயங்களும், மறதியின் 12
பூமியில் உமது நீதியும் அறியப்படுமோ?—
நானோ கர்த்தாவே, உம்மை நோக்கிக் 13
கூப்பிடுகிறேன்; காலையிலே என் விண்ணப்பம் உமக்கு முன்பாக வரும்.

கர்த்தாவே, ஏன் என் ஆத்துமாவைத் 14
தள்ளிவிடுகிறீர்? ஏன் உமது முகத்தை எனக்கு மறைக்கிறீர்? — சிறுவயதுமுதல் 15
நான் சிறுமைப்பட்டவனும் மாண்டுபோகிறவனுமாயிருக்கிறேன்; உம்மால் வரும் திகில்கள் என்மேல் சுமந்திருக்கிறது, நான் மனங்கலங்குகிறேன்.—உம்முடைய எரிச் 16
சல்கள் என்மேல் புரண்டுபோகிறது; உம்முடைய பயங்கரங்கள் என்னை அதம் பண்ணுகிறது. — அவைகள் நாடோறும் 17
தண்ணீரைப்போல் என்னைச் சூழ்ந்து, ஏகமாய் என்னை வளைந்துகொள்ளுகிறது. —
சிநேகிதனையும் தோழனையும் எனக்குத் தூர 18
மாக விலக்கினீர்; எனக்கு அறிமுகமானவர்கள் மறைந்துபோனார்கள்.

(எஸ்ராகியனாகிய ஏத்தானின் மஸ்கீல் என்னும் 89
போதக சங்கீதம்.)

கர்த்தரின் கிருபைகளை என்றென்றைக்கும் பாடுவேன்; உமது உண்மையைத் தலைமுறை தலைமுறையாக என் வாயினால் அறிவிப்பேன். — கிருபை என்றென்றைக்கும் 2
ஸ்திரப்பட்டிருக்கும்; உமது உண்மையை வானங்களிலே ஸ்தாபிப்பீர் என்றேன்.—
என்னால் தெரிந்துகொள்ளப்பட்டவனோ 3
டே உடன்படிக்கைபண்ணி, என் தாசனாகிய தாவீதை நோக்கி:—என்றென்றைக் 4
கும் உன் சந்ததியை நிலைப்படுத்தி, தலைமுறை தலைமுறையாக உன் சிங்காசனத்தை ஸ்தாபிப்பேன் என்று ஆணையிட்டேன் என்றீர். (சேலா.)

கர்த்தாவே, வானங்கள் உம்முடைய 5
அதிசயங்களைத் துதிக்கும், பரிசுத்தவான்களின் சபையிலே உம்முடைய உண்மையும் விளங்கும். — ஆகாயமண்டலத்தில் 6
கர்த்தருக்கு நிகரானவர் யார்? பலவான்களின் புத்திரரில் கர்த்தருக்கு ஒப்பானவர் யார்? — தேவன் பரிசுத்தவான்களுடைய 7
ஆலோசனைச்சபையில் மிகவும் பயப்படத்தக்கவர், தம்மைச் சூழ்ந்திருக்கிற அனைவராலும் அஞ்சப்படத்தக்கவர்.-சேனைகளின் 8
தேவனாகிய கர்த்தாவே, உம்மைப்போல் வல்லமையுள்ள கர்த்தர் யார்? உம்மு

டைய உண்மை உம்மைச் சூழ்ந்திருக்கி
9 றது.-தேவரீர் சமுத்திரத்தின் பெருமையை
ஆளுகிறவர்; அதின் அலைகள் எழும்பும்
போது அலைகளை அடங்கப்பண்ணுகிறீர்.-
10 நீர் ராகாபை வெட்டுண்ட ஒருவனைப்போல்
நொறுக்கினீர்; உமது வல்லமையான புயத்
தினால் உம்முடைய சத்துருக்களைச் சிதற
11 டித்தீர்.—வானங்கள் உம்முடையது, பூமி
யும் உம்முடையது, பூலோகத்தையும்
அதிலுள்ள யாவையும் நீரே அஸ்திபாரப்
12 படுத்தினீர்.—வடக்கையும் தெற்கையும் நீர்
உண்டாக்கினீர்; தாபோரும் எர்மோனும்
உம்முடைய நாமம் விளங்கக் கெம்பீரிக்
13 கும்.—உமக்கு வல்லமையுள்ள புயமிருக்
கிறது; உம்முடைய கரம் பராக்கிரமமுள்
ளது; உம்முடைய வலதுகரம் உன்னத
14 மானது.-நீதியும் நியாயமும் உம்முடைய
சிங்காசனத்தின் ஆதாரம்; கிருபையும் சத்
தியமும் உமக்கு முன்பாக நடக்கும்.—
15 கெம்பீர சத்தத்தை அறியும் ஜனங்கள்
பாக்கியமுள்ளவர்கள்; கர்த்தாவே, அவர்
கள் உம்முடைய முகத்தின் வெளிச்சத்
16 தில நடப்பார்கள்.—அவர்கள் உம்முடைய
நாமத்தில் நாடோறுங் களிகூர்ந்து, உம்
முடைய நீதியால் உயர்ந்திருப்பார்கள்.—
17 நீரே அவர்கள் பலத்தின் மகிமையாயிருக்
கிறீர்; உம்முடைய தயவினால் எங்கள்
18 கொம்பு உயரும். — கர்த்தரால் எங்கள்
கேடகமும், இஸ்ரவேலின் பரிசுத்தரால்
எங்களுடைய ராஜாவும் உண்டு.

19 அப்பொழுது நீர் உம்முடைய பக்தனுக்
குத் தரிசனமாகி: சகாயஞ்செய்யத்தக்க
சத்தியை ஒரு சவுரியவான்மேல் வைத்து,
ஜனத்தில் தெரிந்துகொள்ளப்பட்டவனை
20 உயர்த்தினேன்.—என் தாசனாகிய தாவீதைக்
கண்டுபிடித்தேன்; என் பரிசுத்த தைலத்தி
னால் அவனை அபிஷேகம்பண்ணினேன்.—
21 என் கை அவனோடே உறுதியாயிருக்கும்;
22 என் புயம் அவனைப் பலப்படுத்தும்.—சத்
துரு அவனை நெருக்குவதில்லை; நியாயக்
கேட்டின் மகன் அவனை ஒடுக்குவதில்லை.-
23 அவன் சத்துருக்களை அவனுக்கு முன்பாக
மடங்கடித்து, அவனைப் பகைக்கிறவர்களை
24 வெட்டுவேன்.—என் உண்மையும் என்
கிருபையும் அவனோடிருக்கும்; என் நாமத்
25 தினால் அவன் கொம்பு உயரும்.—அவன்
கையைச் சமுத்திரத்தின்மேலும், அவன்
வலதுகரத்தை ஆறுகள்மேலும் ஆளும்
26 படி வைப்பேன்.—அவன் என்னை நோக்
கி: நீர் என் பிதா, என் தேவன், என் இரட்
சிப்பின் கன்மலையென்று சொல்லுவான்.—
நான் அவனை எனக்கு முதற்பேறானவனும், 27
பூமியின் ராஜாக்களைப்பார்க்கிலும் மகா
உயர்ந்தவனுமாக்குவேன்.—என் கிருபை 28
யை என்றென்றைக்கும் அவனுக்காகக்
காப்பேன்; என் உடன்படிக்கை அவனுக்
காக உறுதிப்படுத்தப்படும்.—அவன் சந் 29
ததி என்றென்றைக்கும் நிலைத்திருக்கவும்,
அவன் ராஜாசனம் வானங்களுள்ளமட்டும்
நிலைநிற்கவும் செய்வேன்.—அவன் பிள்ளை 30
கள் என் நியாயங்களின்படி நடவாமல்,
என் வேதத்தை விட்டு விலகி;—என் கட் 31
டளைகளைக் கைக்கொள்ளாமல், என் நிய
மங்களை மீறி நடந்தால்;—அவர்கள் மீறு 32
தலை மிலாறினாலும், அவர்கள் அக்கிரமத்
தை வாதைகளினாலும் தண்டிப்பேன்.—
ஆனாலும் என் கிருபையை அவனை விட்டு 33
விலக்காமலும், என் உண்மையில் பிச
காமலும் இருப்பேன்.—என் உடன்படிக் 34
கையை மீறாமலும், என் உதடுகள் விளம்
பினதை மாற்றாமலும் இருப்பேன்.—ஒரு 35
விசை என் பரிசுத்தத்தின்பேரில் ஆணை
யிட்டேன். தாவீதுக்கு நான் பொய்சொல்
லேன்.—அவன் சந்ததி என்றென்றைக்கும் 36
இருக்கும்; அவன் சிங்காசனம் சூரியனைப்
போல எனக்கு முன்பாக நிலைநிற்கும்.—
சந்திரனைப்போல அது என்றென்றைக்கும் 37
உறுதியாயும், ஆகாய மண்டலத்துச் சாட்
சியைப்போல் உண்மையாயும் இருக்கும்
என்று விளம்பினீர். (சேலா.)

ஆனாலும் நீர் எங்களை வெறுத்துத் தள்ளி 38
விட்டீர்; நீர் அபிஷேகம்பண்ணுவித்தவன்
மேல் உக்கிரமானீர்.—உமது அடியானு 39
டன் நீர் பண்ணின உடன்படிக்கையை
ஒழித்துவிட்டு, அவன் கிரீடத்தைத் தரை
யிலே தள்ளி அவமானப்படுத்தினீர். —
அவன் மதில்களையெல்லாம் தகர்த்துப்போ 40
ட்டு, அவன் அரணான ஸ்தலங்களைப் பா
ழாக்கினீர்.—வழிநடக்கிற யாவரும் அவ 41
னைக் கொள்ளையிடுகிறார்கள்; தன் அயலா
ருக்கு நிந்தையானான்.—அவன் சத்துருக் 42
களின் வலதுகையை நீர் உயர்த்தி, அவன்
விரோதிகள் யாவரும் சந்தோஷிக்கும்படி
செய்தீர்.—அவன் பட்டயத்தின் கருக்கை 43
மழுக்கிப்போட்டு, அவனை யுத்தத்தில் நிற்
காதபடி செய்தீர்.—அவன் மகிமையை 44
அற்றுப்போகப்பண்ணி, அவன் சிங்காசனத்
தைத் தரையிலே தள்ளினீர். — அவன் வா 45
லிபநாட்களைக் குறுக்கி, அவனை வெட்கத்
தால் மூடினீர். (சேலா.)

46 எதுவரைக்கும், கர்த்தாவே! நீர் என்றைக்கும் மறைந்திருப்பீரோ? உமது கோ
47 பம் அக்கினியைப்போல எரியுமோ?-என் ஜீவன் எவ்வளவு நிலையற்றது என்பதை நினைத்தருளும்; மனுபுத்திரர் யாவரையும் வீணாகச் சிருஷ்டிக்கவேண்டியதென்ன?--
48 மரணத்தைக் காணாமல் உயிரோடிருப்பவன் யார்? தன் ஆத்துமாவைப் பாதாளவல்லடிக்கு விலக்கிவிடுகிறவன் யார்? (சேலா.)
49 ஆண்டவரே, நீர் தாவீதுக்கு உம்முடைய உண்மையைக்கொண்டு சத்தியம்பண்ணின உமது பூர்வ கிருபைகள் எங்
50 கே? — ஆண்டவரே, உம்முடைய சத்துருக்கள் உம்முடைய ஊழியக்காரரையும், நீர் அபிஷேகம் பண்ணினவனின் காலடி
51 களையும் நிந்திக்கிறபடியினால், — கர்த்தாவே, உமது அடியார் சுமக்கும் நிந்தையையும், வலுமையான ஜனங்களெல்லாராலும் நான் என் மடியில் சுமக்கும் என்
52 நிந்தையையும் நினைத்தருளும். — கர்த்தருக்கு என்றென்றைக்கும் ஸ்தோத்திரமுண்டாவதாக. ஆமென், ஆமென்.

90 (தேவனுடைய மனிதனாகிய மோசேயின் ஜெபம்.) ஆண்டவரே, தேவரீர் தலைமுறை தலைமுறையாக எங்களுக்கு அடைக்கலமான
2 வர்.—பர்வதங்கள் தோன்றுமுன்னும், நீர் பூமியையும் உலகத்தையும் உருவாக்குமுன்னும், நீரே அநாதியாய் என்றென்றைக்கும் தேவனாயிருக்கிறீர்.
3 நீர் மனுஷரை நிர்த்தூளியாக்கி, மனுபுத்திரரே, திரும்புங்கள் என்கிறீர். —
4 உமது பார்வைக்கு ஆயிரம் வருஷம் நேற்றுக்கழிந்த நாள்போலவும் இராச்சாமம்
5 போலவும் இருக்கிறது.— அவர்களை வெள்ளம்போல் வாரிக்கொண்டுபோகிறீர்; நித்திரைக்கு ஒத்திருக்கிறார்கள்; காலையிலே முளைக்கிற புல்லுக்கு ஒப்பாயிருக்கிறார்
6 கள்.— அது காலையிலே முளைத்துப் பூத்து, மாலையிலே அறுப்புண்டு உலர்ந்துபோம்.-
7 நாங்கள் உமது கோபத்தினால் அழிந்து, உமது உக்கிரத்தினால் கலங்கிப்போகிறோம்.
8 எங்கள் அக்கிரமங்களை உமக்கு முன்பாகவும், எங்கள் அந்தரங்க பாவங்களை உமது முகத்தின் வெளிச்சத்திலும் நிறுத்தி
9 னீர். — எங்கள் நாட்களெல்லாம் உமது கோபத்தால் போய்விட்டது; ஒரு கதையைப்போல் எங்கள் வருஷங்களைக் கழித்
10 துப்போட்டோம் — எங்கள் ஆயுசுநாட்கள் எழுபது வருஷம், பெலத்தின் மிகுதியால் எண்பது வருஷமாயிருந்தாலும், அதின் மேன்மையானது வருத்தமும் சஞ்சலமுமே; அது சீக்கிரமாய்க் கடந்துபோகிறது, நாங்களும் பறந்துபோகிறோம்.—
11 உமது கோபத்தின் வல்லமையையும், உமக்குப் பயப்படத்தக்கவிதமாய் உமது உக்கிரத்தையும் அறிந்துகொள்ளுகிறவன் யார்?
12 நாங்கள் ஞான இருதயமுள்ளவர்களாகும்படி, எங்கள் நாட்களை எண்ணும் அறிவை எங்களுக்குப் போதித்தருளும். —
13 கர்த்தாவே, திரும்பி வாரும், எதுவரைக்கும் கோபமாயிருப்பீர்? உமது அடியாருக்காகப் பரிதபியும். —
14 நாங்கள் எங்கள் வாழ்நாளெல்லாம் களிகூர்ந்து மகிழும்படி, காலையிலே எங்களை உமது கிருபையால் திருப்தியாக்கும்.—
15 தேவரீர் எங்களைச் சிறுமைப்படுத்தின நாட்களுக்கும், நாங்கள் துன்பத்தைக் கண்ட வருஷங்களுக்கும் சரியாய் எங்களை மகிழ்ச்சியாக்கும் —
16 உமது கிரியை உமது ஊழியக்காரருக்கும், உமது மகிமை அவர்கள் பிள்ளைகளுக்கும் விளங்குவதாக. —
17 எங்கள் தேவனாகிய ஆண்டவரின் பிரியம் எங்கள்மேல் இருப்பதாக; எங்கள் கைகளின் கிரியையை எங்களிடத்தில் உறுதிப்படுத்தும்; ஆம், எங்கள் கைகளின் கிரியையை எங்களிடத்தில் உறுதிப்படுத்தியருளும்

91 உன்னதமானவரின் மறைவிலிருக்கிறவன் சர்வவல்லவருடைய நிழலில் தங்குவான்.—
2 நான் கர்த்தரை நோக்கி: நீர் என் அடைக்கலம், என் கோட்டை, என் தேவன், நான் நம்பியிருக்கிறவர் என்று சொல்லுவேன்.—
3 அவர் உன்னை வேடனுடைய கண்ணிக்கும், பாழாக்கும் கொள்ளைநோய்க்கும் தப்புவிப்பார். —
4 அவர் தமது சிறகுகளாலே உன்னை மூடுவார்; அவர் செட்டைகளின் கீழே அடைக்கலம் புகுவாய்; அவருடைய சத்தியம் உனக்குப் பரிசையும் கேடகமுமாகும்.—
5 இரவில் உண்டாகும் பயங்கரத்துக்கும், பகலில் பறக்கும் அம்புக்கும்;—
6 இருளில் நடமாடும் கொள்ளைநோய்க்கும், மத்தியானத்தில் பாழாக்கும் சங்காரத்துக்கும் பயப்படாதிருப்பாய். —
7 உன் பக்கத்தில் ஆயிரம்பேரும், உன் வலதுபுறத்தில் பதினாயிரம்பேரும் விழுந்தாலும், அது உன்னை அணுகாது.—
8 உன் கண்களால்மாத்திரம் நீ அதைப் பார்த்து, துன்மார்க்கருக்கு வரும் பலனைக்

9 காண்பாய். — எனக்கு அடைக்கலமாயி
ருக்கிற உன்னதமான கர்த்தரை உனக்
10 குத் தாபரமாகக்கொண்டாய்.—ஆகையால்
பொல்லாப்பு உனக்கு நேரிடாது, வாதை
11 உன் கூடாரத்தை அணுகாது.—உன் வழி
களிலெல்லாம் உன்னைக் காக்கும்படி,
உனக்காகத் தம்முடைய தூதர்களுக்குக்
12 கட்டளையிடுவார்.—உன் பாதம் கல்லில்
இடறாதபடிக்கு அவர்கள் உன்னைத் தங்
கள் கைகளில் ஏந்திக்கொண்டு போவார்
13 கள். — சிங்கத்தின்மேலும் விரியன்பாம்
பின்மேலும் நீ நடந்து, பாலசிங்கத்தையும்
வலுசர்ப்பத்தையும் மிதித்துப்போடுவாய்.
14 அவன் என்னிடத்தில் வாஞ்சையாயிருக்
கிறபடியால் அவனை விடுவிப்பேன்; என்
நாமத்தை அவன் அறிந்திருக்கிறபடியால்
அவனை உயர்ந்த அடைக்கலத்திலே வைப்
15 பேன்.—அவன் என்னை நோக்கிக் கூப்பிடு
வான், நான் அவனுக்கு மறுஉத்தரவு அரு
ளிச்செய்வேன்; ஆபத்தில் நானே அவனோ
டிருந்து, அவனைத் தப்புவித்து, அவனைக்
16 கனப்படுத்துவேன். — நீடித்தநாட்களால்
அவனைத் திருப்தியாக்கி, என் இரட்சிப்பை
அவனுக்குக் காண்பிப்பேன்.

92 (ஓய்வுநாளின் பாட்டாகிய சங்கீதம்.)
கர்த்தரைத் துதிப்பதும், உன்னதமான
வரே, உமது நாமத்தைக் கீர்த்தனம் பண்
2 ணுவதும்,-பத்துநரம்பு வீணையினாலும், தம்
புருவினாலும், தியானத்தோடு வாசிக்கும் சுர
3 மண்டலத்தினாலும், — காலையிலே உமது
கிருபையையும், இரவிலே உமது சத்தி
யத்தையும் அறிவிப்பதும் நலமாயிருக்
4 கும்.—கர்த்தாவே, உமது செய்கைகளால்
என்னை மகிழ்ச்சியாக்கினீர், உமது கரத்
தின் கிரியைகளினிமித்தம் ஆனந்த சத்த
மிடுவேன்.
5 கர்த்தாவே, உமது கிரியைகள் எவ்
வளவு மகத்துவமானவைகள்! உமது யோ
6 சனைகள் மகா ஆழமானவைகள்.—மிருக
குணமுள்ள மனுஷன் அதை அறியான்;
7 மூடன் அதை உணரான்.—துன்மார்க்கர்
புல்லைப்போலே தழைத்து, அக்கிரமக்காரர்
யாவரும் செழிக்கும்போது, அது அவர்கள்
என்றென்றைக்கும் அழிந்து போவதற்கே
8 ஏதுவாகும்.—கர்த்தாவே, நீர் என்றென்
றைக்கும் உன்னதமானவராயிருக்கிறீர்.—
9 கர்த்தாவே, உமது சத்துருக்கள் அழிவார்
கள்; உமது சத்துருக்கள் அழிந்தேபோ
வார்கள்; சகல அக்கிரமக்காரரும் சிதறு
10 ண்டுபோவார்கள். — என் கொம்பைக்
காண்டாமிருகத்தின் கொம்பைப்போல உ
யர்த்துவீர்; புது எண்ணெயால் அபிஷேகம்
11 பண்ணப்படுகிறேன்.—என் சத்துருக்களு
க்கு நேரிடுவதை என் கண் காணும்; எனக்கு
விரோதமாய் எழும்புகிற துன்மார்க்கருக்கு
12 நேரிடுவதை என் காது கேட்கும்.-நீதிமான்
பனையைப்போல் செழித்து, லீபனோனி
லுள்ள கேதுருவைப்போல் வளருவான்.—
13 கர்த்தருடைய ஆலயத்திலே நாட்டப்பட்
டவர்கள் எங்கள் தேவனுடைய பிராகாரங்
14 களில் செழித்திருப்பார்கள்.- கர்த்தர் உத்த
மரென்றும், என் கன்மலையாகிய அவரிடத்
தில் அநீதியில்லையென்றும், விளங்கப்பண்
15 ணும்படி,—அவர்கள் முதிர்வயதிலும் கனி
தந்து, புஷ்டியும் பசுமையுமாயிருப்பார்
கள்.

93 கர்த்தர் ராஜரிகம் பண்ணுகிறார், மக
த்துவத்தை அணிந்துகொண்டிருக்கிறார்;
கர்த்தர் பராக்கிரமத்தை அணிந்து, அவர்
அதைக் கச்சையாகக் கட்டிக்கொண்டிருக்
கிறார்; ஆதலால் பூச்சக்கரம் அசையாதபடி
2 நிலைபெற்றிருக்கிறது.—உமது சிங்காசனம்
பூர்வமுதல் உறுதியானது; நீர் அநாதியா
3 யிருக்கிறீர்.—கர்த்தாவே, நதிகள் எழும்
பின, நதிகள் இரைச்சலிட்டு எழும்பின;
4 நதிகள் அலைதிரண்டு எழும்பின.-திரளான
...ர்களின் இரைச்சலைப்பார்க்கிலும்,
...்தின் வலுமையான அலைகளைப்
பார்க்கிலும், கர்த்தர் உன்னதத்திலே வல்ல
5 மையுள்ளவர்.—உமது சாட்சிகள் மிகவும்
உண்மையுள்ளவைகள்; கர்த்தாவே, பரி
சுத்தமானது நித்தியநாளாக உமது ஆல
யத்தின் அலங்காரமாயிருக்கிறது.

94 நீதியைச் சரிக்கட்டுகிற தேவனாகிய
கர்த்தாவே, நீதியைச் சரிக்கட்டுகிற தேவ
2 னே, பிரகாசியும்.—பூமியின் நியாயாதிபதி
யே, நீர் எழுந்து, பெருமைக்காரருக்குப்
பதிலளியும்.
3 கர்த்தாவே, துன்மார்க்கர் எதுவரைக்
கும் மகிழ்ந்து, துன்மார்க்கர் எதுவரைக்
4 கும் களிகூர்ந்திருப்பார்கள்?—எதுவரைக்
கும் அக்கிரமக்காரர் யாவரும் வாயாடி,
கடினமாய்ப் பேசி, பெருமைபாராட்டுவார்
5 கள்?—கர்த்தாவே, அவர்கள் உமது ஜனத்
தை நொறுக்கி, உமது சுதந்தரத்தை ஒடு
6 க்குகிறார்கள்.-விதவையையும் பரதேசியை
யும் கொன்று, திக்கற்ற பிள்ளைகளைக் கொலை
7 செய்து:—கர்த்தர் பாரார், யாக்கோபின்
தேவன் கவனியார் என்று சொல்லுகிறார்
கள்.

8 ஜனத்தில் மிருககுணமுள்ளவர்களே, உணர்வடையுங்கள்; மூடரே, எப்பொழுது 9 புத்திமான்களாவீர்கள்?—காதை உண்டாக்கினவர் கேளாரோ? கண்ணை உருவாக்கினவர் 10 காணாரோ?—ஜாதிகளைத் தண்டிக்கிறவர் கடிந்துகொள்ளாரோ? மனுஷனுக்கு அறிவைப் போதிக்கிறவர் அறியாரோ?— 11 மனுஷனுடைய யோசனைகள் வீணென்று கர்த்தர் அறிந்திருக்கிறார்.

12 கர்த்தாவே, துன்மார்க்கனுக்குக் குழி வெட்டப்படும்வரைக்கும், நீர் தீங்கு நாட்13 களில் அமர்ந்திருக்கப்பண்ணி,—சிட்சித்து, உம்முடைய வேதத்தைக்கொண்டு போ14 திக்கிற மனுஷன் பாக்கியவான்.—கர்த்தர் தம்முடைய ஜனத்தை நெகிழவிடாமலும், தம்முடைய சுதந்தரத்தைக் கைவிடாம15 லும் இருப்பார்.—நியாயம் நீதியினிடமாகத் திரும்பும்; செம்மையான இருதயத்தார் யாவரும் அதைப் பின்பற்றுவார்கள்.

16 துன்மார்க்கருக்கு விரோதமாய் என் பட்சத்தில் எழும்புகிறவன் யார்? அக்கிரமக்காரருக்கு விரோதமாய் என் பட்சத்தில் 17 நிற்பவன் யார்?—கர்த்தர் எனக்குத் துணையாயிராவிட்டால், என் ஆத்துமா சீக்கிரமாய் மவுனத்தில் வாசம்பண்ணியிருக்18 கும்.—என் கால் சறுக்குகிறது என்று நான் சொல்லும்போது கர்த்தாவே, உமது கிரு19 பை என்னைத் தாங்குகிறது.—என் உள்ளத்தில் விசாரங்கள் பெருகுகையில், உம்முடைய ஆறுதல்கள் என் ஆத்துமாவைத் தேற்றுகிறது.

20 தீமையைக் கட்டளையினால் பிறப்பிக்கிற கொடுங்கோலாசனம் உமக்கு இசைந்திருக்21 குமோ?—அவர்கள் நீதிமானுடைய ஆத்துமாவுக்கு விரோதமாய்க் கூட்டங்கூடி, குற்றமில்லாத இரத்தத்தைக் குற்றப்படு22 த்துகிறார்கள்.—கர்த்தரோ எனக்கு அடைக்கலமும், என் தேவன் நான் நம்பியிருக்23 கிற கன்மலையுமாயிருக்கிறார். — அவர்களுடைய அக்கிரமத்தை அவர்கள்மேல் திருப்பி, அவர்களுடைய பொல்லாப்பினிமித்தம் அவர்களைச் சங்கரிப்பார்; நம்முடைய தேவனாகிய கர்த்தரே அவர்களைச் சங்கரிப்பார்.

95 கர்த்தரைக் கெம்பீரமாய்ப் பாடி, நம்முடைய இரட்சணியக் கன்மலையைச் சங்கீர்த்தனம் பண்ணக்கடவோம் வாருங்2 கள். — துதித்தலுடனே அவர் சந்நிதிக்கு முன்பாக வந்து, சங்கீதங்களால் அவரை ஆர்ப்பரித்துப் பாடக்கடவோம்.

3 கர்த்தரே மகா தேவனும், எல்லா தேவர்களுக்கும் மகாராஜனுமாயிருக்கிறார்.—4 பூமியின் ஆழங்கள் அவர் கையில் இருக்கிறது; பர்வதங்களின் உயரங்களும் அவ5 ருடையவைகள்.—சமுத்திரம் அவருடையது, அவரே அதை உண்டாக்கினார்; வெட்டாந்தரையையும் அவருடைய கரம் உருவாக்கிற்று.

6 நம்மை உண்டாக்கின கர்த்தருக்கு முன்பாக நாம் பணிந்து குனிந்து முழங்காற்படியிடக்கடவோம் வாருங்கள்.— 7 அவர் நம்முடைய தேவன்; நாம் அவர் மேய்ச்சலின் ஜனங்களும், அவர் கைக்குள்ளான 8 ஆடுகளுமாமே.—இன்று அவருடைய சத்தத்தைக் கேட்பீர்களாகில், வனாந்தரத்தில் கோபம் மூட்டினபோதும் சோதனைநாளிலும் நடந்ததுபோல, உங்கள் இருதயத்தைக் கடினப்படுத்தாதேயுங்கள்.—9 அங்கே உங்கள் பிதாக்கள் என்னைச் சோதித்து, என்னைப் பரீட்சைபார்த்து, என் கிரியையையும் கண்டார்கள். — 10 நாற்பது வருஷமாய் நான் அந்தச் சந்ததியை அரோசித்து, அவர்கள் வழுவிப்போகிற இருதயமுள்ள ஜனமென்றும், என்னுடைய வழிகளை அறியாதவர்களென்றும் சொல்லி,— 11 என்னுடைய இளைப்பாறுதலில் அவர்கள் பிரவேசிப்பதில்லையென்று, என்னுடைய கோபத்திலே ஆணையிட்டேன்.

96 கர்த்தருக்குப் புதுப்பாட்டைப் பாடுங்கள்; பூமியின் குடிகளே, எல்லாரும் கர்த்தரைப் பாடுங்கள். — 2 கர்த்தரைப் பாடி, அவருடைய நாமத்தை ஸ்தோத்திரித்து, நாளுக்குநாள் அவருடைய இரட்சிப்பைச் சுவிசேஷமாய் அறிவியுங்கள். — 3 ஜாதிகளுக்குள் அவருடைய மகிமையையும், சகல ஜனங்களுக்குள்ளும் அவருடைய அதிசயங்களையும் விவரித்துச் சொல்லுங்கள். — 4 கர்த்தர் பெரியவரும், மிகவும் ஸ்தோத்திரிக்கப்படத்தக்கவருமா யிருக்கிறார்; எல்லா தேவர்களிலும் பயப்படத்தக்க5 வர் அவரே.—சகல ஜனங்களுடைய தேவர்களும் விக்கிரகங்கள்தானே; கர்த்தரோ 6 வானங்களை உண்டாக்கினவர். — மகிமையும் கனமும் அவர் சமுகத்தில் இருக்கிறது, வல்லமையும் மகத்துவமும் அவர் பரிசுத்த ஸ்தலத்திலுள்ளது.

7 ஜனங்களின் வம்சங்களே, கர்த்தருக்கு மகிமையையும் வல்லமையையும் செலுத்துங்கள், கர்த்தருக்கே அதைச் செலுத்துங்கள். — 8 கர்த்தருக்கு அவருடைய நாமத்

திற்குரிய மகிமையைச் செலுத்தி, காணிக்கைகளைக் கொண்டுவந்து, அவருடைய 9 பிராகாரங்களில் பிரவேசியுங்கள்.—பரிசுத்த அலங்காரத்துடனே கர்த்தரைத் தொழுதுகொள்ளுங்கள்; பூலோகத்தாரே, நீங்கள் யாவரும் அவருக்கு முன்பாக நடுங் 10 குங்கள். — கர்த்தர் ராஜரிகம் பண்ணுகிறார், ஆகையால் பூச்சக்கரம் அசையாதபடி உறுதிப்பட்டிருக்கும்; அவர் ஜனங்களை நிதானமாய் நியாயந்தீர்ப்பார் என்று ஜாதிகளுக்குள்ளே சொல்லுங்கள்.

11 வானங்கள் மகிழ்ந்து, பூமி பூரிப்பாகி, சமுத்திரமும் அதின் நிறைவும் முழங்குவ 12 தாக.—நாடும் அதிலுள்ள யாவும் களிகூருவதாக; அப்பொழுது கர்த்தருக்கு முன்பாகக் காட்டுவிருட்சங்களெல்லாம் கெம்பீ 13 ரிக்கும்.—அவர் வருகிறார், அவர் பூமியை நியாயந்தீர்க்க வருகிறார்; அவர் பூலோகத்தை நீதியோடும், ஜனங்களைச் சத்தியத்தோடும் நியாயந்தீர்ப்பார்.

97 கர்த்தர் ராஜரிகம்பண்ணுகிறார்; பூமி பூரிப்பாகி, திரளான தீவுகள் மகிழக்கட 2 வது. — மேகமும் மந்தாரமும் அவரைச் சூழ்ந்திருக்கிறது; நீதியும் நியாயமும் அவ 3 ருடைய சிங்காசனத்தின் ஆதாரம்.—அக்கினி அவருக்கு முன்சென்று, சுற்றிலும் இருக்கிற அவருடைய சத்துருக்களைச் சுட்டெரிக்கிறது.

4 அவருடைய மின்னல்கள் பூச்சக்கரத்தைப் பிரகாசிப்பித்தது; பூமி அதைக் 5 கண்டு அதிர்ந்தது.—கர்த்தரின் பிரசன்னத்தினால் பர்வதங்கள் மெழுகுபோல உருகிற்று, சர்வ பூமியினுடைய ஆண்டவரின் பிரசன்னத்தினாலேயே உருகிப்போயிற்று.— 6 வானங்கள் அவருடைய நீதியை வெளிப்படுத்துகிறது; சகல ஜனங்களும் அவருடைய மகிமையைக் காண்கிறார்கள்.

7 சொரூபங்களை வணங்கி, விக்கிரகங்களைப்பற்றிப் பெருமைபாராட்டுகிற யாவரும் வெட்கப்பட்டுப் போவார்களாக; தேவர்களே, நீங்களெல்லாரும் அவரைத் தொழுது 8 கொள்ளுங்கள்.—சீயோன் கேட்டு மகிழ்ந்தது; கர்த்தாவே, உம்முடைய நியாயத்தீர்ப்புகளினிமித்தம் யூதாவின் குமாரத்தி 9 கள் களிகூர்ந்தார்கள்.—கர்த்தாவே, பூமி முழுவதுக்கும் நீர் உன்னதமானவர்; எல்லா தேவர்களிலும் நீரே மிகவும் உயர்ந்தவர்.

10 கர்த்தரில் அன்புகூருகிறவர்களே, தீமையை வெறுத்துவிடுங்கள்; அவர் தம்முடைய பரிசுத்தவான்களின் ஆத்துமாக்களைக் காப்பாற்றி, துன்மார்க்கரின் கைக்கு அவர்களைத் தப்புவிக்கிறார்.—நீதிமானுக்காக 11 வெளிச்சமும், செம்மையான இருதயத்தாருக்காக மகிழ்ச்சியும் விதைக்கப்பட்டிருக்கிறது. — நீதிமான்களே, கர்த்தருக் 12 குள் மகிழ்ந்து, அவருடைய பரிசுத்தத்தின் நினைவுகூருதலைக் கொண்டாடுங்கள்.

கர்த்தருக்குப் புதுப்பாட்டைப் பாடுங் 98 கள்; அவர் அதிசயங்களைச் செய்திருக்கிறார்; அவருடைய வலதுகரமும், அவருடைய பரிசுத்த புயமும், இரட்சிப்பை உண்டாக்கினது.—கர்த்தர் தமது இரட்சிப் 2 பைப் பிரஸ்தாபமாக்கி, தமது நீதியை ஜாதிகளுடைய கண்களுக்கு முன்பாக விளங்கப்பண்ணினார்.—அவர் இஸ்ரவேல் குடும் 3 பத்துக்காகத் தமது கிருபையையும் உண்மையையும் நினைவுகூர்ந்தார்; பூமியின் எல்லைகளெல்லாம் நமது தேவனுடைய இரட்சிப்பைக் கண்டது.

பூமியின் குடிகளே, நீங்களெல்லாரும் 4 கர்த்தரை நோக்கி ஆனந்தமாய் ஆர்ப்பரியுங்கள்; முழக்கமிட்டுக் கெம்பீரமாய்ப் பாடுங்கள்.-சுரமண்டலத்தால் கர்த்தரைக் 5 கீர்த்தனம்பண்ணுங்கள், சுரமண்டலத்தாலும் கீதசத்தத்தாலும் அவரைக் கீர்த்தனம் பண்ணுங்கள்.—கர்த்தராகிய ராஜாவின் 6 சமுகத்தில் பூரிகைகளாலும் எக்காளசத்தத்தாலும் ஆனந்தமாய் ஆர்ப்பரியுங்கள்.

சமுத்திரமும் அதின் நிறைவும், பூச்சக் 7 கரமும் அதின் குடிகளும் முழங்குவதாக.- கர்த்தருக்கு முன்பாக ஆறுகள் கைகொ 8 ட்டி, பர்வதங்கள் ஏகமாய்க் கெம்பீரித்துப் பாடக்கடவது அவர் பூமியை நியாயந் 9 தீர்க்க வருகிறார்; பூலோகத்தை நீதியோடும் ஜனங்களை நிதானத்தோடும் நியாயந்தீர்ப்பார்.

கர்த்தர் ராஜரிகம்பண்ணுகிறார், ஜனங் 99 கள் தத்தளிப்பார்களாக; அவர் கேருபீன்களின் மத்தியில் வீற்றிருக்கிறார், பூமி அசைவதாக. — கர்த்தர் சீயோனில் பெரிய 2 வர், அவர் எல்லா ஜனங்கள்மேலும் உயர்ந்தவர். — மகத்துவமும் பயங்கரமுமான 3 உமது நாமத்தை அவர்கள் துதிப்பார்களாக; அது பரிசுத்தமுள்ளது.

ராஜாவின் வல்லமை நீதியில் பிரியப்படு 4 கிறது, தேவரீர் நியாயத்தை நிலைநிறுத்துகிறீர்; நீர் யாக்கோபில் நியாயமும் நீதியும் செய்கிறீர்.—நம்முடைய தேவனாகிய கர்த் 5 தரை உயர்த்தி, அவர் பாதபடியிலே பணியுங்கள்; அவர் பரிசுத்தமுள்ளவர்.

6 அவருடைய ஆசாரியரில் மோசேயும் ஆரோனும், அவர் நாமத்தைப்பற்றிக் கூப்பிடுகிறவர்களில் சாமுவேலும், கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டார்கள்; அவர் அவர்களுக்கு மறுஉத்தரவு அருளினார். — 7 மேகஸ்தம்பத்திலிருந்து அவர்களோடே பேசினார்; அவர்கள் அவருடைய சாட்சிப் பிரமாணங்களையும் அவர் தங்களுக்குக் கொடுத்த கட்டளையையும் கைக்கொண்டார்கள். — 8 எங்கள் தேவனாகிய கர்த்தாவே, நீர் அவர்களுக்கு உத்தரவு அருளினீர்; நீர் அவர்கள் கிரியைகளினிமித்தம் நீதி சரிக்கட்டினபோதிலும், அவர்களுக்கு மன்னிக்கிற தேவனாயிருந்தீர். — 9 நம்முடைய தேவனாகிய கர்த்தரை உயர்த்தி, அவருடைய பரிசுத்த பர்வதத்திற்கு நேராகப் பணியுங்கள்; நம்முடைய தேவனாகிய கர்த்தர் பரிசுத்தமுள்ளவர்.

## 100

(ஸ்தோத்திர சங்கீதம்.)

பூமியின் குடிகளே, எல்லாரும் கர்த்தரைக் கெம்பீரமாய்ப் பாடுங்கள். — 2 மகிழ்ச்சியோடே கர்த்தருக்கு ஆராதனை செய்து, ஆனந்த சத்தத்தோடே அவர் சந்நிதிமுன் வாருங்கள். — 3 கர்த்தரே தேவனென்று அறியுங்கள்; நாம் அல்ல, அவரே நம்மை உண்டாக்கினார்; நாம் அவர் ஜனங்களும், அவர் மேய்ச்சலின் ஆடுகளுமாயிருக்கிறோம். — 4 அவர் வாசல்களில் துதியோடும், அவர் பிராகாரங்களில் புகழ்ச்சியோடும் பிரவேசித்து, அவரைத் துதித்து, அவருடைய நாமத்தை ஸ்தோத்திரியுங்கள். — 5 கர்த்தர் நல்லவர், அவருடைய கிருபை என்றென்றைக்கும், அவருடைய உண்மை தலைமுறை தலைமுறைக்கும் உள்ளது

## 101

(தாவீதின் சங்கீதம்.)

இரக்கத்தையும் நியாயத்தையும் குறித்துப் பாடுவேன்; கர்த்தாவே, உம்மைக் கீர்த்தனம் பண்ணுவேன். — 2 உத்தமமான வழியிலே விவேகமாய் நடப்பேன்; எப்பொழுது என்னிடத்தில் வருவீர்! என் வீட்டிலே உத்தம இருதயத்தோடு நடந்துகொள்ளுவேன். — 3 தீங்கான காரியத்தை என் கண்முன் வைக்கமாட்டேன்; வழிவிலகுகிறவர்களின் செய்கையை வெறுக்கிறேன்; அது என்னைப் பற்றாது. — 4 மாறுபாடான இருதயம் என்னைவிட்டு அகலவேண்டும்; பொல்லாதவனை அறியமாட்டேன். — 5 பிறனை இரகசியமாய் அவதூறு பண்ணுகிறவனைச் சங்கரிப்பேன்; மேட்டிமைக் கண்ணனையும் பெருநெஞ்சுள்ளவனையும் பொறுக்கமாட்டேன். — 6 தேசத்தில் உண்மையானவர்கள் என்னோடே வாசம்பண்ணும்படி என் கண்கள் அவர்கள்மேல் நோக்கமாயிருக்கும்; உத்தமமான வழியில் நடக்கிறவன் என்னைச் சேவிப்பான். — 7 கபடுசெய்கிறவன் என் வீட்டுக்குள் இருப்பதில்லை; பொய்சொல்லுகிறவன் என் கண்முன் நிலைப்பதில்லை. — 8 அக்கிரமக்காரர் ஒருவரும் கர்த்தருடைய நகரத்தில் இராதபடி வேர் அறுப்புண்டுபோக, தேசத்திலுள்ள அக்கிரமக்காரர் யாவரையும் அதிகாலமே சங்கரிப்பேன்.

## 102

(துயரப்படுகிறவன் துக்கத்தில் மூழ்கி, கர்த்தரிடத்தில் தன் வியாகுலத்தைத் தெரிவித்துச்செய்யும் விண்ணப்பம்.)

கர்த்தாவே, என் விண்ணப்பத்தைக் கேளும்; என் கூப்பிடுதல் உம்மிடத்தில் சேர்வதாக. — 2 என் ஆபத்துநாளிலே உமது முகத்தை எனக்கு மறையாதேயும்; உமது செவியை என்னிடத்தில் சாயும்; நான் கூப்பிடுகிற நாளிலே எனக்குத் தீவிரமாய் உத்தரவு அருளிச்செய்யும்.

3 என் நாட்கள் புகையைப்போல் ஒழிந்தது; என் எலும்புகள் ஒரு கொள்ளியைப்போல் எரியுண்டது. — 4 என் இருதயம் புல்லைப்போல் வெட்டுண்டு உலர்ந்தது; என் போஜனத்தைப் புசிக்க மறந்தேன். — 5 என் பெருமூச்சின் சத்தத்தினால், என் எலும்புகள் என் மாம்சத்தோடு ஒட்டிக்கொள்ளுகிறது. — 6 வனாந்தர நாரைக்கு ஒப்பானேன்; பாழான இடங்களில் தங்கும் ஆந்தையைப் போலானேன். — 7 நான் நித்திரையில்லாமல் வீட்டின்மேல் தனித்திருக்கும் குருவியைப் போல் இருக்கிறேன். — 8 நாடோறும் என் சத்துருக்கள் என்னை நிந்திக்கிறார்கள்; என்மேல் மூர்க்கவெறிகொண்டவர்கள் எனக்கு விரோதமாய்ச் சாபம் இடுகிறார்கள். — 9 நீர் என்னை உயரத் தூக்கி, தாழத் தள்ளினீர், உமது சினத்திற்கும் கடுங்கோபத்திற்கும் உள்ளானேன். — 10 ஆதலால் நான் சாம்பலை அப்பமாகப் புசித்து, என் பானங்களைக் கண்ணீரோடே கலக்கிறேன். — 11 என் நாட்கள் சாய்ந்துபோகிற நிழலைப்போலிருக்கிறது; புல்லைப்போல் உலர்ந்துபோகிறேன்.

12 கர்த்தராகிய நீரோ என்றென்றைக்கும் இருக்கிறீர்; உம்முடைய பேர் பிரஸ்தாபம் தலைமுறை தலைமுறையாக நிற்கும். — 13 தேவரீர் எழுந்தருளி சீயோனுக்கு இரங்குவீர்; அதற்குத் தயைசெய்யுங் காலமும், அதற்காகக் குறித்தநேரமும் வந்தது. —

14 உம்முடைய ஊழியக்காரர் அதின் கல்லு
கள்மேல் வாஞ்சை வைத்து, அதின் மண்
15 ணுக்குப் பரிதபிக்கிறார்கள். — கர்த்தர்
சீயோனைக் கட்டி, தமது மகிமையில் வெ
16 ளிப்படுவார். — திக்கற்றவர்களுடைய ஜெ
பத்தை அலட்சியம்பண்ணாமல், அவர்கள்
17 விண்ணப்பத்தை அங்கீகரிப்பார். — அப்
பொழுது ஜாதிகள் கர்த்தருடைய நாமத்
துக்கும், பூமியிலுள்ள ராஜாக்களெல்லா
ரும் உம்முடைய மகிமைக்கும் பயப்படு
18 வார்கள்.—பின் சந்ததிக்காக இது எழுதப்
படும்; சிருஷ்டிக்கப்படும் ஜனம் கர்த்த
19 ரைத் துதிக்கும். — கர்த்தர் கட்டுண்ட
வர்களின் பெருமூச்சைக் கேட்கவும், கொ
லைக்கு நியமிக்கப்பட்டவர்களை விடுதலையா
20 க்கவும்,—தம்முடைய உயர்ந்த பரிசுத்த
ஸ்தலத்திலிருந்து பார்த்து, வானங்களிலிரு
ந்து பூமியின்மேல் கண்ணோக்கமானார்.—
21 கர்த்தருக்கு ஆராதனைசெய்ய, ஜனங்க
ளும் ராஜ்யங்களும் ஏகமாய்க் கூடிக்கொ
22 ள்ளுகையில்,—சீயோனில் கர்த்தருடைய
நாமத்தையும், எருசலேமில் அவருடைய
துதியையும் பிரஸ்தாபப்படுத்துவார்கள்.
23 வழியிலே என் பெலனை அவர் ஒடுக்கி,
24 என் நாட்களைக் குறுகப்பண்ணினார்.—அப்
பொழுது நான்: என் தேவனே, பாதி வய
தில் என்னை எடுத்துக்கொள்ளாதேயும்;
உம்முடைய வருஷங்கள் தலைமுறை தலை
25 முறையாக இருக்கும். — நீர் ஆதியிலே
பூமியை அஸ்திபாரப்படுத்தினீர்; வானங்
கள் உம்முடைய கரத்தின் கிரியையாயிரு
26 க்கிறது.—அவைகள் அழிந்துபோம், நீரோ
நிலைத்திருப்பீர்; அவைகளெல்லாம் வஸ்தி
ரம்போல் பழமையாய்ப் போம்; அவை
களை ஒரு சால்வையைப்போல் மாற்றுவீர்,
27 அப்பொழுது மாறிப்போம்.—நீரோ மாறா
தவராயிருக்கிறீர்; உமது ஆண்டுகள் முடி
28 ந்துபோவதில்லை. — உமது அடியாரின்
பிள்ளைகள் தாபரித்திருப்பார்கள்; அவர்
கள் சந்ததி உமக்கு முன்பாக நிலைபெற்றி
ருக்கும் என்று சொன்னேன்.

## 103 (தாவீதின் சங்கீதம்.)

என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்
திரி; என் முழு உள்ளமே, அவருடைய
2 பரிசுத்த நாமத்தை ஸ்தோத்திரி. — என்
ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்திரி;
அவர் செய்த சகல உபகாரங்களையும் மற
8 வாதே.—அவர் உன் அக்கிரமங்களையெல்
லாம் மன்னித்து, உன் நோய்களையெல்லாம்
4 குணமாக்கி,—உன் பிராணனை அழிவுக்கு
விலக்கி மீட்டு, உன்னைக் கிருபையினாலும்
இரக்கங்களினாலும் முடிசூட்டி,—நன்மை 5
யினால் உன் வாயைத் திருப்தியாக்குகிறார்;
கழுகுக்குச் சமானமாய் உன் வயது திரும்ப
வாலவயதுபோலாகிறது.

ஒடுக்கப்படுகிற யாவருக்கும், கர்த்தர் 6
நீதியையும் நியாயத்தையும் செய்கிறார்.—
அவர் தமது வழிகளை மோசேக்கும், தமது 7
கிரியைகளை இஸ்ரவேல் புத்திரருக்கும்
தெரியப்பண்ணினார். — கர்த்தர் உருக்க 8
மும், இரக்கமும், நீடிய சாந்தமும், மிகு
ந்த கிருபையுமுள்ளவர்.—அவர் எப்பொழு 9
தும் கடிந்துகொள்ளார்; என்றைக்கும் கோ
பங்கொண்டிரார். — அவர் நம்முடைய 10
பாவங்களுக்குத் தக்கதாக நமக்குச் செய்
யாமலும், நம்முடைய அக்கிரமங்களுக்
குத் தக்கதாக நமக்குச் சரிக்கட்டாமலும்
இருக்கிறார்.—பூமிக்கு வானம் எவ்வளவு 11
உயரமாயிருக்கிறதோ, அவருக்குப் பயப்
படுகிறவர்கள்மேல் அவருடைய கிருபை
யும் அவ்வளவு பெரிதாயிருக்கிறது.—மேற் 12
குக்கும் கிழக்குக்கும் எவ்வளவுதூரமோ,
அவ்வளவு தூரமாய் அவர் நம்முடைய
பாவங்களை நம்மைவிட்டு விலக்கினார்.—
தகப்பன் தன் பிள்ளைகளுக்கு இரங்குகிறது 13
போல, கர்த்தர் தமக்குப்பயந்தவர்களுக்கு
இரங்குகிறார்.-நம்முடைய உருவம் இன்ன 14
தென்று அவர் அறிவார்; நாம் மண்ணென்று
நினைவுகூருகிறார்.—மனுஷனுடைய நாட் 15
கள் புல்லுக்கு ஒப்பாயிருக்கிறது; வெளி
யின் புஷ்பத்தைப்போல் பூக்கிறான்.—கா 16
ற்று அதின்மேல் வீசினவுடனே அது இல்லா
மற்போயிற்று; அது இருந்த இடமும் இனி
அதை அறியாது.—கர்த்தருடைய கிருபை 17
யோ அவருக்குப் பயந்தவர்கள்மேலும்,
அவருடைய நீதி அவர்கள் பிள்ளைகளுடைய
பிள்ளைகள்மேலும் அநாதியாய் என்றென்
றைக்கும் உள்ளது.—அவருடைய உடன் 18
படிக்கையைக் கைக்கொண்டு, அவருடைய
கட்டளைகளின்படி செய்ய நினைக்கிறவர்கள்
மேலேயே உள்ளது.

கர்த்தர் வானங்களில் தமது சிங்கா 19
சனத்தை ஸ்தாபித்திருக்கிறார்; அவருடைய
ராஜரிகம் சர்வத்தையும் ஆளுகிறது.—கர்த் 20
தருடைய வார்த்தையைக் கேட்டு, அவரு
டைய வசனத்தின்படி செய்கிற பலத்த சவு
ரியவான்களாகிய அவருடைய தூதர்களே,
அவரை ஸ்தோத்திரியுங்கள்.—கர்த்தருக் 21
குப் பிரியமானதைச் செய்து, அவர் பணி
விடைக்காரராயிருக்கிற அவருடைய சர்வ

சேனைகளே, அவரை ஸ்தோத்திரியுங்கள்.— 22 கர்த்தர் ஆளுகிற எவ்விடங்களிலுமுள்ள அவருடைய சகல கிரியைகளே, அவரை ஸ்தோத்திரியுங்கள்; என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்திரி.

**104** என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்திரி; என் தேவனாகிய கர்த்தாவே, நீர் மிகவும் பெரியவராயிருக்கிறீர்; மகிமையையும் மகத்துவத்தையும் அணிந்துகொண்டிருக்கிறீர்.- 2 ஒளியை வஸ்திரமாகத் தரித்து, வானங்களைத் திரையைப்போல் விரித்திருக்கிறீர்.— 3 தமது மேல்வீடுகளைத் தண்ணீர்களால் மச்சுப்பாவி, மேகங்களைத் தமது இரதமாக்கி, காற்றினுடைய செட்டைகளின்மேல் செல்லுகிறார். — 4 தம்முடைய தூதர்களைக் காற்றுகளாகவும், தம்முடைய ஊழியக்காரரை அக்கினிஜுவாலைகளாகவும் செய்கிறார்.— 5 பூமி ஒருபோதும் நிலைபேராதபடி அதின் ஆதாரங்கள்மேல் அதை ஸ்தாபித்தார்.— 6 அதை வஸ்திரத்தினால் மூடுவதுபோல ஆழத்தினால் மூடினீர்; பர்வதங்களின்மேல் தண்ணீர்கள் நின்றது.— 7 அவைகள் உமது கண்டிதத்தால் விலகியோடி, உமது குமுறலின் சத்தத்தால் விரைந்து போயிற்று.— 8 அவைகள் மலைகளில் ஏறி, பள்ளத்தாக்குகளில் இறங்கி, நீர் அவைகளுக்கு ஏற்படுத்தின இடத்தில் சென்றது.- 9 அவைகள் திரும்பவும் வந்து பூமியை மூடிக்கொள்ளாதபடி கடவாதிருக்கும் எல்லையை அவைகளுக்கு ஏற்படுத்தினீர்.— 10 அவர் பள்ளத்தாக்குகளில் நீரூற்றுகளை வரவிடுகிறார்; அவைகள் மலைகள் நடுவே ஓடுகிறது.— 11 அவைகள் வெளியின் ஜீவன்களுக்கெல்லாம் தண்ணீர் கொடுக்கும்; அங்கே காட்டுக்கழுதைகள் தங்கள் தாகத்தைத் தீர்த்துக்கொள்ளும்.— 12 அவைகளின் ஓரமாய் ஆகாயத்துப் பறவைகள் சஞ்சரித்து, கிளைகள்மேலிருந்து பாடும். — 13 தம்முடைய மேல்வீடுகளிலிருந்து பர்வதங்களுக்குத் தண்ணீர் இறைக்கிறார்; உமது கிரியைகளின் பலனாலே 14 பூமி திருப்தியாயிருக்கிறது.—பூமியிலிருந்து ஆகாரம் உண்டாகும்படி, அவர் மிருகங்களுக்குப் புல்லையும், மனுஷருக்கு உபயோகமான பயிர்வகைகளையும் முளைப்பிக்கிறார். — 15 மனுஷனுடைய இருதயத்தை மகிழ்ச்சியாக்கும் திராட்சரசத்தையும், அவனுக்கு முகக்களையை உண்டுபண்ணும் எண்ணெயையும், மனுஷனுடைய இருதயத்தை ஆதரிக்கும் ஆகாரத்தையும் விளைவிக்கிறார்.— 16 கர்த்தருடைய விருட்சங்களும், அவர் நாட்டின லீபனோனின் கேதுருக்களும் சாரத்தினால் நிறைந்திருக்கும்.— 17 அங்கே குருவிகள் கூடுகட்டும்; தேவதாரு விருட்சங்கள் கொக்குகளின் குடியிருப்பு.— 18 உயர்ந்த பர்வதங்கள் வரையாடுகளுக்கும், கன்மலைகள் குழிமுசல்களுக்கும் அடைக்கலம்.

19 சந்திரனைக் காலக்குறிப்புகளுக்காகப் படைத்தார்; சூரியன் தன் அஸ்தமனத்தை அறியும்.— 20 நீர் இருளைக் கட்டளையிடுகிறீர், இராக்காலமாகும்; அதிலே சகல காட்டுஜீவன்களும் நடமாடும். — 21 பாலசிங்கங்கள் இரைக்காக கெர்ச்சித்து, தேவனால் தங்களுக்கு ஆகாரம் கிடைக்கும்படித் தேடும்.— 22 சூரியன் உதிக்கையில் அவைகள் ஒதுங்கி, தங்கள் தாபரங்களில் படுத்துக்கொள்ளும்.— 23 அப்பொழுது மனுஷன் சாயங்காலமட்டும் தன் வேலைக்கும், தன் பண்ணைக்கும் புறப்படுகிறான்.— 24 கர்த்தாவே, உமது கிரியைகள் எவ்வளவு திரளாயிருக்கிறது! அவைகளை எல்லாம் ஞானமாய்ப் படைத்தீர், பூமி உம்முடைய பொருள்களினால் நிறைந்திருக்கிறது.— 25 பெரிதும் விஸ்தாரமுமான இந்தச் சமுத்திரமும் அப்படியே நிறைந்திருக்கிறது; அதிலே சஞ்சரிக்கும் சிறியவைகளும் பெரியவைகளுமான எண்ணிறந்த ஜீவன்கள் உண்டு. — 26 அதிலே கப்பல்கள் ஓடும்; அதிலே விளையாடும்படி நீர் உண்டாக்கின திமிங்கிலங்களும் உண்டு. — 27 ஏற்றவேளையில் ஆகாரத்தைத் தருவீர் என்று அவைகளெல்லாம் உம்மை நோக்கிக் காத்திருக்கும். — 28 நீர் கொடுக்க, அவைகள் வாங்கிக்கொள்ளும்; நீர் உம்முடைய கையைத் திறக்க, அவைகள் நன்மையால் திருப்தியாகும்.— 29 நீர் உமது முகத்தை மறைக்க, திகைக்கும்; நீர் அவைகளின் சுவாசத்தை வாங்கிக்கொள்ள, அவைகள் மாண்டு, தங்கள் மண்ணுக்குத் திரும்பும். — 30 நீர் உம்முடைய ஆவியை அனுப்பும்போது, அவைகள் சிருஷ்டிக்கப்படும்; நீர் பூமியின் ரூபத்தையும் புதிதாக்குகிறீர்.

31 கர்த்தருடைய மகிமை என்றென்றைக்கும் விளங்கும்; கர்த்தர் தம்முடைய கிரியைகளிலே மகிழுவார்.— 32 அவர் பூமியை நோக்கிப் பார்க்க, அது அதிரும்; அவர் பர்வதங்களைத் தொட, அவைகள் புகையும்.— 33 நான் உயிரோடிருக்குமட்டும் என் கர்த்தரைப் பாடுவேன்; நான் உள்ளளவும் என் தேவனைக் கீர்த்தனம்பண்ணுவேன்.— 34 நான் அவரைத் தியானிக்கும் தியானம் இனிதா

யிருக்கும்; நான் கர்த்தருக்குள் மகிழு
35 வேன்.—பாவிகள் பூமியிலிருந்து நிர்மூல
மாகி, துன்மார்க்கர் இனி இராமற்போ
வார்கள். என் ஆத்துமாவே, கர்த்தரை
ஸ்தோத்திரி, அல்லேலூயா.

105 கர்த்தரைத் துதித்து, அவருடைய
நாமத்தைப் பிரஸ்தாபமாக்குங்கள்; அவரு
டைய செய்கைகளை ஜனங்களுக்குள்ளே பிர
2 சித்தப்படுத்துங்கள்.—அவரைப் பாடி, அவ
ரைக்கீர்த்தனம்பண்ணுங்கள்; அவருடைய
அதிசயங்களையெல்லாம்தியானித்துப் பேசு
3 ங்கள்.—அவருடைய பரிசுத்த நாமத்தைக்
குறித்து மேன்மைபாராட்டுங்கள்; கர்த்
தரைத் தேடுகிறவர்களின் இருதயம் மகிழ்
4 வதாக.—கர்த்தரையும் அவர் வல்லமை
யையும் நாடுங்கள்; அவர் சமுகத்தை நித்
5 தமும் தேடுங்கள்.—அவருடைய தாசனா
கிய ஆபிரகாமின் சந்ததியே! அவரால்
தெரிந்துகொள்ளப்பட்டவர்களாகிய யாக்
6 கோபின் புத்திரரே!—அவர் செய்த அதிசய
ங்களையும், அவருடைய அற்புதங்களையும்,
அவர் வாக்கின் நியாயத்தீர்ப்புகளையும் நி
7 னைவுகூருங்கள்.-அவரே நம்முடைய தேவ
னாகிய கர்த்தர், அவருடைய நியாயத்தீர்ப்
புகள் பூமியெங்கும் விளங்கும்.

8 ஆயிரந்தலைமுறைக்கென்று அவர் கட்
டளையிட்ட வாக்கையும், ஆபிரகாமோடே
அவர் பண்ணின உடன்படிக்கையையும்,-
9 அவர் ஈசாக்குக்கு இட்ட ஆணையையும்
என்றென்றைக்கும் நினைத்திருக்கிறார். —
10 அதை யாக்கோபுக்குப் பிரமாணமாகவும்,
இஸ்ரவேலுக்கு நித்திய உடன்படிக்கை
11 யாகவும் உறுதிப்படுத்தி:—உங்கள் சுதந்
தரபாகமான கானான்தேசத்தை உனக்குத்
12 தருவேன் என்றார்.—அக்காலத்தில் அவர்
கள் கொஞ்சத்தொகைக்குட்பட்ட சொற்ப
ஜனங்களும்பரதேசிகளுமாயிருந்தார்கள்.-
13 அவர்கள் ஒரு ஜனத்தைவிட்டு மறுஜனத்
தண்டைக்கும், ஒரு ராஜ்யத்தைவிட்டு மறு
14 தேசத்தாரண்டைக்கும்போனார்கள்.-அவர்
களை ஒடுக்கும்படி ஒருவருக்கும் இடங்
கொடாமல், அவர்கள் நிமித்தம் ராஜாக்
15 களைக் கடிந்துகொண்டு: — நான் அபிஷே
கம்பண்ணினவர்களைநீங்கள் தொடாமலும்,
என்னுடைய தீர்க்கதரிசிகளுக்குத் தீங்கு
செய்யாமலும் இருங்கள் என்றார்.

16 அவர் தேசத்திலே பஞ்சத்தை வருவித்து,
ஆகாரமென்னும் ஆதரவுகோலை முற்றிலும்
17 முறித்தார்.—அவர்களுக்கு முன்னாலே ஒரு
புருஷனை அனுப்பினார்; யோசேப்பு சிறை
யாக விற்கப்பட்டான்.—அவன் கால்களை 18
விலங்குபோட்டு ஒடுக்கினார்கள்; அவன்
பிராணன் இரும்பில் அடைபட்டிருந்தது.-
கர்த்தர் சொன்ன வார்த்தை நிறைவேறு 19
மளவும் அவருடைய வசனம் அவனைப்
புடமிட்டது.—ராஜா ஆள் அனுப்பி, அவ 20
னைக் கட்டவிழ்க்கச் சொன்னான்; ஜனங்
களின் அதிபதி அவனை விடுதலைபண்ணி
னான்.—தன் பிரபுக்களை அவன் மனதின்படி 21
கட்டவும், தன் மூப்பர்களை ஞானிகளாக்க
வும்,—அவனைத் தன் வீட்டுக்கு ஆண்டவ 22
னும், தன் ஆஸ்திக்கெல்லாம் அதிபதியுமாக்
கினான்.—அப்பொழுது இஸ்ரவேல் எகிப் 23
திற்கு வந்தான்; யாக்கோபு காமின் தேசத்
திலே பரதேசியாயிருந்தான்.—அவர் தம் 24
முடையஜனங்களை மிகவும்பலுகப்பண்ணி,
அவர்களுடைய சத்துருக்களைப்பார்க்கிலும்
அவர்களைப் பலவான்களாக்கினார். — தம் 25
முடைய ஜனங்களைப் பகைக்கவும், தம்மு
டையஊழியக்காரரை வஞ்சனையாய் நடத்
தவும், அவர்களுடைய இருதயத்தை மாற்
றினார்.—தம்முடைய தாசனாகிய மோசே 26
யையும் தாம் தெரிந்துகொண்ட ஆரோனை
யும் அனுப்பினார்.—இவர்கள் அவர்களுக் 27
குள் அவருடைய அடையாளங்களையும், கா
மின் தேசத்திலே அற்புதங்களையும் செய்
தார்கள்.—அவர் இருளை அனுப்பி, அந்த 28
காரத்தை உண்டாக்கினார்; அவருடைய
வார்த்தைகளை எதிர்ப்பாரில்லை.

அவர்களுடைய தண்ணீர்களை இரத்த 29
மாக மாற்றி, அவர்களுடைய மச்சங்களைச்
சாகப்பண்ணினார். — அவர்களுடைய தே 30
சம் தவளைகளைத் திரளாய்ப் பிறப்பித்தது;
அவர்களுடைய ராஜாக்களின் அறைவீடு
களிலும் அவைகள் வந்தது.—அவர் கட் 31
டளையிட, அவர்களுடைய எல்லைகளிலெங்
கும் வண்டுகளும் பேன்களும் வந்தது.—
அவர்களுடைய மழைகளைக் கல்மழையா 32
க்கி, அவர்களுடைய தேசத்திலே ஜுவா
லிக்கிற அக்கினியை வரப்பண்ணினார்.—
அவர்களுடையதிராட்சச்செடிகளையும்அத் 33
திமரங்களையும் அழித்து; அவர்களுடைய
எல்லைகளிலுள்ள மரங்களையும் முறித்தார்.-
அவர் கட்டளையிட, எண்ணிமுடியாத 34
வெட்டுக்கிளிகளும் பச்சைப்புழுக்களும்
வந்து, — அவர்களுடைய தேசத்திலுள்ள 35
சகல பூண்டுகளையும் அரித்து, அவர்களு
டைய நிலத்தின் கனியைத் தின்றுபோட்
டது.—அவர்களுடைய தேசத்திலே தலைச் 36
சன்கள் அனைத்தையும், அவர்களுடைய

பெலனில் முதற்பெலனான யாவரையும்
37 சங்கரித்தார். — அப்பொழுது அவர்களை
வெள்ளியோடும் பொன்னோடும் புறப்படப்
பண்ணினார்; அவர்கள் கோத்திரங்களில்
பலவீனப்பட்டவன் ஒருவனும் இருந்த
38 தில்லை.—எகிப்தியர் அவர்களுக்குப் பயந்த
தினால், அவர்கள் புறப்பட்டபோது மகிழ்ந்
தார்கள்.

39 அவர் மேகத்தை மறைவுக்காக விரித்து,
இரவை வெளிச்சமாக்குகிறதற்காக அக்கி
40 னியையும் தந்தார்.—கேட்டார்கள், அவர்
காடைகளை வரப்பண்ணினார்; வான அப்
பத்தினாலும் அவர்களைத் திருப்தியாக்கினார்.-
41 கன்மலையைத் திறந்தார், தண்ணீர்கள் புறப்
பட்டு, வறண்ட வெளிகளில் ஆறாய் ஓடி
42 ற்று.—அவர் தம்முடைய பரிசுத்த வாக்
குத்தத்தத்தையும், தம்முடைய தாசனாகிய
43 ஆபிரகாமையும் நினைத்து, — தம்முடைய
ஜனத்தைக் களிப்போடும், தாம் தெரிந்து
கொண்டவர்களைக் கெம்பீரசத்தத்தோடும்
44 புறப்படப்பண்ணி,—தமது சட்டங்களைக்
காத்து நடக்கும்படிக்கும், தமது நியா
யப்பிரமாணங்களைக் கைக்கொள்ளும்படிக்
45 கும்,—அவர்களுக்குப் புறஜாதிகளுடைய
தேசங்களைக் கொடுத்தார்; அந்நிய ஜனங்க
ளுடைய பிரயாசத்தின் பலனைச் சுதந்தரித்
துக்கொண்டார்கள். அல்லேலூயா.

**106** அல்லேலூயா, கர்த்தரைத் துதியுங்
கள்; அவர் நல்லவர், அவர் கிருபை என்று
2 முள்ளது.—கர்த்தருடைய வல்லமையான
செய்கைகளைச் சொல்லி, அவருடைய துதி
யையெல்லாம் பிரஸ்தாபப்படுத்தத் தக்க
3 வன் யார்?—நியாயத்தைக் கைக்கொள்ளு
கிறவர்களும், எக்காலத்திலும் நீதியைச்
செய்கிறவர்களும், பாக்கியவான்கள் —
4 கர்த்தாவே, நீர் தெரிந்துகொண்டவர்க
ளின் நன்மையை நான் கண்டு, உம்மு
டைய ஜாதியின் மகிழ்ச்சியால் மகிழ்ந்து,
உம்முடைய சுதந்தரத்தோடே மேன்மை
5 பாராட்டும்படிக்கு,—உம்முடைய ஜனங்
களுக்கு நீர் பாராட்டும் கிருபையின்படி
என்னை நினைத்து, உம்முடைய இரட்சிப்
பினால் என்னைச் சந்தித்தருளும்.

6 எங்கள் பிதாக்களோடுங்கூட நாங்களும்
பாவஞ்செய்து, அக்கிரமம் நடப்பித்து,
7 ஆகாமியம்பண்ணினோம்.--எங்கள் பிதாக்
கள் எகிப்திலே உம்முடைய அதிசயங்
களை உணராமலும், உம்முடைய கிருபை
களின் திரட்சியை நினையாமலும்போய்,
சிவந்த சமுத்திர ஓரத்திலே கலகம்பண்ணி
னார்கள்.—ஆனாலும் அவர் தமது வல்ல 8
மையை வெளிப்படுத்தும்படி, தம்மு
டைய நாமத்தினிமித்தம் அவர்களை இரட்
சித்தார். — அவர் சிவந்த சமுத்திரத்தை 9
அதட்டினார், அது வற்றிப்போயிற்று; வெ
ட்டாந்தரையில் நடக்கிறதுபோல அவர்
களை ஆழங்களில் நடந்துபோகப்பண்ணி
னார்.—பகைஞன் கைக்கு அவர்களை விலக்கி 10
இரட்சித்து, சத்துருவின் கைக்கு அவர்களை
விலக்கி மீட்டார். — அவர்கள் சத்துருக் 11
களைத் தண்ணீர்கள் மூடிக்கொண்டது;
அவர்களில் ஒருவனும் மீந்திருக்கவில்லை.-
அப்பொழுது அவர்கள் அவருடைய வார் 12
த்தைகளை விசுவாசித்து, அவருடைய துதி
யைப் பாடினார்கள்.

ஆனாலும் சீக்கிரமாய் அவருடைய கிரி 13
யைகளை மறந்தார்கள்; அவருடைய ஆலோ
சனைக்கு அவர்கள் காத்திராமல்,—வனாந் 14
தரத்திலே இச்சையுள்ளவர்களாகி, அவாந்
தரவெளியிலேதேவனைப்பரீட்சைபார்த்தார்
கள்.—அப்பொழுது அவர்கள் கேட்டதை 15
அவர்களுக்குக் கொடுத்தார், அவர்கள் ஆத்
துமாக்களிலோ இளைப்பை அனுப்பினார்,--
பாளயத்தில் அவர்கள் மோசேயின்மேலும், 16
கர்த்தருடைய பரிசுத்தனாகிய ஆரோனின்
மேலும் பொறாமை கொண்டார்கள்.-பூமி 17
பிளந்து தாத்தானை விழுங்கி, அபிராமின்
கூட்டத்தை மூடிப்போட்டது.—அவர்கள் 18
கூட்டத்தில் அக்கினி பற்றியெரிந்தது; அக்
கினிஜுவாலை துன்மார்க்கரை எரித்துப்
போட்டது.-அவர்கள் ஓரேபிலே ஒரு கன் 19
றுக்குட்டியை யுண்டாக்கி, வார்ப்பிக்கப்
பட்ட விக்கிரகத்தை நமஸ்கரித்தார்கள்.-
தங்கள் மகிமையைப்புல்லைத்தின்கிற மாட் 20
டின் சாயலாக மாற்றினார்கள்.—எகிப்திலே 21
பெரிய கிரியைகளையும், காமின்தேசத்தி
லே அதிசயங்களையும், சிவந்த சமுத்திரத்
தண்டையிலே பயங்கரமானவைகளையும்
செய்தவராகிய, — தங்கள் இரட்சகரான 22
தேவனை மறந்தார்கள்.—ஆகையால், அவர் 23
களை நாசம்பண்ணுவேன் என்றார்; அப்பொ
ழுது அவரால் தெரிந்துகொள்ளப்பட்ட
மோசே, அவர்களை அவர் அழிக்காதபடி
க்கு, அவருடைய உக்கிரத்தை ஆற்றும்
பொருட்டு, அவருக்கு முன்பாகத் திறப்
பின் வாயிலே நின்றான்.

அவருடைய வார்த்தையை விசுவாசியா 24
மல், இச்சிக்கப்படத்தக்க தேசத்தை அசட்
டைபண்ணினார்கள்.—கர்த்தருடைய சத் 25
தத்திற்குச் செவிகொடாமல், தங்கள் கூடா

26 ரங்களில் முறுமுறுத்தார்கள். — அப்பொ
ழுது அவர்கள் வனாந்தரத்திலே மடியவும்,
அவர்கள் சந்ததி ஜாதிகளுக்குள்ளே அழிய
27 வும்,—அவர்கள் பற்பல தேசங்களிலே சித
றடிக்கப்படவும், அவர்களுக்கு விரோதமா
கத் தம்முடைய கையை எடுத்தார்.—
28 அவர்கள் பாகால்பேயோரைப் பற்றிக்கொ
ண்டு, ஜீவனில்லாதவைகளுக்கு இட்ட பலி
29 களைப் புசித்து,—தங்கள் கிரியைகளினால்
அவருக்குக் கோபமூட்டினார்கள்; ஆகை
யால் வாதை அவர்களுக்குள் புகுந்தது.—
30 அப்பொழுது பினெகாஸ் எழுந்துநின்று
நியாயஞ்செய்தான்; அதினால் வாதை நிறுத்
31 தப்பட்டது.—அது தலைமுறை தலைமுறை
யாக என்றைக்கும் அவனுக்கு நீதியாக
32 எண்ணப்பட்டது.—மேரிபாவின் தண்ணீர்
களிடத்திலும் அவருக்குக் கடுங்கோபம்
மூட்டினார்கள்; அவர்கள்நிமித்தம் மோ
33 சேக்கும் பொல்லாப்பு வந்தது.—அவர்கள்
அவன் ஆவியை விசனப்படுத்தினதினாலே,
தன் உதடுகளினால் பதறிப்பேசினான்.
34 கர்த்தர் தங்களுக்குச் சொன்னபடி,
அவர்கள் அந்த ஜனங்களை அழிக்கவில்லை.-
35 ஜாதிகளுடனே கலந்து, அவர்கள் கிரியை
36 களைக் கற்று;—அவர்களுடைய விக்கிரகங்
களைச் சேவித்தார்கள்; அவைகள் அவர்
37 களுக்குக் கண்ணியாயிற்று. — அவர்கள்
தங்கள் குமாரரையும் தங்கள் குமாரத்திக
ளையும் பிசாசுகளுக்குப் பலியிட்டார்கள்.—
38 அவர்கள் கானான் தேசத்து விக்கிரகங்களு
க்குப் பலியிட்டு, தங்கள் குமாரர் குமாரத்தி
களுடைய குற்றமில்லாத இரத்தத்தைச்
சிந்தினார்கள்; தேசம் இரத்தத்தால் தீட்டுப்
39 பட்டது.—அவர்கள் தங்கள் கிரியைகளி
னால் அசுத்தமாகி, தங்கள் செய்கைகளி
40 னால் சோரம்போனார்கள்.—அதினால் கர்த்
தருடைய கோபம் தமது ஜனத்தின்மேல்
மூண்டது; அவர் தமது சுதந்தரத்தை அரு
41 வருத்தார். — அவர்களை ஜாதிகளுடைய
கையில் ஒப்புக்கொடுத்தார்; அவர்களு
டைய பகைஞர் அவர்களை ஆண்டார்கள்.—
42 அவர்களுடைய சத்துருக்கள் அவர்களை
ஒடுக்கினார்கள்; அவர்களுடைய கையின்
43 கீழ்த் தாழ்த்தப்பட்டார்கள் —அநேகந்த
ரம் அவர்களை விடுவித்தார்; அவர்களோ
தங்கள் யோசனையினால் அவருக்கு விரோத
மாய்க் கலகம்பண்ணி, தங்களுடைய அக்
கிரமத்தினால் சிறுமைப்படுத்தப்பட்டார்
44 கள்.—அவர்கள் கூப்பிடுதலை அவர் கேட்
கும்போதோ, அவர்களுக்கு உண்டான
இடுக்கத்தை அவர் கண்ணோக்கி,—அவர் 45
களுக்காகத் தமது உடன்படிக்கையை
நினைத்து, தமது மிகுந்த கிருபையின்படி
மனஸ்தாபப்பட்டு, — அவர்களைச் சிறைபி 46
டித்த யாவரும் அவர்களுக்கு இரங்கும்படி
செய்தார்.

எங்கள் தேவனாகிய கர்த்தாவே, நாங் 47
கள் உமது பரிசுத்த நாமத்தைப் போற்றி,
உம்மைத் துதிக்கிறதில் மேன்மைபாராட்
டும்படி எங்களை இரட்சித்து, எங்களை ஜாதி
களிலிருந்து சேர்த்தருளும்.—இஸ்ரவேலின் 48
தேவனாகிய கர்த்தர் அநாதியாய் என்றென்
றைக்கும் ஸ்தோத்திரிக்கப்படத்தக்கவர்.
ஜனங்களெல்லாரும்: ஆமென், அல்லே
லூயா, என்பார்களாக.

**107** கர்த்தரைத் துதியுங்கள்; அவர் நல்ல
வர், அவர் கிருபை என்றுமுள்ளது. —
கர்த்தரால்சத்துருவின் கைக்கு நீங்கலாக்கி 2
மீட்கப்பட்டு, — கிழக்கிலும் மேற்கிலும் 3
வடக்கிலும் தெற்கிலுமுள்ள பலதேசங்
களிலுமிருந்து சேர்க்கப்பட்டவர்கள், அப்
படிச் சொல்லக்கடவர்கள்.

அவர்கள் தாபரிக்கும் ஊரைக் காணா 4
மல், வனாந்தரத்திலே அவாந்தரவழியாய்,-
பசியாகவும், தாகமாகவும், ஆத்துமா 5
தொய்ந்ததாகவும் அலைந்துதிரிந்தார்கள்.—
தங்கள் ஆபத்திலே கர்த்தரை நோக்கிக் 6
கூப்பிட்டார்கள், அவர்கள் இக்கட்டுகளி
லிருந்து அவர்களை விடுவித்தார்.—தாபரிக் 7
கும் ஊருக்குப் போய்ச் சேர, அவர்களைச்
செவ்வையான வழியிலே நடத்தினார்.—
தவனமுள்ள ஆத்துமாவைக் கர்த்தர் திருப் 8
தியாக்கி, பசியுள்ள ஆத்துமாவை நன்மை
யினால் நிரப்புகிறாரென்று, — அவருடைய 9
கிருபையினிமித்தமும், மனுபுத்திரருக்கு
அவர் செய்கிற அதிசயங்களினிமித்தமும்
அவரைத் துதிப்பார்களாக.

தேவனுடையவார்த்தைகளுக்குவிரோத 10
மாய்க் கலகம்பண்ணி, உன்னதமானவரு
டைய ஆலோசனையை அசட்டைபண்ணி
னவர்கள்,—அந்தகாரத்திலும் மரண இருளி 11
லும் வைக்கப்பட்டிருந்து, ஒடுக்கத்திலும்
இரும்பிலும் கட்டுண்டு கிடந்தார்கள். —
அவர்களுடைய இருதயத்தை அவர் வருத் 12
தத்தால் தாழ்த்தினார்; சகாயரில்லாமல்
விழுந்துபோனார்கள்.—தங்கள் ஆபத்திலே 13
கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டார்கள்;
அவர்கள் இக்கட்டுகளிலிருந்து அவர்களை
நீங்கலாக்கி ரட்சித்தார்.—அந்தகாரத்திலும் 14
மரண இருளிலுமிருந்து அவர்களை வெளிப்

படப்பண்ணி, அவர்கள் கட்டுகளை அறுத்
15 தார். — கர்த்தர் வெண்கலக் கதவுகளை
உடைத்து, இருப்புத்தாழ்ப்பாள்களை முறித்
16 தாரென்று,-அவருடைய கிருபையினிமித்த
மும், மனுபுத்திரருக்கு அவர் செய்கிற அதி
சயங்களினிமித்தமும் அவரைத் துதிப்பார்
களாக.

17 நிர்மூடர் தங்கள் பாதகமார்க்கத்தாலும்
தங்கள் அக்கிரமங்களாலும் நோய்கொண்டு
18 ஒடுங்கிப்போகிறார்கள்.—அவர்கள் ஆத்து
மா சகல போஜனத்தையும் அரோசிக்கிறது,
அவர்கள் மரணவாசல்கள் பரியந்தம் சமீ
19 பிக்கிறார்கள்.—தங்கள் ஆபத்திலே கர்த்
தரை நோக்கிக் கூப்பிடுகிறார்கள்; அவர்கள்
இக்கட்டுகளுக்கு அவர்களை நீங்கலாக்கி ரட்
20 சிக்கிறார்.-அவர் தமது வசனத்தை அனுப்பி
அவர்களைக் குணமாக்கி, அவர்களை அழிவுக்
21 குத் தப்புவிக்கிறார்.—அவர்கள் கர்த்தரை
அவருடைய கிருபையினிமித்தமும், மனு
புத்திரருக்கு அவர் செய்கிற அதிசயங்களி
22 னிமித்தமும் துதித்து, — ஸ்தோத்திரபலி
களைச் செலுத்தி, அவருடைய கிரியைகளை
ஆனந்த சத்தத்தோடே விவரிப்பார்களாக.

23 கப்பலேறி, கடல்யாத்திரைபண்ணி, திர
ளான தண்ணீர்களிலே தொழில் செய்கிறார்
24 களே,—அவர்கள் கர்த்தருடைய கிரியை
களையும், ஆழத்திலே அவருடைய அதிசயங்
25 களையும் காண்கிறார்கள்.—அவர் கட்டளை
யிட பெருங்காற்று எழும்பி, அதின் அலை
26 களைக் கொந்தளிக்கப்பண்ணும்.—அவர்கள்
ஆகாயத்தில் ஏறி, ஆழங்களில் இறங்கு
கிறார்கள், அவர்கள் ஆத்துமா கிலேசத்
27 தினால் கரைந்துபோகிறது.-வெறித்தவனைப்
போல் அலைந்து தடுமாறுகிறார்கள்; அவர்
களுடைய ஞானமெல்லாம் முழுகிப்போ
28 கிறது.—அப்பொழுது தங்கள் ஆபத்திலே
அவர்கள் கர்த்தரை நோக்கிக் கூப்பிடு
கிறார்கள், அவர்கள் இக்கட்டுகளுக்கு அவர்
29 களை நீங்கலாக்கி விடுவிக்கிறார். — கொந்
தளிப்பை அமர்த்துகிறார், அதின் அலைகள்
30 அடங்குகின்றது. — அமைதலுண்டானதி
னிமித்தம் அவர்கள் சந்தோஷப்படுகிறார்
கள்; தாங்கள் நாடின துறைமுகத்தில் அவர்
31 களைக் கொண்டுவந்துசேர்க்கிறார்.-அவர்கள்
கர்த்தரை அவருடைய கிருபையினிமித்த
மும், மனுபுத்திரருக்கு அவர் செய்கிற
32 அதிசயங்களினிமித்தமும் துதித்து,-ஜனங்
களின் சபையிலே அவரை உயர்த்தி, மூப்
பர்களின் சங்கத்திலே அவரைப் போற்று
வார்களாக.

33 அவர் ஆறுகளை அவாந்தர வெளியாக
வும், நீரூற்றுகளை வறண்ட ஸ்தலமாகவும்,-
34 குடிகளுடைய பொல்லாப்பினிமித்தம் செ
ழிப்பான தேசத்தை உவர்நிலமாகவும் மா
ற்றுகிறார். — 35 அவர் அவாந்தர வெளியைத்
தண்ணீர்த்தடாகமாகவும், வறண்ட நிலத்
தை நீரூற்றுகளாகவும் மாற்றி,— 36 பசித்தவர்
களை அங்கே குடியேற்றுகிறார்; அங்கே
அவர்கள் குடியிருக்கும் நகரத்தைக் கட்டி,-
37 வயல்களை உண்டாக்கி விதைத்து, திராட்
சத்தோட்டங்களை நாட்டுகிறார்கள், அவை
கள் வரத்துள்ள பலனைத் தரும். — 38 அவர்
களை ஆசீர்வதிக்கிறார், மிகுதியும் பெருகு
கிறார்கள்; அவர்களுடைய மிருகஜீவன்கள்
குறையாதிருக்கப் பண்ணுகிறார். — 39 பின்பு
அவர்கள் இடுக்கத்தினாலும், ஆபத்தினாலும்,
துயரத்தினாலும் குறைவுபட்டுத் தாழ்வடை
கிறார்கள். — 40 அவர் பிரபுக்களின் மேல்
இகழ்ச்சிவரப்பண்ணி, வழியில்லாத அவாந்
தரவெளியிலே அவர்களைத் திரியச்செய்து,-
41 எளியவனையோ சிறுமையினின்று எடுத்து,
உயர்ந்த அடைக்கலத்திலே வைத்து, அவன்
வம்சங்களை மந்தையைப்போலாக்குகிறார்.-
42 உத்தமர்கள் அதைக் கண்டு மகிழுவார்கள்;
நியாயக்கேடெல்லாம் தன் வாயைமூடும்.

43 எவன் ஞானமுள்ளவனோ அவன் இவை
களைக் கவனிக்கக்கடவன்; ஞானவான்கள்
கர்த்தருடைய கிருபைகளை உணர்ந்து
கொள்வார்கள்.

## 108

(தாவீதின் சங்கீதமாகிய பாட்டு.)

தேவனே, என் இருதயம் ஆயத்தமா
யிருக்கிறது; நான் பாடிக் கீர்த்தனம்பண்
ணுவேன்; என் மகிமையும் பாடும்.—
2 வீணையே, சுரமண்டலமே, விழியுங்கள்,
நான் அதிகாலையில் விழிப்பேன்.— 3 கர்த்தா
வே, ஜனங்களுக்குள்ளே உம்மைத் துதிப்
பேன்; ஜாதிகளுக்குள்ளே உம்மைக் கீர்த்
தனம் பண்ணுவேன்.— 4 உமது கிருபை வா
னங்களுக்கு மேலாகவும், உமது சத்தியம்
மேகமண்டலங்கள் பரியந்தமும் எட்டு
கிறது.— 5 தேவனே, வானங்களுக்கு மேலாக
உயர்ந்திரும்; உமது மகிமை பூமியனைத்
தின்மேலும் உயர்ந்திருப்பதாக.

6 உமது பிரியர் விடுவிக்கப்படும்பொரு
ட்டு, உமது வலதுகரத்தினால் இரட்சித்து,
எங்கள் ஜெபத்தைக் கேட்டருளும்.— 7 தே
வன் தமது பரிசுத்தத்தைக்கொண்டு விளம்
பினார், ஆகையால் களிகூருவேன்; சீகே
மைப் பங்கிட்டு, சுக்கோத்தின் பள்ளத்தாக்
கை அளந்துகொள்ளுவேன். — 8 கீலேயாத்

என்னுடையது, மனாசேயும் என்னுடை
யது; எப்பிராயீம் என் தலையின் பெலன்,
9 யூதா என் நியாயப்பிரமாணிகன்.—மோ
வாப் என் பாதபாத்திரம்; ஏதோமின்மேல்
என் பாதரட்சையை எறிவேன்; பெலிஸ்
தியாவின்மேல் ஆர்ப்பரிப்பேன்.
10 அரணான பட்டணத்திற்குள் என்னை
நடத்திக்கொண்டு போகிறவன் யார்? ஏ
தோம்மட்டும் எனக்கு வழிகாட்டுகிறவன்
11 யார்?—எங்கள் சேனைகளோடே புறப்படா
மலிருந்த தேவரீரல்லவா? எங்களைத் தள்ளி
12 விட்டிருந்த தேவரீரல்லவா?—இக்கட்டில்
எங்களுக்கு உதவிசெய்யும்; மனுஷனு
13 டைய உதவி விருதா.—தேவனாலே பராக்
கிரமஞ் செய்வோம்; அவரே எங்கள் சத்
துருக்களை மிதித்துப்போடுவார்.

**109** (இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

நான் துதிக்கும் தேவனே, மவுனமாயி
2 ராதேயும்.—துன்மார்க்கனுடைய வாயும்,
கபடவாயும், எனக்கு விரோதமாய்த் திற
ந்திருக்கிறது; கள்ளநாவினால் என்னோடே
3 பேசுகிறார்கள்.-பகையுண்டாக்கும் வார்த்
தைகளால் என்னைச் சூழ்ந்துகொண்டு, மு
காந்தரமில்லாமல் என்னோடே போர்செய்
4 கிறார்கள்.—என் சிநேகத்துக்குப் பதிலாக
என்னை விரோதிக்கிறார்கள், நானோ ஜெபம்
5 பண்ணிக்கொண்டிருக்கிறேன்.—நன்மைக்
குப் பதிலாக எனக்குத் தீமை செய்கிறார்
கள்; என் சிநேகத்துக்குப் பதிலாக என்னைப்
பகைக்கிறார்கள்.

6 அவனுக்கு மேலாகத் துஷ்டனை ஏற்படுத்
திவையும், சாத்தான் அவன் வலதுபக்கத்
7 தில் நிற்பானாக.—அவன் நியாயம் விசாரிக்
கப்படும்போது குற்றவாளியாகக்கடவன்;
8 அவன் ஜெபம் பாவமாகக்கடவது.—அவன்
நாட்கள் கொஞ்சமாகக்கடவது; அவன்
உத்தியோகத்தை வேறொருவன் பெறக்கட
9 வன்.—அவன் பிள்ளைகள் திக்கற்றவர்களும்,
அவன் மனைவி விதவையுமாகக்கடவர்கள்.-
10 அவன் பிள்ளைகள் அலைந்து திரிந்து பிச்சை
யெடுத்து, தங்கள் பாழான வீடுகளிலிருந்து
11 இரந்துண்ணக்கடவர்கள்.-கடன்கொடுத்த
வன் அவனுக்கு உள்ளதெல்லாவற்றையும்
அபகரித்துக்கொள்வானாக; அவன் பிரயா
சத்தின் பலனை அந்நியர் பறித்துக்கொள்
12 ளக்கடவர்கள். — அவனுக்கு ஒருவரும்
இரக்கங் காண்பியாமலும், அவனுடைய
திக்கற்ற பிள்ளைகளுக்குத் தயவுசெய்யாம
13 லும் போவார்களாக.—அவன் சந்ததியார்

நிர்மூலமாகக்கடவர்கள்; இரண்டாந்தலை
முறையில் அவர்கள் பேர் அற்றுப்போவ
தாக. — அவன் பிதாக்களின் அக்கிரமம் 14
கர்த்தருக்கு முன்பாக நினைக்கப்படக்கட
வது, அவன் தாயின் பாவம் நீங்காமலிருப்ப
தாக.—அவைகள் நித்தமும் கர்த்தருக்கு 15
முன்பாக இருக்கக்கடவது; அவர்கள் பேர்
பூமியிலிராமல் நிர்மூலமாவதாக.—அவன் 16
தயைசெய்ய நினையாமல், சிறுமையும் எளி
மையுமானவனைத் துன்பப்படுத்தி, மனமுறி
வுள்ளவனைக் கொலைசெய்யும்படி தேடினா
னே.—சாபத்தை விரும்பினான், அது அவ 17
னுக்கு வரும்; அவன் ஆசீர்வாதத்தை விரும்
பாமற்போனான், அது அவனுக்குத் தூர
மாய் விலகிப்போம்.—சாபத்தை அவன் 18
தனக்கு அங்கியாக உடுத்திக்கொண்டான்;
அது அவன் உள்ளத்தில் தண்ணீரைப்போல
வும், அவன் எலும்புகளில் எண்ணெயைப்
போலவும் பாயும்.—அது அவன் மூடிக்கொ 19
ள்ளுகிற வஸ்திரமாகவும், நித்தமும் கட்டிக்
கொள்ளுகிற கச்சையாகவும் இருப்பதாக.—
இதுதான் என்னை விரோதிக்கிறவர்களுக் 20
கும், என் ஆத்துமாவுக்கு விரோதமாய்த்
தீங்குபேசுகிறவர்களுக்கும் கர்த்தரால்
வரும் பலன்.

ஆண்டவராகிய கர்த்தாவே, நீர் உமது 21
நாமத்தினிமித்தம் என்னை ஆதரித்து, உமது
கிருபை நலமானதினால், என்னை விடுவித்
தருளும்.—நான் சிறுமையும் எளிமையு 22
மானவன், என் இருதயம் எனக்குள் குத்
துண்டிருக்கிறது. — சாயும் நிழலைப்போல் 23
அகன்றுபோனேன்; வெட்டுக்கிளியைப்
போல் பறக்கடிக்கப்படுகிறேன்.—உபவா 24
சத்தினால் என் முழங்கால்கள் தளர்ச்சிய
டைகிறது; என் மாம்சம் புஷ்டியற்று
உலர்ந்துபோகிறது.—நான் அவர்களுக்கு 25
நிந்தையானேன்; அவர்கள் என்னைப் பார்
த்து, தங்கள் தலையைத் துலுக்குகிறார்கள்.-
என் தேவனாகிய கர்த்தாவே, எனக்குச் 26
சகாயம்பண்ணும்; உமது கிருபையின்படி
என்னை இரட்சியும்.-இது உமது கரம் என் 27
றும், கர்த்தாவே, தேவரீர் இதைச் செய்
தீர் என்றும், அவர்கள் அறிவார்களாக.—
அவர்கள் சபித்தாலும், நீர் ஆசீர்வதியும்; 28
அவர்கள் எழும்பினாலும் வெட்கப்பட்டுப்
போவார்களாக; உமது அடியானோ மகிழக்
கடவன்.—என் விரோதிகள் இலச்சையால் 29
மூடப்பட்டு, தங்கள் வெட்கத்தைச் சால்
வையைப்போல் தரித்துக்கொள்ளக்கடவர்
கள்.—கர்த்தரை நான் என் வாயினால் 30

மிகவும் துதித்து, அநேகர் நடுவிலே அவ
31 ரைப் புகழுவேன்.—ஆக்கினைக்குள்ளாகத்
தீர்க்கிறவர்களினின்று எளியவனுடைய
ஆத்துமாவை இரட்சிக்கும்படி அவர் அவன்
வலது பாரிசத்தில் நிற்பார்.

**110** (தாவீதின் சங்கீதம்.)

கர்த்தர் என் ஆண்டவரை நோக்கி:
நான் உம்முடைய சத்துருக்களை உமக்குப்
பாதபடியாக்கிப் போடும்வரைக்கும், நீர்
என்னுடைய வலதுபாரிசத்தில் உட்காரும்
2 என்றார்.-கர்த்தர் சீயோனிலிருந்து உமது
வல்லமையின் செங்கோலை அனுப்புவார்;
நீர் உம்முடைய சத்துருக்களின் நடுவே
3 ஆளுகைசெய்யும். — உமது பராக்கிரமத்
தின் நாளிலே உம்முடைய ஜனங்கள் மனப்
பூர்வமும் பரிசுத்த அலங்காரமு முள்ள
வர்களா யிருப்பார்கள்; விடியற்காலத்துக்
கர்ப்பத்தில் பிறக்கும் பனிக்குச் சமான
மாய் உம்முடைய யௌவன ஜனம் உமக்
4 குப் பிறக்கும். — நீர் மெல்கிசேதேக்கின்
முறைமையின்படி என்றென்றைக்கும் ஆ
சாரியராயிருக்கிறீர் என்று கர்த்தர் ஆணை
யிட்டார்; மனம் மாறாமலுமிருப்பார்.—
5 உம்முடைய வலது பாரிசத்திலிருக்கிற
ஆண்டவர், தமது கோபத்தின் நாளிலே
6 ராஜாக்களை வெட்டுவார். — அவர் ஜாதி
களுக்குள் நியாயந்தீர்ப்பார்; எல்லா இடங்
களையும் பிரேதங்களால் நிரப்புவார்; விஸ்
தாரமான தேசங்களின்மேல் தலைவர்களா
யிருக்கிறவர்களை நொறுக்கிப்போடுவார்.—
7 வழியிலே அவர் நதியில் குடிப்பார்; ஆகை
யால் அவர் தமது தலையை எடுப்பார்.

**111** அல்லேலூயா, செம்மையானவர்களு
டைய சங்கத்திலும் சபையிலும் கர்த்தரை
2 முழு இருதயத்தோடும் துதிப்பேன்.-கர்த்
தரின் செய்கைகள் பெரியவைகளும், அ
வைகளில் பிரியப்படுகிற எல்லாராலும்
ஆராயப்படுகிறவைகளுமாயிருக்கிறது. —
3 அவருடைய செயல் மகிமையும் மகத்து
வமுமுள்ளது, அவருடைய நீதி என்றென்
4 றைக்கும் நிற்கும். — அவர் தம்முடைய
அதிசயமான செய்கைகளை நினைவுகூரும்படி
செய்தார், கர்த்தர் இரக்கமும் மன உருக்க
5 முமுள்ளவர்.—தமக்குப் பயந்தவர்களுக்கு
ஆகாரம் கொடுத்தார்; தமது உடன்படிக்
கையை என்றென்றைக்கும் நினைப்பார்.—
6 ஜாதிகளின் சுதந்தரத்தைத் தமது ஜனங்களு
க்குக் கொடுத்ததினால், தமது கிரியைகளின்
பெலத்தை அவர்களுக்குத் தெரியப்படுத்
7 தினார்.—அவருடைய கரத்தின் கிரியைகள்
சத்தியமும் நியாயமுமானவைகள்; அவரு
டைய கட்டளைகளெல்லாம் உண்மையான
வைகள். — அவைகள் என்றென்றைக்கு 8
முள்ள சதாகாலங்களுக்கும் உறுதியான
வைகள், அவைகள் உண்மையும் செம்
மையுமாய்ச் செய்யப்பட்டவைகள். —
அவர் தமது ஜனத்திற்கு மீட்பை அனுப்பி, 9
தமது உடன்படிக்கையை நித்திய உடன்
படிக்கையாகக் கட்டளையிட்டார்; அவரு
டைய நாமம் பரிசுத்தமும் பயங்கரமுமா
னது.—கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத் 10
தின் ஆரம்பம்; அவருடைய கற்பனைகளின்
படி செய்கிற யாவருக்கும் நற்புத்தியுண்டு;
அவர் புகழ்ச்சி என்றைக்கும் நிற்கும்.

அல்லேலூயா, கர்த்தருக்குப்பயந்து, **112**
அவருடைய கட்டளைகளில் மிகவும் பிரிய
மாயிருக்கிற மனுஷன் பாக்கியவான். —
அவன் சந்ததி பூமியில் பலத்திருக்கும், 2
செம்மையானவர்களின் வம்சம் ஆசீர்வதிக்
கப்படும்.-ஆஸ்தியும் ஐசுவரியமும் அவன் 3
வீட்டிலிருக்கும்; அவனுடைய நீதி என்
றைக்கும் நிற்கும்.—செம்மையானவர்களு 4
க்கு இருளிலே வெளிச்சம் உதிக்கும்; அவன்
இரக்கமும் மனஉருக்கமும் நீதியுமுள்ள
வன். — இரங்கிக் கடன் கொடுத்து, தன் 5
காரியங்களை நியாயமானபடி நடப்பிக்கிற
மனுஷன் பாக்கியவான்.-அவன் என்றென் 6
றைக்கும் அசைக்கப்படாதிருப்பான்; நீதி
மான் நித்திய கீர்த்தியுள்ளவன்.-துர்ச்செய் 7
தியைக்கேட்கிறதினால்பயப்படான்; அவன்
இருதயம் கர்த்தரை நம்பித் திடனாயிருக்
கும்.-அவன் இருதயம் உறுதியாயிருக்கும்; 8
அவன் தன் சத்துருக்களில் சரிக்கட்டுதலைக்
காணுமட்டும் பயப்படாதிருப்பான்.-வாரி 9
யிறைத்தான், ஏழைகளுக்குக் கொடுத்தான்,
அவனுடைய நீதி என்றென்றைக்கும் நிற்
கும்; அவன் கொம்பு மகிமையாய் உயர்த்
தப்படும்.

துன்மார்க்கன் அதைக் கண்டு மனமடி 10
வாகி, தன் பற்களைக் கடித்துக் கரைந்து
போவான்; துன்மார்க்கருடைய ஆசை
அழியும்.

அல்லேலூயா, கர்த்தருடைய ஊழி **113**
யக்காரரே, துதியுங்கள்; கர்த்தருடைய
நாமத்தைத் துதியுங்கள்.—இதுமுதல் என் 2
றென்றைக்கும் கர்த்தருடைய நாமம்
ஸ்தோத்திரிக்கப்படக்கடவது. — சூரியன் 3
உதிக்கும் திசைதொடங்கி அது அஸ்தமிக்
கும் திசைமட்டும் கர்த்தருடைய நாமம்
துதிக்கப்படுவதாக — கர்த்தர் எல்லா 4

ஜாதிகள்மேலும் உயர்ந்தவர்; அவருடைய மகிமை வானங்களுக்கு மேலானது.
5 உன்னதங்களில் வாசம் பண்ணுகிற நம்முடைய தேவனாகிய கர்த்தருக்குச் சமான
6 மானவர் யார்?—அவர் வானத்திலும் பூமியிலுமுள்ளவைகளைப் பார்க்கும்படி தம்
7 மைத் தாழ்த்துகிறார்.—அவர் சிறியவனைப் புழுதியிலிருந்து தூக்கிவிடுகிறார்; எளியவனைக் குப்பையிலிருந்து உயர்த்துகிறார்.—
8 அவனைப் பிரபுக்களோடும், தமது ஜனத்தின் அதிபதிகளோடும், உட்காரப்பண்ணு
9 கிறார்.-மலடியைச் சந்தோஷமான பிள்ளைத்தாய்ச்சியாக்கி, வீட்டிலே குடியிருக்கப் பண்ணுகிறார். அல்லேலூயா.

114 இஸ்ரவேல் எகிப்திலும், யாக்கோபின் குடும்பம் அந்நியபாஷைக்காரரான ஜனத்
2 திலுமிருந்து புறப்பட்டபோது,—யூதா அவருக்குப் பரிசுத்த ஸ்தானமும், இஸ்ரவேல் அவருக்கு ராஜியமுமாயிற்று.
3 கடல் கண்டு விலகி ஓடிற்று; யோர்தான்
4 பின்னிட்டுத் திரும்பினது.—மலைகள் ஆட்டுக்கடாக்களைப்போலவும், குன்றுகள் ஆட்டுக்குட்டிகளைப்போலவும் துள்ளினது.
5 கடலே, நீ விலகியோடுகிறதற்கும், யோர்தானே, நீ பின்னிட்டுத் திரும்புகிறதற்
6 கும்; — மலைகளே, நீங்கள் ஆட்டுக்கடாக்களைப்போலவும்; குன்றுகளே, நீங்கள் ஆட்டுக்குட்டிகளைப்போலவும் துள்ளுகிறதற்கும், உங்களுக்கு என்ன வந்தது?
7 பூமியே, நீ ஆண்டவருக்கு முன்பாகவும், யாக்கோபுடைய தேவனுக்கு முன்
8 பாகவும் அதிரு. — அவர் கன்மலையைத் தண்ணீர்த்தடாகமாகவும், கற்பாறையை நீரூற்றுகளாகவும் மாற்றுகிறார்.

115 எங்களுக்கு அல்ல, கர்த்தாவே, எங்களுக்கு அல்ல, உமது கிருபையினிமித்தமும், உமது சத்தியத்தினிமித்தமும், உம்முடைய நாமத்திற்கே மகிமை வரப்பண்
2 ணும்.—அவர்களுடைய தேவன் இப்பொழுது எங்கே என்று புறஜாதிகள் சொல்
3 வானேன்?—நம்முடைய தேவன் பரலோகத்தில் இருக்கிறார்; தமக்குச் சித்தமானயாவையும் செய்கிறார்.
4 அவர்களுடைய விக்கிரகங்கள் வெள்ளியும் பொன்னும், மனுஷருடைய கைவேலை
5 யுமாயிருக்கிறது. — அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது; அவைகளுக்குக் கண்
6 களிருந்தும் காணாது. — அவைகளுக்குக் காதுகளிருந்தும் கேளாது; அவைகளுக்கு
7 மூக்கிருந்தும் முகராது.—அவைகளுக்குக் கைகளிருந்தும் தொடாது; அவைகளுக்குக் கால்களிருந்தும் நடவாது; தங்கள் தொண்டையால் சத்தமிடவும் மாட்டாது. —
8 அவைகளைப் பண்ணுகிறவர்களும், அவைகளை நம்புகிறவர்கள் யாவரும், அவைகளைப்போலவே இருக்கிறார்கள்.
9 இஸ்ரவேலே, கர்த்தரை நம்பு; அவரே அவர்களுக்குத் துணையும் அவர்களுக்குக்
10 கேடகமுமாயிருக்கிறார்.—ஆரோன் குடும்பத்தாரே, கர்த்தரை நம்புங்கள்; அவரே அவர்களுக்குத் துணையும் அவர்களுக்குக்
11 கேடகமுமாயிருக்கிறார். — கர்த்தருக்குப் பயப்படுகிறவர்களே, கர்த்தரை நம்புங்கள்; அவரே அவர்களுக்குத் துணையும் அவர்களுக்குக் கேடகமுமாயிருக்கிறார்.
12 கர்த்தர் நம்மை நினைத்திருக்கிறார், அவர் ஆசீர்வதிப்பார்; இஸ்ரவேல் குடும்பத்தாரை ஆசீர்வதிப்பார், அவர் ஆரோன் குடும்
13 பத்தாரை ஆசீர்வதிப்பார். — கர்த்தருக்குப் பயப்படுகிற பெரியோரையும் சிறி
14 யோரையும் ஆசீர்வதிப்பார். — கர்த்தர் உங்களையும் உங்கள் பிள்ளைகளையும் வர்த்
15 திக்கப்பண்ணுவார்.—வானத்தையும் பூமியையும் படைத்த கர்த்தராலே நீங்கள்
16 ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். — வானங்கள் கர்த்தருடையவைகள்; பூமியையோ
17 மனுபுத்திரருக்குக் கொடுத்தார்.— மரித்தவர்களும் மவுனத்தில் இறங்குகிற அனை
18 வரும் கர்த்தரைத் துதியார்கள்.—நாமோ, இதுமுதல் என்றென்றைக்கும் கர்த்தரை ஸ்தோத்திரிப்போம். அல்லேலூயா.

116 கர்த்தர் என் சத்தத்தையும் என் விண்ணப்பத்தையும் கேட்டதினால், அவரில்
2 அன்புகூருகிறேன். — அவர் தமது செவியை எனக்குச் சாய்த்தபடியால், நான் உயிரோடிருக்குமளவும் அவரைத் தொழுது கொள்ளுவேன்.
3 மரணக்கட்டுகள் என்னைச் சுற்றிக்கொண்டது, பாதாள இடுக்கண்கள் என்னைப் பிடித்தது; இக்கட்டையும் சஞ்சலத்தையும் அடைந்தேன்.—அப்பொழுது, நான்
4 கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டு: கர்த்தாவே, என் ஆத்துமாவை விடு
5 வியும் என்று கெஞ்சினேன். — கர்த்தர் கிருபையும் நீதியுமுள்ளவர், நம்முடைய
6 தேவன் மன உருக்கமானவர்.—கர்த்தர் கபடற்றவர்களைக் காக்கிறார்; நான் மெலிந்துபோனேன், அவர் என்னை இரட்சித்தார்.-
7 என் ஆத்துமாவே, கர்த்தர் உனக்கு நன்மை செய்தபடியால், நீ உன் இளைப்பாறு

8 தனுக்குத் திரும்பு. — என் ஆத்துமாவை மரணத்துக்கும், என் கண்ணைக் கண்ணீருக்கும், என் காலை இடறுதலுக்கும் தப்பு 9 வித்தீர். — நான் கர்த்தருக்கு முன்பாக ஜீவனுள்ளோர் தேசத்திலே நடப்பேன்.— 10 விசுவாசித்தேன், ஆகையால் பேசுகிறேன்; 11 நான் மிகுதியும் வருத்தப்பட்டேன்.—எந்த மனுஷனும் பொய்யன் என்று என் மனக் கலக்கத்திலே சொன்னேன்.

12 கர்த்தர் எனக்குச் செய்த எல்லா உபகாரங்களுக்காகவும், அவருக்கு என்னத் 13 தைச் செலுத்துவேன்.—இரட்சிப்பின் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு, கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொள்ளுவேன். — 14 நான் கர்த்தருக்குச் செய்த பொருத்தனைகளை அவருடைய ஜனங்களெல்லாருக்கு 15 முன்பாகவும் செலுத்துவேன். — கர்த்தருடைய பரிசுத்தவான்களின் மரணம் அவர் பார்வைக்கு அருமையானது.

16 கர்த்தாவே, நான் உமது அடியேன்; நான் உமது அடியாளின் புத்திரனும், உமது ஊழியக்காரனுமாயிருக்கிறேன்; என் கட்டு 17 களை அவிழ்த்துவிட்டீர். — நான் உமக்கு ஸ்தோத்திரபலியைச் செலுத்தி, கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொள்ளு 18 வேன்.—நான் கர்த்தருக்குச் செய்த பொருத்தனைகளை அவருடைய ஜனங்களெல் 19 லாருக்கு முன்பாகவும், — கர்த்தருடைய ஆலயத்தின் பிராகாரங்களிலும், எருசலேமே உன் நடுவிலும் நிறைவேற்றுவேன். அல்லேலூயா.

**117** ஜாதிகளே, எல்லாரும் கர்த்தரைத் துதியுங்கள்; ஜனங்களே, எல்லாரும் அவ 2 ரைப் போற்றுங்கள். — அவர் நம்மேல் வைத்த கிருபை பெரியது; கர்த்தரின் உண்மை என்றென்றைக்குமுள்ளது. அல்லேலூயா.

**118** கர்த்தரைத் துதியுங்கள், அவர் நல்ல 2 வர்; அவர் கிருபை என்றுமுள்ளது.-அவர் கிருபை என்றுமுள்ளதென்று இஸ்ரவேல் 3 சொல்வதாக.—அவர் கிருபை என்றுமுள்ளதென்று, ஆரோனின் குடும்பத்தார் சொல் 4 வார்களாக.—அவர் கிருபை என்றுமுள்ளதென்று, கர்த்தருக்குப் பயப்படுகிறவர்கள் சொல்வார்களாக.

5 நெருக்கத்திலிருந்து கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன், கர்த்தர் என்னைக் கேட் 6 டருளி விசாலத்திலே வைத்தார்.—கர்த்தர் என் பட்சத்தில் இருக்கிறார், நான் பயப்படேன்; மனுஷன் எனக்கு என்னசெய் வான்?—எனக்கு அநுகூலம் பண்ணுகிற 7 வர்கள் நடுவில் கர்த்தர் என் பட்சத்தில் இருக்கிறார்; என் சத்துருக்களில் சரிக்கட்டுதலைக் காண்பேன்.-மனுஷனை நம்புவதைப் 8 பார்க்கிலும், கர்த்தர்பேரில் பற்றுதலாயிருப்பதே நலம்.—பிரபுக்களை நம்புவதைப் 9 பார்க்கிலும், கர்த்தர் பேரில் பற்றுதலாயிருப்பதே நலம். — எல்லா ஜாதியாரும் 10 என்னை வளைந்துகொள்ளுகிறார்கள்; கர்த்தருடைய நாமத்தினால் அவர்களைச் சங்கரிப்பேன்.—என்னைச் சுற்றிலும் வளைந்துகொள் 11 ளுகிறார்கள்; கர்த்தருடைய நாமத்தினால் அவர்களைச் சங்கரிப்பேன்.—தேனீக்களைப் 12 போல என்னை வளைந்துகொள்ளுகிறார்கள்; முள்ளில் பற்றின நெருப்பைப்போல அணைந்துபோவார்கள்; கர்த்தருடைய நாமத்தினால் அவர்களைச் சங்கரிப்பேன். — நான் 13 விழும்படி நீ என்னைத் தள்ளினாய்; கர்த்தரோ எனக்கு உதவிசெய்தார்.—கர்த்தர் 14 என் பெலனும், என் கீதமுமானவர்; அவர் எனக்கு இரட்சிப்புமானார்.—நீதிமான்களு 15 டைய கூடாரங்களில் இரட்சிப்பின் கெம்பீரசத்தம் உண்டு; கர்த்தரின் வலதுகரம் பராக்கிரமஞ்செய்யும்.—கர்த்தரின் வலது 16 கரம் உயர்ந்திருக்கிறது; கர்த்தரின் வலது கரம் பராக்கிரமஞ்செய்யும்.

நான் சாவாமல், பிழைத்திருந்து, கர்த் 17 தருடைய செய்கைகளை விவரிப்பேன்.—கர்த்தர் என்னை வெகுவாய்த் தண்டித்தும், 18 என்னைச் சாவுக்கு ஒப்புக்கொடுக்கவில்லை.-நீதியின் வாசல்களைத் திறவுங்கள்; நான் 19 அவைகளுக்குள் பிரவேசித்துக் கர்த்தரைத் துதிப்பேன்.

கர்த்தரின் வாசல் இதுவே; நீதிமான் 20 கள் இதற்குள் பிரவேசிப்பார்கள். — நீர் 21 எனக்குச் செவிகொடுத்து, எனக்கு ரட்சிப்பாயிருந்தபடியால், நான் உம்மைத் துதிப்பேன்.—வீடு கட்டுகிறவர்கள் ஆகாதென்று 22 தள்ளின கல்லே, மூலைக்குத் தலைக்கல்லாயிற்று.—அது கர்த்தராலே ஆயிற்று, அது 23 நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது.—இது கர்த்தர் உண்டுபண்ணின 24 நாள், இதிலே களிகூர்ந்து மகிழக்கடவோம்.—கர்த்தாவே, இரட்சியும்; கர்த் 25 தாவே, காரியத்தை வாய்க்கப்பண்ணும்.—கர்த்தருடைய நாமத்தினாலே வருகிறவர் 26 ஸ்தோத்திரிக்கப்பட்டவர்; கர்த்தருடைய ஆலயத்திலிருந்து உங்களை ஆசீர்வதிக்கிறோம்.—கர்த்தர் நம்மைப் பிரகாசிப்பிக் 27 கிற தேவனாயிருக்கிறார், பண்டிகைப் பலி

யைக் கொண்டுபோய் பலிபீடத்தின் கொம்
28 புகளில் கயிறுகளால் கட்டுங்கள்.—நீர் என்
தேவன், நான் உம்மைத் துதிப்பேன்; நீர்
என்தேவன், நான் உம்மை உயர்த்துவேன்.
29 கர்த்தரைத் துதியுங்கள், அவர் நல்ல
வர்; அவர் கிருபை என்றுமுள்ளது.

119 א ஆலெப்.

கர்த்தருடைய வேதத்தின்படி நடக்
கிற உத்தம மார்க்கத்தார் பாக்கியவான்
2 கள்.—அவருடைய சாட்சிகளைக் கைக்கொ
ண்டு, அவரை முழு இருதயத்தோடும் தேடு
3 கிறவர்கள் பாக்கியவான்கள். — அவர்கள்
அநியாயம்செய்வதில்லை; அவருடையவழி
4 களில் நடக்கிறார்கள். — உமது கட்டளை
களை நாங்கள் கருத்தாய்க் கைக்கொள்ளும்
5 படி நீர் கற்பித்தீர்.-உமது பிரமாணங்களைக்
கைக்கொள்ளும்படி, என் நடைகள் ஸ்திரப்
6 பட்டால் நலமாயிருக்கும்.—நான் உம்மு
டைய கற்பனைகளையெல்லாம் கண்ணோக்
கும்போது, வெட்கப்பட்டுப் போவதில்லை.-
7 உம்முடைய நீதிநியாயங்களை நான் கற்றுக்
கொள்ளும்போது, செம்மையான இருத
8 யத்தால் உம்மைத் துதிப்பேன்.-உமது பிர
மாணங்களைக் கைக்கொள்ளுவேன்; முற்றி
லும் என்னைக் கைவிடாதேயும்.

ב பேத்.

9 வாலிபன் தன் வழியை எதினால் சுத்தம்
பண்ணுவான்? உமது வசனத்தின்படி தன்
னைக் காத்துக் கொள்ளுகிறதினால்தானே.—
10 என் முழு இருதயத்தோடும் உம்மைத் தேடு
கிறேன், என்னை உமது கற்பனைகளை விட்டு
11 வழிதப்பவிடாதேயும்.-நான் உமக்குவிரோ
தமாய்ப் பாவஞ்செய்யாதபடிக்கு, உமது
வாக்கை என்னிருதயத்தில் வைத்துவைத்
12 தேன்.—கர்த்தாவே, நீர் ஸ்தோத்திரிக்கப்
பட்டவர்; உம்முடைய பிரமாணங்களை
13 எனக்குப் போதியும்.—உம்முடைய வாக்
கின் நியாயத்தீர்ப்புகளை யெல்லாம் என்
14 உதடுகளால் விவரித்திருக்கிறேன். — திர
ளான செல்வத்தில்களிகூருவதுபோல,நான்
உமது சாட்சிகளின் வழியில் களிகூருகி
15 றேன்.—உமது கட்டளைகளைத் தியானித்து,
உமது வழிகளைக் கண்ணோக்குகிறேன்.—
16 உமது பிரமாணங்களில் மனமகிழ்ச்சியா
யிருக்கிறேன்; உமது வசனத்தை மறவேன்.

ג கிமெல்.

17 உமது அடியேனுக்கு அநுகூலமாயிரும்;
அப்பொழுது நான் பிழைத்து, உமது வச
18 னத்தைக் கைக்கொள்ளுவேன்.-உமது வே
தத்திலுள்ள அதிசயங்களை நான் பார்க்கும்
படிக்கு, என் கண்களைத் திறந்தருளும்.-பூமி 19
யிலே நான் பரதேசி; உமது கற்பனைகளை
எனக்கு மறையாதேயும்.—உமது நியாயங் 20
கள்மேல் என் ஆத்துமா எக்காலமும்
வைத்திருக்கிற வாஞ்சையினால் தொய்ந்து
போகிறது.-உமது கற்பனைகளை விட்டு வழி 21
விலகின சபிக்கப்பட்ட அகங்காரிகளை நீர்
கடிந்துகொள்ளுகிறீர்.-நிந்தையையும் அவ 22
மானத்தையும் என்னை விட்டகற்றும்; நான்
உம்முடைய சாட்சிகளைக் கைக்கொள்ளுகி
றேன்.—பிரபுக்களும் உட்கார்ந்து எனக்கு 23
விரோதமாய்ப் பேசிக்கொள்ளுகிறார்கள்;
உமது அடியேனோ, உமது பிரமாணங்களைத்
தியானிக்கிறேன். — உம்முடைய சாட்சி 24
கள் எனக்கு இன்பமும், என் ஆலோசனைக்
காரருமாயிருக்கிறது.

ד டாலெத்.

என் ஆத்துமா மண்ணோடு ஒட்டிக் 25
கொண்டிருக்கிறது; உமது வசனத்தின்படி
என்னை உயிர்ப்பியும்.-என் வழிகளை நான் 26
உமக்கு விவரித்துக் காட்டினபோது எனக்
குச் செவிகொடுத்தீர்; உமது பிரமாணங்
களை எனக்குப் போதியும்.—உமது கட்டளை 27
களின் வழியை எனக்கு உணர்த்தியருளும்;
அப்பொழுது உமது அதிசயங்களைத் தியா
னிப்பேன்.—சஞ்சலத்தால் என் ஆத்துமா 28
கரைந்துபோகிறது; உமது வசனத்தின்படி
என்னை எடுத்து நிறுத்தும். — பொய்வழி 29
யை என்னை விட்டு விலக்கி, உம்முடைய
வேதத்தை எனக்கு அருள்செய்யும்.-மெய் 30
வழியை நான் தெரிந்துகொண்டு, உம்மு
டைய நியாயங்களை எனக்குமுன்பாக நிறுத்
தினேன்.-உமது சாட்சிகள்மேல் பற்றுதலா 31
யிருக்கிறேன்; கர்த்தாவே, என்னை வெட்
கத்திற்குட்படப் பண்ணாதேயும்.—நீர் என் 32
இருதயத்தை விசாலமாக்கும்போது, நான்
உமது கற்பனைகளின் வழியாக ஓடுவேன்.

ה ஏ.

கர்த்தாவே, உமது பிரமாணங்களின் 33
வழியை எனக்குப் போதியும்; முடிவுபரி
யந்தம் நான் அதைக் காத்துக்கொள்ளு
வேன்.—எனக்கு உணர்வைத் தாரும்; அப் 34
பொழுது நான் உமது வேதத்தைப் பற்றிக்
கொண்டு, என் முழு இருதயத்தோடும் அ
தைக் கைக்கொள்ளுவேன்.—உமது கற் 35
பனைகளின் பாதையில் என்னை நடத்தும்;
நான் அதில் பிரியமாயிருக்கிறேன்.—என் 36
இருதயம் பொருளாசையைச் சாராமல்,
உமது சாட்சிகளைச் சாரும்படி செய்யும்.—
மாயையைப் பாராதபடி நீர் என் கண்களை 37

விலக்கி, உமது வழிகளில் என்னை உயிர்ப்
38 பியும்.—உமக்குப் பயப்படுகிறதற்கு ஏற்ற உமது வாக்கை உமது அடியேனுக்கு உறு
39 திப்படுத்தும்.—நான் அஞ்சுகிற நிந்தையை விலக்கியருளும்; உம்முடைய நியாயத்
40 தீர்ப்புகள் நல்லவைகள்.—இதோ, உம்முடைய கட்டளைகள்மேல் வாஞ்சையாயிருக்கிறேன்; உமது நீதியால் என்னை உயிர்ப்பியும்.

ו வௌ.

41 கர்த்தாவே, உம்முடைய வாக்கின்படி, உமது தயவும் உமது இரட்சிப்பும் எனக்கு
42 வருவதாக.—அப்பொழுது என்னை நிந்திக்கிறவனுக்கு உத்தரவு சொல்லுவேன்; உம்முடைய வசனத்தை நம்பியிருக்கிறேன்.—
43 சத்தியவசனம் முற்றிலும் என் வாயினின்று நீங்கவிடாதேயும்; உம்முடைய நியாயத்
44 தீர்ப்புகளுக்குக் காத்திருக்கிறேன்.—நான் எப்பொழுதும் என்றைக்கும் உமது வேதத்
45 தைக் காத்துக்கொள்ளுவேன்.—நான் உம்முடைய கட்டளைகளை ஆராய்கிறபடியால்,
46 விசாலத்திலே நடப்பேன்.—நான் உம்முடைய சாட்சிகளைக்குறித்து, ராஜாக்களுக்கு முன்பாகவும் வெட்கப்படாமல் பேசு
47 வேன்.—நான் பிரியப்படுகிற உமது கற்பனைகளின்பேரில் மனமகிழ்ச்சியா யிருப்
48 பேன்.—நான் பிரியப்படுகிற உமது கற்பனைகளுக்குக் கையெடுப்பேன், உமது பிரமாணங்களைத் தியானிப்பேன்.

ז சாயின்.

49 நீர் என்னை நம்பப்பண்ணின வசனத்தை உமது அடியேனுக்காக நினைத்தருளும்.—
50 அதுவே என் சிறுமையில் எனக்கு ஆறுதல், உம்முடைய வாக்கு என்னை உயிர்ப்பித்
51 தது.—அகந்தைக்காரர் என்னை மிகவும் பரியாசம்பண்ணியும், நான் உமது வேதத்
52 தை விட்டு விலகினதில்லை.—கர்த்தாவே, ஆதிமுதலான உமது நியாயத்தீர்ப்புகளை நான் நினைத்து, என்னைத் தேற்றுகிறேன்.—
53 உமது வேதத்தை விட்டு விலகுகிற துன்மார்க்கர்நிமித்தம் நடுக்கம் என்னைப் பிடித்
54 தது.—நான் பரதேசியாய்த் தங்கும் வீட்டிலே உமது பிரமாணங்கள் எனக்குக் கீதங்
55 களாயின.—கர்த்தாவே, இராக்காலத்தில் உமது நாமத்தை நினைத்து, உமது வேதத்
56 தைக் கைக்கொள்ளுகிறேன்.—நான் உமது கட்டளைகளைக் கைக்கொண்டபடியினால், இது எனக்குக் கிடைத்தது.

ח கேத்.

57 கர்த்தாவே, நீரே என் பங்கு; நான் உமது வசனங்களைக் கைக்கொள்ளுவேன்
58 என்றேன்.—முழு இருதயத்தோடும் உம்முடைய தயவுக்காகக் கெஞ்சுகிறேன்; உமது
59 வாக்கின்படி எனக்கு இரங்கும்.—என் வழிகளைச் சிந்தித்துக்கொண்டு, என் கால்களை உம்முடைய சாட்சிகளுக்கு நேராகத் திருப்
60 பினேன்.—உமது கற்பனைகளைக் கைக்கொள்ளும்படி, நான் தாமதியாமல் தீவிரித்
61 தேன்.—துன்மார்க்கரின் கூட்டங்கள் என்னைக் கொள்ளையிட்டும், உம்முடைய வேதத்தை நான் மறக்கவில்லை.—
62 உமது நீதியான நியாயத்தீர்ப்புகளினிமித்தம், உம்மைத் துதிக்கும்படி பாதிராத்திரியில் எழுந்
63 திருப்பேன்.—உமக்குப் பயந்து, உமது கட்டளைகளைக் கைக்கொள்ளுகிற அனைவருக்கும் நான் தோழன்.—
64 கர்த்தாவே, பூமி உமது கிருபையினால் நிறைந்திருக்கிறது; உமது பிரமாணங்களை எனக்குப் போதியும்.

ט தேத்.

65 கர்த்தாவே, உமது வசனத்தின்படி உமது அடியேனை நன்றாய் நடத்தினீர்.—
66 உத்தம நிதானிப்பையும் அறிவையும் எனக்குப் போதித்தருளும், உம்முடைய கற்பனைகளின்பேரில் விசுவாசமாயிருக்கி
67 றேன்.—நான் உபத்திரவப்படுவதற்கு முன் வழிதப்பி நடந்தேன்; இப்பொழுதோ உம்முடைய வார்த்தையைக் காத்து நடக்கி
68 றேன்.—தேவரீர் நல்லவரும், நன்மை செய்கிறவருமாயிருக்கிறீர்; உமது பிரமாணங்களை எனக்குப் போதியும்.—
69 அகங்காரிகள் எனக்கு விரோதமாய்ப் பொய்களைப் பிணைக்கிறார்கள்; நானோ, முழு இருதயத்தோடும் உம்முடைய கட்டளைகளைக் கைக்கொள்ளு
70 வேன்.—அவர்கள் இருதயம் நிணத்துணிக் கொழுத்திருக்கிறது; நானோ, உம்முடைய வேதத்தில் மனமகிழ்ச்சியாயிருக்
71 கிறேன்.—நான் உபத்திரவப்பட்டது எனக்கு நல்லது; அதினால் உமது பிரமாணங்களைக் கற்றுக்கொள்ளுகிறேன்.—
72 அநேகமாயிரம் பொன் வெள்ளியைப்பார்க்கிலும், நீர் விளம்பின வேதமே எனக்கு நலம்.

י யோட்.

73 உம்முடைய கரங்கள் என்னை உண்டாக்கி, என்னை உருவாக்கிற்று; உம்முடைய கற்பனைகளைக் கற்றுக்கொள்ள என்னை உணர்
74 வுள்ளவனாக்கும்.—நான் உம்முடைய வசனத்திற்குக் காத்திருக்கிறபடியால், உமக்குப் பயந்தவர்கள் என்னைக் கண்டு சந்தோஷப்
75 படுவார்கள்.—கர்த்தாவே, உமது நியா

யத்தீர்ப்புகள் நீதியுள்ளதென்றும், உண்
மையின்படி என்னை உபத்திரவப்படுத்தினீ
76 ரென்றும் அறிவேன்.—நீர் உமது அடியே
னுக்குக் கொடுத்த உமது வாக்கின்படி,
உமது கிருபை என்னைத் தேற்றுவதாக.—
77 நான் பிழைத்திருக்கும்படிக்கு உமது இரக்
கங்கள் எனக்குக் கிடைப்பதாக; உம்மு
78 டைய வேதம் என் மனமகிழ்ச்சி.—அகங்
காரிகள் என்னைப் பொய்களினால் கெடுக்
கப் பார்த்தபடியால் வெட்கப்பட்டுப் போ
வார்களாக; நானோ உமது கட்டளைகளைத்
79 தியானிப்பேன்.—உமக்குப் பயந்து, உமது
சாட்சிகளை அறிந்திருக்கிறவர்கள் என்னண்
80 டைக்குத் திரும்புவார்களாக.-நான் வெட்
கப்பட்டுப்போகாதபடிக்கு, என் இருதயம்
உமது பிரமாணங்களில் உத்தமமாயிருக்
கக்கடவது.

כ கப்.

81 உம்முடைய இரட்சிப்புக்கு என் ஆத்து
மா தவிக்கிறது; உம்முடைய வசனத்துக்
82 குக் காத்திருக்கிறேன்.—எப்பொழுது என்
னைத் தேற்றுவீர் என்று, உம்முடைய வாக்
கின்மேல் நோக்கமாய் என் கண்கள் பூத்
83 துப்போகிறது. — புகையிலுள்ள துருத்தி
யைப்போலானேன்; உமது பிரமாணங்களை
84 யோ மறவேன்.—உமது அடியேனுடைய
நாட்கள் எம்மாத்திரம்? என்னைத் துன்பப்
படுத்துகிறவர்களுக்கு நீர் எப்பொழுது
85 நியாயத்தீர்ப்பு செய்வீர்? — உம்முடைய
வேதத்துக்கு விரோதமாய் அகங்காரிகள்
86 எனக்குக் குழிகளை வெட்டினார்கள்.—உம்
முடைய கற்பனைகளெல்லாம் உண்மையா
யிருக்கிறது; அநியாயமாய் என்னைத் துன்
பப்படுத்துகிறார்கள்; நீர் எனக்குச் சகாயம்
87 பண்ணும்.—அவர்கள் என்னைப் பூமியிலி
ராமல் நீக்கிவிடச் சற்றே தப்பிற்று; ஆனா
லும் நான் உமது கட்டளைகளை விட்டுவிட
88 வில்லை.-உமது கிருபையின்படியே என்னை
உயிர்ப்பியும்; அப்பொழுது நான் உம்மு
டைய வாக்கின் சாட்சியைக் காத்து நடப்
பேன்.

ל லாமேட்.

89 கர்த்தாவே, உமது வசனம் என்றென்
றைக்கும் வானங்களில் நிலைத்திருக்கிறது.-
90 உம்முடைய உண்மை தலைமுறை தலை
முறையாக இருக்கும்; பூமியை உறுதிப்
91 படுத்தினீர், அது நிலைத்திருக்கிறது.—உம்
முடைய பிரமாணங்களை நிறைவேற்றும்
படி அவைகள் இந்நாள் வரைக்கும் நிற்
கிறது; சமஸ்தமும் உம்மைச் சேவிக்கும்.-
92 உமது வேதம் என் மனமகிழ்ச்சியாயிரா
திருந்தால், என் துக்கத்திலே அழிந்துபோ
93 யிருப்பேன்.—நான் ஒருபோதும் உம்மு
டைய கட்டளைகளை மறக்கமாட்டேன்;
அவைகளால் நீர் என்னை உயிர்ப்பித்தீர்.—
94 நான் உம்முடையவன், என்னை இரட்சி
யும்; உம்முடைய கட்டளைகளை ஆராய்கி
95 றேன்.—துன்மார்க்கர் என்னை அழிக்கக்
காத்திருக்கிறார்கள்; நான் உமது சாட்சி
களைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன்.—
96 சகல சம்பூரணத்திற்கும் எல்லையைக்
கண்டேன்; உம்முடைய கற்பனையோ
மகா விஸ்தாரம்.

מ மேம்.

97 உமது வேதத்தில் நான் எவ்வளவு பிரி
யமாயிருக்கிறேன்! நாள்முழுதும் அது
98 என் தியானம்.—நீர் உம்முடைய கற்பனை
களைக்கொண்டு என்னை என் சத்துருக்களி
லும் அதிக ஞானமுள்ளவனாக்குகிறீர்; அ
வைகள் என்றைக்கும் என்னுடனே இரு
99 க்கிறது.—உம்முடைய சாட்சிகள் என்
தியானமா யிருக்கிறபடியால், எனக்குப்
போதித்தவர்களெல்லாரிலும் அறிவுள்ள
100 வனாயிருக்கிறேன். — உம்முடைய கட்
டளைகளை நான் கைக்கொண்டிருக்கிறபடி
யால், முதியோர்களைப்பார்க்கிலும் ஞான
101 முள்ளவனாயிருக்கிறேன்.—உம்முடைய
வசனத்தை நான் காத்து நடக்கும்படிக்கு,
சகல பொல்லாத வழிகளுக்கும் என் கால்
102 களை விலக்குகிறேன்.—நீர் எனக்குப் போ
தித்திருக்கிறபடியால், நான் உம்முடைய
103 நியாயங்களை விட்டு விலகேன்.—உம்மு
டைய வார்த்தைகள் என் நாவுக்கு எவ்வ
ளவு இனிமையானவைகள்; என் வாய்க்கு
அவைகள் தேனிலும் மதுரமாயிருக்கும்.-
104 உமது கட்டளைகளால் உணர்வடைந்
தேன், ஆதலால் எல்லாப் பொய்வழிகளை
யும் வெறுக்கிறேன்.

נ நூன்.

105 உம்முடைய வசனம் என் கால்களுக்
குத் தீபமும், என் பாதைக்கு வெளிச்ச
106 முமாயிருக்கிறது. — உம்முடைய நீதி
நியாயங்களைக் காத்து நடப்பேன் என்று
ஆணையிட்டேன்; அதை நிறைவேற்று
107 வேன். — நான் மிகவும் உபத்திரவப்படுகி
றேன்; கர்த்தாவே, உம்முடைய வச
னத்தின்படியே என்னை உயிர்ப்பியும்.—
108 கர்த்தாவே, என் வாயின் உற்சாகபலி
களை நீர் அங்கீகரித்து, உமது நியாயங்
109 களை எனக்குப் போதித்தருளும்.—என்

பிராணன் எப்பொழுதும் என் கையில்
இருக்கிறது; ஆனாலும் உம்முடைய வே
110 தத்தை மறவேன்.—துன்மார்க்கர் எனக்
குக் கண்ணிவைக்கிறார்கள்; ஆனாலும்
நான் உம்முடைய கட்டளைகளை விட்டுவழி
111 தவறேன்.—உம்முடைய சாட்சிகளை நித்
திய சுதந்தரமாக்கிக்கொண்டிருக்கிறேன்,
அவைகளே என் இருதயத்தின் மகிழ்ச்சி.-
112 முடிவுபரியந்தம் இடைவிடாமல் உம்மு
டைய பிரமாணங்களின்படி செய்ய என்
இருதயத்தைச் சாய்த்தேன்.

ס சாமெக்.

113 வீண் சிந்தனைகளை நான் வெறுத்து உமது
114 வேதத்தில் பிரியப்படுகிறேன்.-என் மறை
விடமும் என் கேடகமும் நீரே; உம்மு
டைய வசனத்துக்குக் காத்திருக்கிறேன்.-
115 பொல்லாதவர்களே, என்னைவிட்டு அகன்
றுபோங்கள்; என் தேவனுடைய கற்பனை
116 களை நான் கைக்கொள்ளுவேன்.—நான்
பிழைத்திருப்பதற்கு உமது வார்த்தையின்
படி என்னை ஆதரித்தருளும்; என் நம்
பிக்கை விருதாவாய்ப்போக என்னை வெட்
117 கத்திற்கு உட்படுத்தாதேயும். — என்னை
ஆதரித்தருளும்; அப்பொழுது நான்
இரட்சிக்கப்பட்டு, எக்காலமும் உம்மு
டைய பிரமாணங்களின்பேரில் நோக்க
118 மாயிருப்பேன்.—உமது பிரமாணங்களை
விட்டு வழிவிலகுகிற யாவரையும் மிதித்
துப்போடுகிறீர்; அவர்களுடைய உபா
119 யம் வெறும் பொய்யே.—பூமியிலுள்ள
துன்மார்க்கர் யாவரையும் களிம்பைப்
போல அகற்றிவிடுகிறீர்; ஆகையால்
உமது சாட்சிகளில் பிரியப்படுகிறேன்.—
120 உமக்குப் பயப்படும் பயத்தால் என்
உடம்பு சிலிர்க்கிறது; உமது நியாயத்
தீர்ப்புகளுக்குப் பயப்படுகிறேன்.

ע ஆயின்.

121 நியாயமும் நீதியும் செய்கிறேன்;
என்னை ஒடுக்குகிறவர்களுக்கு என்னை
122 ஒப்புக்கொடாதேயும்.—உமது அடியே
னுக்கு நன்மையாகத் துணைநில்லும்; அகந்
காரிகள் என்னை யொடுக்கவொட்டாதே
123 யும்.—உமது இரட்சிப்புக்கும் உமது நீதி
யின் வார்த்தைக்கும் காத்திருக்கிறதினால்
124 என் கண்கள் பூத்துப்போகிறது.-உமது
அடியேனை உமது கிருபையின்படியே நட
த்தி, உமது பிரமாணங்களை எனக்குப்
125 போதியும்.—நான் உமது அடியேன்; உம்
முடைய சாட்சிகளை நான் அறியும்படி
126 என்னை உணர்வுள்ளவனாக்கும்.—நீதியைச்
செய்யக் கர்த்தருக்கு வேளை வந்தது;
அவர்கள் உம்முடைய நியாயப்பிரமா
127 ணத்தை மீறினார்கள்.—ஆதலால் நான்
பொன்னிலும் பசும்பொன்னிலும் அதிக
மாய் உமது கற்பனைகளில் பிரியப்படு
128 கிறேன். — எல்லாவற்றைப்பற்றியும் நீர்
அருளின எல்லாக் கட்டளைகளும் செம்
மையென்று எண்ணி, சகல பொய்வழி
களையும் வெறுக்கிறேன்.

פ பே.

129 உம்முடைய சாட்சிகள் அதிசயமான
வைகள்; ஆகையால் என் ஆத்துமா
130 அவைகளைக் கைக்கொள்ளும்.—உம்மு
டைய வசனத்தின் பிரசித்தம் வெளிச்சம்
தந்து, பேதைகளை உணர்வுள்ளவர்களாக்
131 கும். — உம்முடைய கற்பனைகளை நான்
வாஞ்சிக்கிறபடியால், என் வாயை ஆவெ
ன்று திறந்து அவைகளுக்கு ஏங்குகி
132 றேன்.—உம்முடைய நாமத்தை நேசிக்
கிறவர்களுக்கு வழங்கும் நியாயத்தின்
படியே என்னைநோக்கிப் பார்த்து, எனக்கு
133 இரங்கும்.—உம்முடைய வார்த்தையிலே
என் காலடிகளை நிலைப்படுத்தி, ஒரு அநி
யாயமும் என்னை ஆளவொட்டாதேயும்.-
134 மனுஷர் செய்யும் இடுக்கத்துக்கு என்னை
விலக்கி விடுவித்தருளும்; அப்பொழுது
நான் உம்முடைய கட்டளைகளைக் காத்துக்
135 கொள்வேன். — உமது அடியேன்மேல்
உமது முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணி,
உமது பிரமாணங்களை எனக்குப் போதி
136 யும்.—உம்முடைய வேதத்தை மனுஷர்
காத்து நடவாதபடியால், என் கண்களி
லிருந்து நீர்த்தாரைகள் ஓடுகிறது.

צ த்சாடே.

137 கர்த்தாவே, நீர் நீதிபரர், உமது நியா
யத்தீர்ப்புகள் செம்மையானவைகள்.—
138 நீர் கட்டளையிட்ட சாட்சிகள் நீதியும் மகா
139 உண்மையுமானவைகள்.—என் சத்துருக்
கள் உம்முடைய வசனங்களை மறந்தபடி
யால், என் பக்தி வைராக்கியம் என்னைப்
140 பட்சிக்கிறது.—உமது வார்த்தை மிகவும்
புடமிடப்பட்டது, உமது அடியேன்
141 அதில் பிரியப்படுகிறேன்.—நான் சிறியவ
னும் அசட்டை பண்ணப்பட்டவனுமா
யிருக்கிறேன்; ஆனாலும் உமது கட்டளை
142 களை மறவேன்.-உம்முடைய நீதி நித்திய
நீதி, உம்முடைய வேதம் சத்தியம்.—
143 இக்கட்டும் நெருக்கமும் என்னைப் பிடித்
தது; ஆனாலும் உம்முடைய கற்பனைகள்
144 என் மனமகிழ்ச்சி.—உம்முடைய சாட்சி

களின் நீதி என்றைக்கும் நிற்கும்; என்னை உணர்வுள்ளவனாக்கும், அப்பொழுது நான் பிழைத்திருப்பேன்.

ק கோப்.

145 முழுஇருதயத்தோடும் கூப்பிட்டேன், கர்த்தாவே, என் ஜெபத்தைக் கேளும்; உம்முடைய பிரமாணங்களைக் கைக்கொ 146 ள்ளுவேன்.—உம்மை நோக்கிக் கூப்பிட்டேன், என்னை ரட்சியும்; அப்பொழுது நான் உம்முடைய சாட்சிகளைக் காத்துக் 147 கொள்ளுவேன். — அதிகாலையில் நான் எழுந்து சத்தமிட்டேன்; உம்முடைய 148 வசனத்துக்குக் காத்திருக்கிறேன்.—உமது வசனத்தைத் தியானிக்கும்படி, குறித்த சாமங்களுக்கு முன்னே என் கண்கள் 149 விழித்துக்கொள்ளும்.—உம்முடைய கிருபையின்படி என் சத்தத்தைக் கேளும்; கர்த்தாவே, உம்முடைய நியாயத்தின் 150 படி என்னை உயிர்ப்பியும்.—தீவினையைப் பின்பற்றுகிறவர்கள் சமீபிக்கிறார்கள்; அவர்கள் உம்முடைய வேதத்துக்குத் தூர 151 மாயிருக்கிறார்கள்.—கர்த்தாவே, நீர் சமீபமாயிருக்கிறீர்; உமது கற்பனைகளெல் 152 லாம் உண்மை.—நீர் உம்முடைய சாட்சிகளை என்றென்றைக்கும் நிற்க ஸ்தாபித்தீர் என்பதை, அவைகளால் நான் நெடுநாளாய் அறிந்திருக்கிறேன்.

ר ரேஷ்.

153 என் உபத்திரவத்தைப் பார்த்து, என்னை விடுவியும்; உமது வேதத்தை மற 154 வேன்.—எனக்காக நீர் வழக்காடி என்னை மீட்டுக்கொள்ளும், உம்முடைய வார்த்தையின்படியே என்னை உயிர்ப்பியும்.— 155 இரட்சிப்பு துன்மார்க்கருக்குத் தூரமாயிருக்கிறது, அவர்கள் உமது பிரமாணங் 156 களைத் தேடார்கள்.—கர்த்தாவே, உம்முடைய இரக்கங்கள் மிகுதியாயிருக்கிறது; உமது நியாயங்களின்படி என்னை உயிர்ப் 157 பியும்.—என்னைத் துன்பப்படுத்துகிறவர்களும் என்னை விரோதிக்கிறவர்களும் அநேகர்; ஆனாலும் உம்முடைய சாட்சிகளை 158 விட்டு விலகேன்.—உமது வசனத்தைக் காத்துக்கொள்ளாத துரோகிகளை நான் கண்டபோது, எனக்கு அருவருப்பாயிருந் 159 தது.—இதோ, உம்முடைய கட்டளைகளை நேசிக்கிறேன்; கர்த்தாவே, உமது கிரு 160 பையின்படி என்னை உயிர்ப்பியும்.—உம்முடைய வசனம் சமூலமும் சத்தியம், உம்முடைய நீதிநியாயமெல்லாம் நித்தியம்.

ש ஷீன்.

பிரபுக்கள் காரணமில்லாமல் என்னைத் 161 துன்பப்படுத்தினார்கள். ஆனாலும் என் இருதயம் உமது வசனத்திற்கே பயப்படு கிறது,—மிகுந்த கொள்ளையுடைமையைக் 162 கண்டுபிடிக்கிறவன் மகிழுகிறதுபோல, நான் உமது வார்த்தையின்பேரில் மகிழு கிறேன்.—பொய்யைப் பகைத்து அருவ 163 ருக்கிறேன்; உம்முடைய வேதத்தையோ நேசிக்கிறேன்.—உமது நீதி நியாயங்களி 164 னிமித்தம் ஒருநாளில் ஏழுதரம் உம்மைத் துதிக்கிறேன்.—உம்முடைய வே 165 தத்தை நேசிக்கிறவர்களுக்கு மிகுந்த சமாதானமுண்டு; அவர்களுக்கு இடறலில்லை.—கர்த்தாவே, உம்முடைய இரட் 166 சிப்புக்கு நான் காத்திருந்து, உம்முடைய கற்பனைகளின்படி செய்கிறேன். — என் 167 ஆத்துமா உமது சாட்சிகளைக் காக்கும்; அவைகளை நான் மிகவும் நேசிக்கிறேன்.— உமது கட்டளைகளையும் உமது சாட்சிகளை 168 யும் காத்து நடக்கிறேன்; என் வழிகளெல்லாம் உமக்கு முன்பாக இருக்கிறது.

ת தௌ.

கர்த்தாவே, என் கூப்பிடுதல் உமது 169 சந்நிதியில் வருவதாக; உமது வசனத்தின்படியே என்னை உணர்வுள்ளவனாக்கும்.—என் விண்ணப்பம் உமது சந்நிதி 170 யில் வருவதாக; உமது வார்த்தையின்படி என்னை விடுவித்தருளும்.—உம்மு 171 டைய பிரமாணங்களை நீர் எனக்குப் போதிக்கும்போது, என் உதடுகள் உமது துதியைப் பிரஸ்தாபப்படுத்தும்.—உமது 172 கற்பனைகளெல்லாம் நீதியுள்ளவைகள்; ஆதலால், என் நாவு உம்முடைய வசனத்தை விவரித்துச் சொல்லும்.—நான் 173 உம்முடைய கட்டளைகளைத் தெரிந்து கொண்டபடியால், உமது கரம் எனக்குத் துணையாயிருப்பதாக.—கர்த்தாவே, 174 உம்முடைய இரட்சிப்பின்மேல் ஆவலாயிருக்கிறேன்; உம்முடைய வேதம் என் மனமகிழ்ச்சி.—என் ஆத்துமா பிழைத் 175 திருந்து உம்மைத் துதிக்கக்கடவது; உமது நியாயத்தீர்ப்புகள் எனக்கு உதவியாயிருப்பதாக. — காணாமற்போன 176 ஆட்டைப்போல வழிதப்பிப்போனேன்; உமது அடியேனைத் தேடுவீராக; உமது கற்பனைகளை நான் மறவேன்

## 120

(ஆரோகண சங்கீதம்.)

என் நெருக்கத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன்; அவர் எனக்குச் செ

2 விகொடுத்தார்.—கர்த்தாவே, பொய் உதடுகளுக்கும் கபடநாவுக்கும் என் ஆத்துமாவைத் தப்புவியும்.
3 கபடநாவே, உனக்கு என்ன கிடைக்கும்? உனக்கு என்ன செய்யப்படும்?—
4 பலவானுடைய கூர்மையான அம்புகளும், சூரைச்செடிகளை எரிக்கும் தழலுமே கிடைக்கும்.
5 ஐயோ! நான் மேசேக்கிலே சஞ்சரித்தது போதும், கேதாரின் கூடாரங்களண்டையிலே குடியிருந்ததும் போதும்! —
6 சமாதானத்தைப் பகைக்கிறவர்களிடத்தில் என் ஆத்துமா குடியிருந்ததும் போதும்!—
7 நான் சமாதானத்தை நாடுகிறேன்; அவர்களோ, நான் பேசும்போது யுத்தத்துக்கு எத்தனப்படுகிறார்கள்.

**121** (ஆரோகண சங்கீதம்.)

எனக்கு ஒத்தாசை வரும் பர்வதங்களுக்கு நேராக என் கண்களை ஏறெடுக்
2 கிறேன். — வானத்தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தரிடத்திலிருந்து
3 எனக்கு ஒத்தாசை வரும்.—உன் காலைத் தள்ளாடவொட்டார்; உன்னைக் காக்கிற
4 வர் உறங்கார். — இதோ, இஸ்ரவேலைக் காக்கிறவர் உறங்குகிறதுமில்லை தூங்கு
5 கிறதுமில்லை.—கர்த்தர் உன்னைக் காக்கிறவர்; கர்த்தர் உன் வலதுபக்கத்திலே
6 உனக்கு நிழலாயிருக்கிறார். — பகலிலே வெயிலாகிலும், இரவிலே நிலவாகிலும்
7 உன்னைச் சேதப்படுத்துவதில்லை.—கர்த்தர் உன்னை எல்லாத் தீங்குக்கும் விலக்கிக் காப்பார்; அவர் உன் ஆத்துமாவைக் காப்
8 பார்.—கர்த்தர் உன் போக்கையும் உன் வரத்தையும் இதுமுதற்கொண்டு என்றைக்குங் காப்பார்.

**122** (தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.)

கர்த்தருடைய ஆலயத்துக்குப் போவோம் வாருங்கள் என்று எனக்கு அவர்கள் சொன்னபோது மகிழ்ச்சியாயிருந்
2 தேன்.—எருசலேமே, உன் வாசல்களில்
3 எங்கள் கால்கள் நிற்கலாயிற்று.—எருசலேம் இசைவிணைப்பான நகரமாய்க் கட்
4 டப்பட்டிருக்கிறது.—அங்கே இஸ்ரவேலுக்குச் சாட்சியாகக் கர்த்தருடைய ஜனங்களாகிய கோத்திரங்கள் கர்த்தரின் நாமத்தை ஸ்தோத்திரிப்பதற்குப் போகும்.—
5 அங்கே தாவீதின் வம்சத்தாருடைய சிங்காசனங்களாகிய நியாயாசனங்கள் வைக்கப்பட்டிருக்கிறது.
6 எருசலேமின் சமாதானத்துக்காக வேண்டிக்கொள்ளுங்கள்; உன்னை நேசிக்கிறவர்கள் சுகித்திருப்பார்களாக.—உன் அலங்
7 கத்திற்குள்ளே சமாதானமும், உன் அரமனைகளுக்குள்ளே சுகமும் இருப்பதாக.—
8 என் சகோதரர் நிமித்தமும் என் சிநேகிதர் நிமித்தமும், உன்னில் சமாதானம்
9 இருப்பதாக என்பேன். — எங்கள் தேவனாகிய கர்த்தரின் ஆலயத்தினிமித்தம் உனக்கு நன்மையுண்டாகத் தேடுவேன்.

**123** (ஆரோகண சங்கீதம்.)

பரலோகத்தில் வாசமாயிருக்கிறவரே, உம்மிடத்திற்கு என் கண்களை ஏறெடுக்கி
2 றேன்.—இதோ, வேலைக்காரரின் கண்கள் தங்கள் எஜமான்களின் கையை நோக்கியிருக்குமாப்போலவும், வேலைக்காரியின் கண்கள் தன் எஜமாட்டியின் கையை நோக்கியிருக்குமாப்போலவும், எங்கள் தேவனாகிய கர்த்தர் எங்களுக்கு இரக்கஞ்செய்யும் வரைக்கும், எங்கள் கண்கள் அவரை நோக்கியிருக்கிறது.—எங்களுக்கு
3 இரங்கும் கர்த்தாவே, எங்களுக்கு இரங்கும்; நிந்தையினால் மிகவும் நிறைந்திருக்
4 கிறோம்.—சுகஜீவிகளுடைய நிந்தையினாலும், அகங்காரிகளுடைய இகழ்ச்சியினாலும், எங்கள் ஆத்துமா மிகவும் நிறைந்திருக்கிறது.

**124** (தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.)

மனுஷர் நமக்கு விரோதமாய் எழும்பினபோது, கர்த்தர் நமது பக்கத்திலிரா
2 விட்டால்,—கர்த்தர் தாமே நமது பக்கத்
3 திலிராவிட்டால்,—அவர்கள் கோபம் நம்மேல் எரிகையில், நம்மை உயிரோடே
4 விழுங்கி யிருப்பார்கள்.-அப்பொழுது தண்ணீர்கள் நம்மேல் பாய்ந்து, வெள்ளங்கள்
5 நமது ஆத்துமாவின்மேல் பெருகி,—கொந்தளிக்கும் ஜலங்கள் நமது ஆத்துமாவின்மேல் புரண்டுபோயிருக்கும் என்று இஸ்ரவேல் இப்பொழுது சொல்வதாக.
6 நம்மை அவர்களுடைய பற்களுக்கு இரையாக ஒப்புக்கொடாதிருக்கிற கர்த்த
7 ருக்கு ஸ்தோத்திரம்.—வேடருடைய கண்ணிக்குத் தப்பின குருவியைப்போல நம்முடைய ஆத்துமா தப்பிற்று, கண்ணி தெறித்
8 தது, நாம் தப்பினோம்.—நம்முடைய சகாயம் வானத்தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தருடைய நாமத்தில் உள்ளது.

**125** (ஆரோகண சங்கீதம்.)

கர்த்தரை நம்புகிறவர்கள் என்றென்றைக்கும் அசையாமல் நிலைத்திருக்கும் சீயோன்பர்வதத்தைப்போல் இருப்பார்கள்.-

2 பர்வதங்கள் எருசலேமைச் சுற்றிலும் இருக்குமாப்போல், கர்த்தர் இதுமுதல் என்றென்றைக்கும் தம்முடைய ஜனத்தைச் 3 சுற்றிலும் இருக்கிறார்.—நீதிமான்கள் அநியாயத்திற்குத் தங்கள் கைகளை நீட்டாதபடிக்கு, ஆகாமியத்தின் கொடுங்கோல் நீதிமான்களுடைய சுதந்தரத்தின்மேல் நிலைத்திராது.

4 கர்த்தாவே, நல்லவர்களுக்கும் இருதயத்தில் செம்மையானவர்களுக்கும் நன் 5 மைசெய்யும்.—தங்கள் கோணலான வழிகளுக்குச் சாய்கிறவர்களைக் கர்த்தர் அக்கிரமக்காரரோடே போகப்பண்ணுவார். இஸ்ரவேலுக்கோ சமாதானம் உண்டு.

**126** (ஆரோகண சங்கீதம்.)

சீயோனின் சிறையிருப்பைக் கர்த்தர் திருப்பும்போது, சொப்பனம் காண்கிறவர் 2 கள்போல் இருந்தோம். — அப்பொழுது நம்முடைய வாய் நகைப்பினாலும், நம்முடைய நாவு ஆனந்த சத்தத்தினாலும் நிறைந்திருந்தது; அப்பொழுது: கர்த்தர் இவர்களுக்குப் பெரிய காரியங்களைச் செய்தார் என்று புறஜாதிகளுக்குள்ளே சொல்லிக் 3 கொண்டார்கள்.—கர்த்தர் நமக்குப் பெரிய காரியங்களைச் செய்தார்; இதினிமித்தம் நாம் மகிழ்ந்திருக்கிறோம்.

4 கர்த்தாவே, தெற்கத்தி வெள்ளங்களைத் திருப்புவதுபோல, எங்கள் சிறையிருப் 5 பைத் திருப்பும்.—கண்ணீரோடே விதைக்கிறவர்கள் கெம்பீரத்தோடே அறுப்பார் 6 கள்.—அள்ளித்தூவும் விதையைச் சுமக்கிறவன் அழுதுகொண்டு போகிறான்; ஆனாலும் தான் அறுத்த அரிகளைச் சுமந்துகொண்டு கெம்பீரத்தோடே திரும்பி வருவான்.

**127** (சாலொமோன் பாடின ஆரோகண சங்கீதம்.)

கர்த்தர் வீட்டைக் கட்டாராகில், அதைக் கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா;— 2 கர்த்தர் நகரத்தைக் காவாராகில் காவலா 3 ளர் விழித்திருக்கிறது விருதா. — நீங்கள் அதிகாலையில் எழுந்து, நேரப்பட வேலையிலே தரித்து, வருத்தத்தின் அப்பத்தைச் சாப்பிடுகிறதும் விருதா; அவரே தமக்குப் பிரியமானவனுக்கு நித்திரை அளிக்கிறார்.

4 இதோ, பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்தரம், கர்ப்பத்தின் கனி அவரால் 5 கிடைக்கும் பலன்.—வாலவயதின் குமாரர் பலவான் கையிலுள்ள அம்புகளுக்கு 6 ஒப்பாயிருக்கிறார்கள்.—அவைகளால் தன் அம்பறாத்தூணியை நிரப்பின புருஷன் பாக்கியவான்; அவர்கள் நாணமடையாமல் ஒலிமுகவாசலில் சத்துருக்களோடே பேசுவார்கள்.

(ஆரோகண சங்கீதம்.) **128**

கர்த்தருக்குப் பயந்து, அவர் வழிகளில் நடக்கிறவன் எவனோ, அவன் பாக்கியவான்.-உன் கைகளின் பிரயாசத்தை நீ சாப் 2 பிடுவாய்; உனக்குப் பாக்கியமும் நன்மையும் உண்டாயிருக்கும்.-உன் மனைவி உன் 3 வீட்டோரங்களில் கனிதரும் திராட்சக்கொடியைப்போல் இருப்பாள்; உன் பிள்ளைகள் உன் பந்தியைச் சுற்றிலும் ஒலிவமரக் கன்றுகளைப்போல் இருப்பார்கள்.–இதோ, 4 கர்த்தருக்குப் பயப்படுகிற மனுஷன் இவ்விதமாய் ஆசீர்வதிக்கப்படுவான்.—கர்த் 5 தர் சீயோனிலிருந்து உன்னை ஆசீர்வதிப்பார்; நீ ஜீவனுள்ள நாளெல்லாம் எருசலேமின் வாழ்வைக் காண்பாய்.-நீ உன் பிள்ளை 6 களின் பிள்ளைகளையும், இஸ்ரவேலுக்கு உண்டாகும் சமாதானத்தையும் காண்பாய்.

(ஆரோகண சங்கீதம்.) **129**

என் சிறுவயது தொடங்கி அநேகந்தரம் என்னை நெருக்கினார்கள்.—என் சிறு 2 வயது தொடங்கி அநேகந்தரம் என்னை நெருக்கியும், என்னை மேற்கொள்ளாமற்போனார்கள்.—உழுகிறவர்கள் என் முதுகின் 3 மேல் உழுது, தங்கள் படைச்சால்களை நீளமாக்கினார்கள்.—கர்த்தரோ நீதியுள்ள 4 வர்; துன்மார்க்கருடைய கயிறுகளை அவர் அறுத்தார் என்று, இஸ்ரவேல் இப்பொழுது சொல்வதாக.

சீயோனைப் பகைக்கிற அனைவரும் வெட் 5 கிப் பின்னிட்டுத் திரும்பக்கடவர்கள்.-வீட் 6 டின்மேல் முளைக்கும் புல்லுக்கு அவர்கள் ஒப்பாவார்களாக; அது வளருமுன் உலர்ந்துபோம். — அறுக்கிறவன் அதினால் தன் 7 கையையும், அரிகளைக் கட்டுகிறவன் தன் மடியையும் நிரப்புவதில்லை. — கர்த்தரு 8 டைய ஆசீர்வாதம் உங்களுக்கு உண்டாவதாக; கர்த்தரின் நாமத்தினால் உங்களை ஆசீர்வதிக்கிறோம் என்று வழிப்போக்கர் சொல்வதுமில்லை.

(ஆரோகண சங்கீதம்.) **130**

கர்த்தாவே, ஆழங்களிலிருந்து உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்.—ஆண்ட 2 வரே, என் சத்தத்தைக் கேளும்; என் விண்ணப்பங்களின் சத்தத்திற்கு உமது செவிகள் கவனித்திருப்பதாக.

கர்த்தாவே, நீர் அக்கிரமங்களைக் கவ 3 னித்திருப்பீரானால், யார் நிலைநிற்பான்,

4 ஆண்டவரே.—உமக்குப் பயப்படும்படிக்கு
உம்மிடத்தில் மன்னிப்பு உண்டு.
5 கர்த்தருக்குக் காத்திருக்கிறேன்; என்
ஆத்துமா காத்திருக்கிறது; அவருடைய
6 வார்த்தையை நம்பியிருக்கிறேன். — எப்
பொழுது விடியும் என்று விடியற்காலத்
துக்குக் காத்திருக்கிற சாமக்காரரைப் பார்
க்கிலும் அதிகமாய் என் ஆத்துமா ஆண்
டவருக்குக் காத்திருக்கிறது.
7 இஸ்ரவேல் கர்த்தரை நம்பியிருப்ப
தாக; கர்த்தரிடத்தில் கிருபையும், அவ
8 ரிடத்தில் திரளான மீட்பும் உண்டு.—அவர்
இஸ்ரவேலை அதின் சகல அக்கிரமங்களி
னின்றும் மீட்டுக்கொள்வார்.

## 131 (தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.)

கர்த்தாவே, என் இருதயம் இறுமாப்
புள்ளதல்ல, என் கண்கள் மேட்டிமை
யுள்ளவைகளுமல்ல; பெரிய காரியங்களி
லும், எனக்கு மிஞ்சின கருமங்களிலும்
2 நான் தலையிடுகிறதுமில்லை.—தாயின் பால்
மறந்த குழந்தையைப்போல நான் என்
ஆத்துமாவை அடக்கி அமரப்பண்ணி
னேன்; என் ஆத்துமா பால்மறந்த குழந்
3 தையைப்போல் இருக்கிறது.—இதுமுதல்
என்றென்றைக்கும் இஸ்ரவேல் கர்த்தரை
நம்பியிருப்பதாக.

## 132 (ஆரோகண சங்கீதம்.)

கர்த்தாவே, தாவீதையும் அவனுடைய
சகல உபத்திரவத்தையும் நினைத்தருளும்.—
2 அவன்: நான் கர்த்தருக்கு ஒரு இடத்தை
யும், யாக்கோபின் வல்லவருக்கு ஒரு வாச
3 ஸ்தலத்தையும் காணுமட்டும்,—என் வீடா
கிய கூடாரத்தில் பிரவேசிப்பதுமில்லை,
என் படுக்கையாகிய கட்டிலின்மேல் ஏறு
4 வதுமில்லை;—என் கண்களுக்கு நித்திரை
யையும், என் இமைகளுக்கு உறக்கத்தை
5 யும் வரவிடுவதுமில்லை என்று,—கர்த்த
ருக்கு ஆணையிட்டு, யாக்கோபின் வல்ல
வருக்குப் பொருத்தனை பண்ணினான்.
6 இதோ, நாம் எப்பிராத்தாவிலே அதின்
செய்தியைக் கேட்டு, வனத்தின் வெளிக
7 ளில் அதைக் கண்டோம்.—அவருடைய
வாசஸ்தலங்களுக்குள் பிரவேசித்து, அவர்
8 பாதபடியில் பணிவோம்.— கர்த்தாவே,
உமது வல்லமை விளங்கும் பெட்டியுடன்
நீர் உமது தாபர ஸ்தலத்திற்குள் எழுந்தரு
9 ளும். — உம்முடைய ஆசாரியர்கள் நீதி
யைத் தரித்து, உம்முடைய பரிசுத்தவான்
10 கள் கெம்பீரிப்பார்களாக.—நீர் அபிஷே
கம் பண்ணுவித்தவனின் முகத்தை உமது
தாசனாகிய தாவீதினிமித்தம் புறக்கணி
யாதிரும்.
உன் கர்ப்பத்தின் கனியை உன் சிங்கா 11
சனத்தின்மேல் வைப்பேன் என்றும்,—
உன் குமாரர் என் உடன்படிக்கையை 12
யும், நான் போதிக்கும் என் சாட்சிகளையும்
காத்து நடந்தால், அவர்கள் குமாரரும்
என்றென்றைக்கும் உன் சிங்காசனத்தில்
வீற்றிருப்பார்கள் என்றும், கர்த்தர் தாவீ
துக்கு உண்மையாய் ஆணையிட்டார்; அவர்
தவறமாட்டார்.—கர்த்தர் சீயோனைத் தெ 13
ரிந்துகொண்டு, அது தமக்கு வாசஸ்தல
மாகும்படி விரும்பினார்.
இது என்றென்றைக்கும் நான் தங்கும் 14
இடம்; இதை நான் விரும்பினபடியால்,
இங்கே வாசம்பண்ணுவேன். — அதின் 15
ஆகாரத்தை நான் ஆசீர்வதித்து வருவேன்;
அதின் ஏழைகளை நான் அப்பத்தினால் திருப்
தியாக்குவேன்.—அதின் ஆசாரியர்களுக்கு 16
இரட்சிப்பை உடுத்துவேன்; அதிலுள்ள
பரிசுத்தவான்கள் மிகவும் கெம்பீரிப்பார்
கள்.—அங்கே தாவீதுக்காக ஒரு கொம் 17
பை முளைக்கப்பண்ணுவேன்; நான் அபி
ஷேகம்பண்ணுவித்தவனுக்காக ஒரு விளக்
கை ஆயத்தம்பண்ணினேன்.—அவன் சத் 18
துருக்களுக்கு வெட்கத்தை உடுத்துவேன்;
அவன் மீதிலோ அவன் கிரீடம் பூக்கும்
என்றார்.

## (தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.) 133

இதோ, சகோதரர் ஒருமித்து வாசம்
பண்ணுகிறது எத்தனை நன்மையும் எத்தனை
இன்பமுமானது?— அது ஆரோனுடைய 2
சிரசின்மேல் ஊற்றப்பட்டு, அவனுடைய
தாடியிலே வடிகிறதும், அவனுடைய
அங்கிகளின்மேல் இறங்குகிறதுமான
நல்ல தைலத்துக்கும்,—எர்மோன்மேலும், 3
சீயோன் பர்வதங்கள்மேலும் இறங்கும்
பனிக்கும் ஒப்பாயிருக்கிறது; அங்கே கர்
த்தர் என்றென்றைக்கும் ஆசீர்வாதத்தை
யும் ஜீவனையும் கட்டளையிடுகிறார்.

## (ஆரோகண சங்கீதம்.) 134

இதோ, இராக்காலங்களில் கர்த்தரு
டைய ஆலயத்தில் நிற்கும் கர்த்தரின்
ஊழியக்காரரே, நீங்களெல்லாரும் கர்த்த
ரை ஸ்தோத்திரியுங்கள்.-உங்கள் கைகளைப் 2
பரிசுத்த ஸ்தலத்திற்கு நேராக எடுத்து,
கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள்.
வானத்தையும் பூமியையும் உண்டாக் 3
கின கர்த்தர் சீயோனிலிருந்து உன்னை
ஆசீர்வதிப்பாராக.

**135** அல்லேலூயா, கர்த்தருடைய நாமத்
தைத் துதியுங்கள்; கர்த்தரின் ஊழியக்
2 காரரே, துதியுங்கள். — கர்த்தருடைய
வீட்டிலும், நமது தேவனுடைய ஆலயப்
பிராகாரங்களிலும் நிற்கிறவர்களே, கர்த்
3 தரைத் துதியுங்கள்.—கர்த்தர் நல்லவர்;
அவருடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்
ணுங்கள்; அது இன்பமானது.
4 கர்த்தர் யாக்கோபைத் தமக்காகவும்,
இஸ்ரவேலைத் தமக்குச் சொந்தமாகவும்
5 தெரிந்துகொண்டார்.-கர்த்தர் பெரியவர்
என்றும், நம்முடைய ஆண்டவர் எல்லா
தேவர்களுக்கும் மேலானவர் என்றும் நான்
6 அறிவேன். — வானத்திலும் பூமியிலும்,
சமுத்திரங்களிலும், எல்லா ஆழங்களிலும்,
கர்த்தர் தமக்குச் சித்தமானதையெல்லாம்
7 செய்கிறார்.—அவர் பூமியின் கடையாந்த
ரங்களிலிருந்து மேகங்களை எழும்பப்
பண்ணி, மழையுடன் மின்னலையும் உண்
டாக்கி, காற்றைத் தமது பண்டசாலைகளி
லிருந்து புறப்படப்பண்ணுகிறார்.
8 அவர் எகிப்திலே மனுஷருடைய தலைப்
பிள்ளைகளையும் மிருகத்தின் தலையீற்றுகளை
9 யும் அடித்தார். — எகிப்துதேசமே, உன்
நடுவில் பார்வோன்மேலும் அவனுடைய
எல்லா ஊழியக்காரர்மேலும் அடையாள
ங்களையும் அற்புதங்களையும் அனுப்பினார்.-
10 அவர் அநேகம் ஜாதிகளை அடித்து, பலத்த
11 ராஜாக்களைக் கொன்று; — எமோரியரின்
ராஜாவாகிய சீகோனையும், பாசானின் ரா
ஜாவாகிய ஓகையும், கானானின் சகல ராஜ்
12 யங்களையும் அழித்து,—அவர்கள் தேசத்
தைத் தம்முடைய ஜனமாகிய இஸ்ரவே
லுக்குச் சுதந்தரமாகக் கொடுத்தார்.
13 கர்த்தாவே, உம்முடைய நாமம் என்
றைக்குமுள்ளது; கர்த்தாவே, உம்மு
டைய பிரஸ்தாபம் தலைமுறை தலைமுறைக்
14 கும் இருக்கும்.-கர்த்தர் தம்முடைய ஜனத்
தின் நியாயத்தை விசாரித்து, தம்முடைய
ஊழியக்காரர்மேல் பரிதாபப்படுவார்.
15 அஞ்ஞானிகளுடைய விக்கிரகங்கள்
வெள்ளியும் பொன்னும், மனுஷருடைய
16 கைவேலையுமாயிருக்கிறது. — அவைகளு
க்கு வாயிருந்தும் பேசாது, அவைகளுக்
17 குக் கண்களிருந்தும் காணாது.—அவைக
ளுக்குக் காதுகளிருந்தும் கேளாது, அவை
களுடைய வாயிலே சுவாசமுமில்லை.—
18 அவைகளைப் பண்ணுகிறவர்களும், அவை
களை நம்புகிறவர்கள் யாவரும், அவைக
ளைப்போல் இருக்கிறார்கள்.

19 இஸ்ரவேல் குடும்பத்தாரே, கர்த்தரை
ஸ்தோத்திரியுங்கள்; ஆரோன் குடும்பத்
தாரே, கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள்.—
20 லேவிகுடும்பத்தாரே, கர்த்தரை ஸ்தோத்
திரியுங்கள்; கர்த்தருக்குப் பயந்தவர்களே,
21 கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள்.—எருசலே
மில் வாசம்பண்ணுகிற கர்த்தருக்கு சீயோ
னிலிருந்து ஸ்தோத்திர முண்டாவதாக.
அல்லேலூயா.

**136** கர்த்தரைத் துதியுங்கள்; அவர் நல்ல
வர், அவர் கிருபை என்றுமுள்ளது.—தே
2 வாதி தேவனைத் துதியுங்கள்; அவர் கிருபை
3 என்றுமுள்ளது.-கர்த்தாதி கர்த்தரைத் துதி
யுங்கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.
4 ஒருவராய்ப் பெரிய அதிசயங்களைச்
செய்கிறவரைத் துதியுங்கள்; அவர் கிருபை
5 என்றுமுள்ளது.—வானங்களை ஞானமாய்
உண்டாக்கினவரைத் துதியுங்கள்; அவர்
6 கிருபை என்றுமுள்ளது.—தண்ணீர்களுக்கு
மேலே பூமியைப் பரப்பினவரைத் துதியுங்
கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.—
7 பெரிய சுடர்களை உண்டாக்கினவரைத் துதி
யுங்கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.—
8 பகலில் ஆளச் சூரியனைப் படைத்தவரைத்
துதியுங்கள்; அவர் கிருபை என்றுமுள்
9 ளது.—இரவில் ஆளச் சந்திரனையும் நட்
சத்திரங்களையும் படைத்தவரைத் துதியுங்
கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.
10 எகிப்தியருடைய தலைச்சன்களைச் சங்க
ரித்தவரைத் துதியுங்கள்; அவர் கிருபை
11 என்றுமுள்ளது.—அவர்கள் நடுவிலிருந்து
இஸ்ரவேலைப் புறப்படப்பண்ணினவரைத்
துதியுங்கள்; அவர் கிருபை என்றுமுள்
12 ளது.—பலத்த கையினாலும் ஓங்கிய புயத்
தினாலும் அதைச் செய்தவரைத் துதியுங்
கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.—
13 சிவந்த சமுத்திரத்தை இரண்டாகப் பிரித்
தவரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்
14 றுமுள்ளது.—அதின் நடுவே இஸ்ரவேலைக்
கடந்துபோகப்பண்ணினவரைத் துதியுங்
கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.—
15 பார்வோனையும் அவன் சேனைகளையும் சிவ
ந்த சமுத்திரத்தில் கவிழ்த்துப்போட்டவ
ரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்று
முள்ளது.
16 தம்முடைய ஜனங்களை வனாந்தரத்தில்
நடத்தினவரைத் துதியுங்கள்; அவர் கிரு
17 பை என்றுமுள்ளது.—பெரிய ராஜாக்களைச்
சங்கரித்தவரைத் துதியுங்கள்; அவர் கிரு
18 பை என்றுமுள்ளது.—பிரபலமான ராஜாக்

களை அழித்தவரைத் துதியுங்கள்; அவர்
19 கிருபை என்றுமுள்ளது.—எமோரியரின்
ராஜாவாகிய சீகோனை அழித்தவரைத் துதி
யுங்கள்; அவர் கிருபை என்றுமுள்ளது.—
20 பாசானின் ராஜாவாகிய ஓகை அழித்தவ
ரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்று
21 முள்ளது.—அவர்கள் தேசத்தைச் சுதந்த
ரமாகத் தந்தவரைத் துதியுங்கள்; அவர்
22 கிருபை என்றுமுள்ளது.—அதைத் தம்மு
டைய தாசனாகிய இஸ்ரவேலுக்குச் சுதந்த
ரமாகவே தந்தவரைத் துதியுங்கள்; அவர்
கிருபை என்றுமுள்ளது.
23 நம்முடைய தாழ்வில் நம்மை நினைத்த
வரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்று
24 முள்ளது.—நம்முடைய சத்துருக்களின்
கையிலிருந்து நம்மை விடுதலை பண்ணின
வரைத் துதியுங்கள்; அவர் கிருபை என்று
25 முள்ளது.—மாம்சதேகமுள்ள யாவுக்கும்
ஆகாரங் கொடுக்கிறவரைத் துதியுங்கள்;
26 அவர் கிருபை என்றுமுள்ளது.—பரலோ
கத்தின் தேவனைத் துதியுங்கள்; அவர் கிரு
பை என்றுமுள்ளது.

**137** பாபிலோன் ஆறுகள் அருகே நாங்கள்
உட்கார்ந்து, அங்கே சீயோனை நினைத்து
2 அழுதோம்.—அதின் நடுவிலிருக்கும் அல
ரிச்செடிகளின்மேல் எங்கள் கின்னரங்க
3 ளைத் தூக்கிவைத்தோம்.—எங்களைச் சிறை
பிடித்தவர்கள் அங்கே எங்கள் பாடல்களை
யும், எங்களைப் பாழாக்கினவர்கள் மங்கள
கீதத்தையும் விரும்பி: சீயோனின் பாட்டு
களில் சிலதை எங்களுக்குப் பாடுங்கள்
என்று சொன்னார்கள்.
4 கர்த்தரின் பாட்டை அந்நியதேசத்தில்
5 நாங்கள் பாடுவதெப்படி?—எருசலேமே,
நான் உன்னை மறந்தால் என் வலதுகை
6 தன் தொழிலை மறப்பதாக.—நான் உன்னை
நினையாமலும், எருசலேமை என் முக்கிய
மான மகிழ்ச்சியிலும் அதிகமாக எண்ணா
மலும்போனால், என் நாவு என் மேல்வா
யோடு ஒட்டிக்கொள்வதாக.
7 கர்த்தாவே, எருசலேமின் நாளில்
ஏதோமின் புத்திரரை நினையும்; அவர்கள்:
அதை இடித்துப்போடுங்கள், அஸ்திபார
மட்டும் இடித்துப்போடுங்கள் என்று
8 சொன்னார்களே. — பாபிலோன் குமாரத்
தியே, பாழாய்ப்போகிறவளே, நீ எங்களுக்
குச் செய்தபடி உனக்குப் பதில் செய்கிற
9 வன் பாக்கியவான்.—உன் குழந்தைகளைப்
பிடித்து, கல்லின்மேல் மோதியடிக்கிறவன்
பாக்கியவான்.

**138** (தாவீதின் சங்கீதம்.)

உம்மை என் முழு இருதயத்தோடும்
துதிப்பேன்; தேவர்களுக்கு முன்பாக உம்
மைக் கீர்த்தனம்பண்ணுவேன். — உமது 2
பரிசுத்த ஆலயத்திற்கு நேராக நான் பணி
ந்து, உமது கிருபையினிமித்தமும் உமது
உண்மையினிமித்தமும் உமது நாமத்
தைத் துதிப்பேன்; உமது சகல பிரஸ்தா
பத்தைப்பார்க்கிலும் உமது வார்த்தையை
நீர் மகிமைப்படுத்தியிருக்கிறீர். — நான் 3
கூப்பிட்ட நாளிலே எனக்கு மறுஉத்தரவு
அருளினீர்; என் ஆத்துமாவிலே பெலன்
தந்து என்னைத் தைரியப்படுத்தினீர்.
கர்த்தாவே, பூமியின் ராஜாக்களெல்லா 4
ரும் உமது வாயின் வார்த்தைகளைக் கேட்
கும்போது உம்மைத்துதிப்பார்கள்.-கர்த்த 5
ரின் மகிமை பெரிதாயிருப்பதினால், அவர்
கள் கர்த்தரின் வழிகளைப் பாடுவார்கள்.
கர்த்தர் உயர்ந்தவராயிருந்தும், தாழ் 6
மையுள்ளவனை நோக்கிப் பார்க்கிறார்;
மேட்டிமையானவனையோ தூரத்திலிருந்து
அறிகிறார்.—நான் துன்பத்தின் நடுவில் நடந் 7
தாலும் நீர் என்னை உயிர்ப்பிப்பீர்; என் சத்
துருக்களின் கோபத்திற்கு விரோதமாக
உமது கையை நீட்டுவீர்; உமது வலதுக
ரம் என்னை இரட்சிக்கும்.—கர்த்தர் எனக் 8
காக யாவையும் செய்து முடிப்பார்; கர்த்
தாவே, உமது கிருபை என்றுமுள்ளது,
உமது கரத்தின் கிரியைகளை நெகிழ விடா
திருப்பீராக.

**139** (இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, நீர் என்னை ஆராய்ந்து,
அறிந்திருக்கிறீர்.—என் உட்காருதலையும் 2
என் எழுந்திருக்குதலையும் நீர் அறிந்திருக்
கிறீர்; என் நினைவுகளைத் தூரத்திலிருந்து
அறிகிறீர்.—நான் நடந்தாலும் படுத்திருந் 3
தாலும் என்னைச் சூழ்ந்திருக்கிறீர்; என்
வழிகளெல்லாம் உமக்குத் தெரியும்.—
என் நாவில் சொல் பிறவாததற்குமுன்னே, 4
இதோ, கர்த்தாவே, அதையெல்லாம் நீர்
அறிந்திருக்கிறீர்.—முற்புறத்திலும் பிற்புற 5
த்திலும் நீர் என்னை நெருக்கி, உமது கரத்
தை என்மேல் வைக்கிறீர்.—இந்த அறிவு 6
எனக்கு மிகுந்த ஆச்சரியமும், எனக்கு
எட்டாத உயரமுமாயிருக்கிறது.
உம்முடைய ஆவிக்கு மறைவாக எங் 7
கே போவேன்? உம்முடைய சமுகத்தை
விட்டு எங்கே ஓடுவேன்?—நான் வானத் 8
திற்கு ஏறினாலும், நீர் அங்கே இருக்கிறீர்;

நான் பாதாளத்தில் படுக்கை போட்டா 9 லும், நீர் அங்கேயும் இருக்கிறீர்.—நான் விடியற்காலத்துச் செட்டைகளை எடுத்து, சமுத்திரத்தின் கடையாந்தரங்களிலே 10 போய்த் தங்கினாலும்,—அங்கேயும் உமது கை என்னை நடத்தும், உமது வலதுகரம் 11 என்னைப் பிடிக்கும்.—இருள் என்னை மூடிக்கொள்ளுமென்றாலும், இரவும் என்னைச் 12 சுற்றி வெளிச்சமாயிருக்கும். — உமக்கு மறைவாக இருளும் அந்தகாரப்படுத்தாது; இரவும் பகலைப்போல வெளிச்சமாயிருக்கும்; உமக்கு இருளும் வெளிச்சமும் சரி.

13 நீர் என் உள்ளிந்திரியங்களைக் கைக்கொண்டிருக்கிறீர்; என் தாயின் கர்ப்பத்தில் 14 என்னைக் காப்பாற்றினீர்.—நான் பிரமிக்கத்தக்க அதிசயமாய் உண்டாக்கப்பட்டபடியால், உம்மைத் துதிப்பேன்; உமது கிரியைகள் அதிசயமானவைகள், அது என் ஆத்துமாவுக்கு நன்றாய்த் தெரியும்.— 15 நான் ஒளிப்பிடத்திலே உண்டாக்கப்பட்டு, பூமியின் தாழ்விடங்களிலே விசித்திர விநோதமாய் உருவாக்கப்பட்டபோது, என் எலும்புகள் உமக்கு மறைவாயிருக்க 16 வில்லை.—என் கருவை உம்முடைய கண்கள் கண்டது; என் அவயவங்களில் ஒன்றாகிலும் இல்லாதபோதே அவைகள் அனைத்தும், அவைகள் உருவேற்படும் நாட்களும், உமது புஸ்தகத்தில் எழுதியிருந் 17 தது. — தேவனே, உமது ஆலோசனைகள் எனக்கு எத்தனை அருமையானவைகள்; அவைகளின் தொகை எவ்வளவு அதிகம்.- 18 அவைகளை நான் எண்ணப்போனால், மணலைப்பார்க்கிலும் அதிகமாம்; நான் விழிக்கும்போது இன்னம் உம்மண்டையில் இருக்கிறேன்.

19 தேவனே, நீர் துன்மார்க்கனை அழித்தீரானால் நலமாயிருக்கும்; இரத்தப்பிரியரே, நீங்கள் என்னைவிட்டு அகன்றுபோங்கள் — 20 அவர்கள் உம்மைக்குறித்துத் துன்மார்க்கமாய்ப் பேசுகிறார்கள்; உம்முடைய சத்துருக்கள் உமது நாமத்தை வீணாய் வழங்கு 21 கிறார்கள்.—கர்த்தாவே, உம்மைப் பகைக்கிறவர்களை நான் பகையாமலும், உமக்கு விரோதமாய் எழும்புகிறவர்களை அருவருக் 22 காமலும் இருப்பேனோ? — முழுப்பகையாய் அவர்களைப் பகைக்கிறேன்; அவர்களை எனக்குப் பகைஞராக எண்ணுகிறேன்.— 23 தேவனே, என்னை ஆராய்ந்து, என் இருதயத்தை அறிந்துகொள்ளும்; என்னைச் சோதித்து, என் சிந்தனைகளை அறிந்துகொள்ளும்.—வேதனை உண்டாக்கும் வழி என்னி 24 டத்தில் உண்டோ என்று பார்த்து, நித்திய வழியிலே என்னை நடத்தும்.

## 140

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, பொல்லாத மனுஷனுக்கு என்னைத் தப்புவியும்; கொடுமையுள்ளவனுக்கு என்னை விலக்கி இரட்சியும்.-அவர் 2 கள் தங்கள் இருதயத்தில் பொல்லாப்புகளைச் சிந்தித்து, யுத்தஞ்செய்ய நாள்தோறும் கூட்டங்கூடுகிறார்கள்.—சர்ப்பத்தைப் 3 போல் தங்கள் நாவைக் கூர்மையாக்குகிறார்கள்; அவர்கள் உதடுகளின்கீழ்விரியன் பாம்பின் விஷம் இருக்கிறது. (சேலா.)— கர்த்தாவே, துன்மார்க்கனுடைய கைக 4 ளுக்குஎன்னை நீங்கலாக்கி,கொடியவனுக்கு என்னை விலக்கி இரட்சியும்; அவர்கள் என் நடைகளைக் கவிழ்க்கப் பார்க்கிறார்கள்.— அகங்காரிகள் எனக்குக் கண்ணியையும் 5 கயிறுகளையும் மறைவாய் வைக்கிறார்கள்; வழியோரத்திலே வலையை விரித்து, எனக்குச் சுருக்குகளை வைக்கிறார்கள். (சேலா.)

நான் கர்த்தனை நோக்கி: நீர் என் தே 6 வன் என்றேன்; கர்த்தாவே, என் விண்ணப்பங்களின் சத்தத்துக்குச் செவிகொடும்.—ஆண்டவராகிய கர்த்தாவே, என் 7 இரட்சிப்பின் பெலனே, யுத்தநாளில் என் தலையை மூடினீர்.—கர்த்தாவே, துன்மார்க் 8 கனுடைய ஆசைகள் சித்தியாதபடி செய்யும்; அவன் தன்னை உயர்த்தாதபடி அவனுடைய யோசனையை நடந்தேறவொட்டாதேயும். (சேலா.)

என்னை வளைந்துகொள்ளுகிறவர்களு 9 டைய உதடுகளின் தீவினைகள் அவர்கள் தலைகளையே மூடுவதாக.—நெருப்புத்தழல் 10 அவர்கள்மேல்விழுவதாக; அக்கினியிலும், அவர்கள் எழுந்திருக்கக்கூடாத படுகுழிகளிலும் தள்ளப்படுவார்களாக. — பொல் 11 லாத நாவுள்ளவன் பூமியிலே நிலைப்பதில்லை; கொடுமையான மனுஷனைப் பறக்கடிக்கப் பொல்லாப்பு அவனை வேட்டையாடும்.— சிறுமையானவனின் வழக்கையும், எளிய 12 வர்களின் நியாயத்தையும் கர்த்தர் விசாரிப்பாரென்று அறிவேன். — நீதிமான்கள் 13 உமது நாமத்தைத் துதிப்பார்கள்; செம்மையானவர்கள் உமது சமுகத்தில் வாசம் பண்ணுவார்கள்

## 141

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன், என்னிடத்திற்கு வரத் தீவிரியும்;

நான் உம்மை நோக்கிக் கூப்பிடுகையில், என் சத்தத்திற்குச் செவிகொடும். 2 — என் விண்ணப்பம் உமக்கு முன்பாகத் தூபமாகவும், என் கையெடுப்பு அந்திப்பலியாகவும் இருக்கக்கடவது.

3 கர்த்தாவே, என் வாய்க்குக் காவல் வையும்; என் உதடுகளின் வாசலைக் காத்துக்கொள்ளும். 4 — அக்கிரமஞ்செய்கிற மனுஷரோடே அகாமியக் கிரியைகளை நடப்பிக்கும்படி என் இருதயத்தைத் துன்மார்க்கத்திற்கு இணங்கவொட்டாதேயும்; அவர்களுடைய ருசியுள்ள பதார்த்தங்களில் ஒன்றையும் நான் சாப்பிடாமல் இருப்பேனாக.

5 நீதிமான் என்னைத் தயவாய்க் குட்டி, என்னைக் கடிந்துகொள்ளட்டும்; அது என் தலைக்கு எண்ணெயைப்போலிருக்கும்; என் தலை அதை அல்லத்தட்டுவதில்லை; அவர்கள் இக்கட்டுகளில் நான் இன்னும் ஜெபம்பண்ணுவேன். 6 — அவர்களுடைய நியாயாதிபதிகள் கன்மலைச் சார்புகளிலிருந்து தள்ளுண்டு போகிறபோது, என் வார்த்தைகள் இன்பமானவைகளென்று கேட்பார்கள்.

7 பூமியின்மேல் ஒருவன் மரத்தை வெட்டிப் பிளக்கிறதுபோல, எங்கள் எலும்புகள் பாதாளவாய்க்கு நேராய்ச் சிதறடிக்கப்பட்டிருக்கிறது.

8 ஆனாலும் ஆண்டவராகிய கர்த்தாவே, என் கண்கள் உம்மை நோக்கியிருக்கிறது; உம்மை நம்பியிருக்கிறேன்; என் ஆத்துமாவை வெறுமையாக விடாதேயும். 9 — அவர்கள் எனக்கு வைத்த கண்ணியின் சிக்குகளுக்கும், அக்கிரமக்காரரின் சுருக்குகளுக்கும் என்னை விலக்கி இரட்சியும். 10 — துன்மார்க்கர் தங்கள் வலைகளில் அகப்படுவார்களாக; நானோ அதற்குத் தப்பிக் கடந்துபோவேன்.

**142** (தாவீது கெபியிலிருக்கும்போது பண்ணின விண்ணப்பமாகிய மஸ்கீல் என்னும் சங்கீதம்.)

கர்த்தரை நோக்கிச் சத்தமிட்டுக் கூப்பிடுகிறேன்; கர்த்தரை நோக்கிச் சத்தமிட்டுக் கெஞ்சுகிறேன். 2 — அவருக்கு முன்பாக என் சஞ்சலத்தை ஊற்றுகிறேன்; அவருக்கு முன்பாக என் நெருக்கத்தை அறிக்கையிடுகிறேன். 3 — என் ஆவி என்னில் தியங்கும்போது, நீர் என் பாதையை அறிந்திருக்கிறீர்; நான் நடக்கிற வழியில் மறைவாக எனக்குக் கண்ணிவைத்தார்கள். 4 — வலதுபுறமாய்க் கண்ணோக்கிப் பாரும், என்னை அறிவார் ஒருவரும் இல்லை; எனக்கு அடைக்கலமில்லாமற்போயிற்று; என் ஆத்துமாவை விசாரிப்பார் ஒருவரும் இல்லை.

5 கர்த்தாவே, உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்; நீரே என் அடைக்கலமும், ஜீவனுள்ளோர் தேசத்திலே என் பங்குமாயிருக்கிறீர் என்றேன். 6 — என் கூக்குரலுக்குச் செவிகொடும், நான் மிகவும் தாழ்த்தப்பட்டேன்; என்னைப் பின்தொடருகிறவர்களுக்கு என்னைத் தப்புவியும், அவர்கள் என்னிலும் பலவான்களாயிருக்கிறார்கள். 7 — உமது நாமத்தை நான் துதிக்கும்படி, என் ஆத்துமாவைக் காவலுக்கு நீங்கலாக்கிவிடும்; எனக்கு நீர் தயவுசெய்யும்போது நீதிமான்கள் என்னைச் சூழ்ந்துகொள்ளுவார்கள்.

**143** (தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, என் ஜெபத்தைக் கேளும், என் விண்ணப்பங்களுக்குச் செவிகொடும்; உமது உண்மையின்படியும் உமது நீதியின்படியும் எனக்கு உத்தரவு அருளிச்செய்யும். 2 — ஜீவனுள்ள ஒருவனும் உமக்கு முன்பாக நீதிமான் அல்லாததினாலே, அடியேனை நியாயந்தீர்க்கப் பிரவேசியாதேயும். 3 — சத்துரு என் ஆத்துமாவைத் தொடர்ந்து, என் பிராணனைத் தரையோடே நசுக்கி, வெகுகாலத்துக்குமுன் மரித்தவர்கள்போல் என்னை இருளில் இருக்கப்பண்ணுகிறான். 4 — என் ஆவி என்னில் தியங்குகிறது; என் இருதயம் எனக்குள் சோர்ந்துபோகிறது. 5 — பூர்வநாட்களை நினைக்கிறேன், உமது செய்கைகளையெல்லாம் தியானிக்கிறேன்; உமது கரத்தின் கிரியைகளை யோசிக்கிறேன். 6 — என் கைகளை உமக்கு நேராக விரிக்கிறேன்; வறண்ட நிலத்தைப்போல் என் ஆத்துமா உம்மேல் தாகமாயிருக்கிறது. (சேலா.)

7 கர்த்தாவே, சீக்கிரமாய் எனக்குச் செவிகொடும், என் ஆவி தொய்ந்துபோகிறது; நான் குழியில் இறங்குகிறவர்களுக்கு ஒப்பாகாதபடிக்கு, உமது முகத்தை எனக்கு மறையாதேயும். 8 — அதிகாலையில் உமது கிருபையைக் கேட்கப்பண்ணும், உம்மை நம்பியிருக்கிறேன், நான் நடக்கவேண்டிய வழியை எனக்குக் காண்பியும்; உம்மிடத்தில் என் ஆத்துமாவை உயர்த்துகிறேன். 9 — கர்த்தாவே, என் சத்துருக்களுக்கு என்னைத் தப்புவியும்; உம்மைப் புகலிடமாகக் கொள்ளுகிறேன். 10 — உமக்குப் பிரியமானதைச் செய்ய எனக்குப் போதித்தருளும், நீரே என் தேவன்; உம்முடைய நல்ல ஆவி என்னைச் செம்மையான வழி

11 யிலே நடத்துவாராக.—கர்த்தாவே, உம்முடைய நாமத்தினிமித்தம் என்னை உயிர்ப்பியும்; உம்முடைய நீதியின்படி என் ஆத்துமாவை இடுக்கத்திற்குநீங்கலாக்கிவிடும்.-
12 உம்முடைய கிருபையின்படி என் சத்துருக்களை அழித்து, என் ஆத்துமாவை ஒடுக்குகிற யாவரையும் சங்காரம்பண்ணும்; நான் உமது அடியேன்.

**144** (தாவீதின் சங்கீதம்.)

என் கைகளைப் போருக்கும் என் விரல்களை யுத்தத்திற்கும் படிப்பிக்கிற என் கன்மலையாகிய கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.—
2 அவர் என் தயாபரரும், என் கோட்டையும், என் உயர்ந்த அடைக்கலமும், என்னை விடுவிக்கிறவரும், என் கேடகமும், நான் நம்பினவரும், என் ஜனங்களை எனக்குக்
3 கீழ்ப்படுத்துகிறவருமாயிருக்கிறார்.—கர்த்தாவே, மனுஷனை நீர் கவனிக்கிறதற்கும், மனுபுத்திரனை நீர் எண்ணுகிறதற்கும் அவன்
4 எம்மாத்திரம்?—மனுஷன் மாயைக்கு ஒப்பாயிருக்கிறான்; அவன் நாட்கள் கடந்துபோகிற நிழலுக்குச் சமானம்.

5 கர்த்தாவே, நீர் உமது வானங்களைத் தாழ்த்தி இறங்கி, பர்வதங்கள் புகையும்
6 படி அவைகளைத் தொடும்.—மின்னல்களை வரவிட்டுச் சத்துருக்களைச் சிதறடியும், உமது அம்புகளை எய்து அவர்களைக் கலங்கடி
7 யும்.—உயரத்திலிருந்து உமது கரத்தை நீட்டி, ஜலப்பிரவாகத்துக்கு என்னை விலக்கி
8 இரட்சியும்.-மாயையைப் பேசும் வாயும், கள்ளத்தனமான வலதுகையும் உடைய அந்நிய புத்திரரின் கைக்கு என்னை விலக்கித் தப்புவியும்.

9 கர்த்தாவே, நான் உமக்குப் புதுப்பாட்டைப் பாடுவேன்; தம்புரினாலும் பத்துநரம்பு வீணையினாலும் உம்மைக் கீர்த்தனம்
10 பண்ணுவேன்.—நீரே ராஜாக்களுக்கு ஜெயத்தைத் தந்து, உமதடியானாகிய தாவீதைப் பொல்லாத பட்டயத்திற்குத் தப்புவிக்கிற
11 வர்.-மாயையைப் பேசும் வாயும், கள்ளத்தனமான வலதுகையும் உடைய அந்நிய புத்திரரின் கைக்கு என்னை விலக்கித் தப்புவியும்.

12 அப்பொழுது எங்கள் குமாரர் இளமையில் ஓங்கி வளருகிற விருட்சக் கன்றுகளைப் போலவும், எங்கள் குமாரத்திகள் சித்திரந்தீர்ந்த அரமனை மூலைக்கற்களைப்போலவும்
13 இருப்பார்கள்.—எங்கள் களஞ்சியங்கள் சகலவித வஸ்துக்களையும் கொடுக்கத்தக்கதாய் நிரம்பியிருக்கும்; எங்கள் கிராமங்களில் எங்கள் ஆடுகள் ஆயிரம் பதினாயிரமாய்ப் பலுகும்.—எங்கள் எருதுகள் பலத்
14 தவைகளாயிருக்கும்; சத்துரு உட்புகுதலும், குடியோடிப்போகுதலும் இராது; எங்கள் வீதிகளில் கூக்குரலும் உண்டாகாது.

15 இவ்விதமான சீரைப்பெற்ற ஜனம் பாக்கியமுள்ளது; கர்த்தரை தெய்வமாகக் கொண்டிருக்கிற ஜனம் பாக்கியமுள்ளது.

(தாவீது பாடின ஸ்தோத்திர சங்கீதம்.) **145**

ராஜாவாகிய என் தேவனே, உம்மை உயர்த்தி, உம்முடைய நாமத்தை எப்பொழுதும் என்றென்றைக்கும் ஸ்தோத்திரிப்பேன்.—
2 நாடோறும் உம்மை ஸ்தோத்திரித்து, எப்பொழுதும் என்றென்றைக்கும் உம்முடைய நாமத்தைத் துதிப்பேன்.—
3 கர்த்தர் பெரியவரும் மிகவும் புகழப்படத் தக்கவருமாயிருக்கிறார்; அவருடைய மகத்துவம் ஆராய்ந்து முடியாது.-
4 தலைமுறை தலைமுறையாக உம்முடைய கிரியைகளின் புகழ்ச்சியைச் சொல்லி, உம்முடைய வல்லமையுள்ள செய்கைகளை அறிவிப்பார்கள். —
5 உம்முடைய சிறந்த மகிமைப் பிரதாபத்தையும், உம்முடைய அதிசயமான கிரியைகளையுங் குறித்துப் பேசுவேன்.—
6 ஜனங்கள் உம்முடைய பயங்கரமான கிரியைகளின் வல்லமையைச் சொல்லுவார்கள்; உம்முடைய மகத்துவத்தை நான் விவரிப்பேன். —
7 அவர்கள் உமது மிகுந்த தயவை நினைத்து வெளிப்படுத்தி, உமது நீதியைக் கெம்பீரித்துப் பாடுவார்கள்.

8 கர்த்தர் இரக்கமும் மனஉருக்கமும், நீடியசாந்தமும் மிகுந்த கிருபையும் உள்ளவர்.—
9 கர்த்தர் எல்லார்மேலும் தயவுள்ளவர்; அவர் இரக்கங்கள் அவருடைய எல்லாக் கிரியைகளின் மேலுமுள்ளது.—
10 கர்த்தாவே, உம்முடைய கிரியைகளெல்லாம் உம்மைத் துதிக்கும்; உம்முடைய பரிசுத்தவான்கள் உம்மை ஸ்தோத்திரிப்பார்கள்.—
11 மனுபுத்திரருக்கு உமது வல்லமையுள்ள செய்கைகளையும், உமது ராஜ்யத்தின் சிறந்த மகிமைப்பிரதாபத்தையும் தெரிவிக்கும்படிக்கு;—
12 உமது ராஜ்யத்தின் மகிமையை அறிவித்து, உமது வல்லமையைக்குறித்துப் பேசுவார்கள். —
13 உம்முடைய ராஜ்யம் சதாகாலங்களிலுமுள்ள ராஜ்யம், உம்முடைய ஆளுகை தலைமுறை தலைமுறையாகவும் உள்ளது.

14 கர்த்தர் விழுகிற யாவரையும் தாங்கி, மடங்கடிக்கப்பட்ட யாவரையும் தூக்கி

15 விடுகிறார்.-எல்லா ஜீவன்களின் கண்களும் உம்மை நோக்கிக்கொண்டிருக்கிறது; ஏற்ற வேளையிலே நீர் அவைகளுக்கு ஆகாரங் 16 கொடுக்கிறீர்.-நீர் உமது கையைத் திறந்து, சகல பிராணிகளின் வாஞ்சையையும் திரு 17 ப்தியாக்குகிறீர்.—கர்த்தர் தமது வழிகளிலெல்லாம் நீதியுள்ளவரும், தமது கிரியைகளிலெல்லாம் கிருபையுள்ளவருமாயிருக்கிறார்.

18 தம்மை நோக்கிக் கூப்பிடுகிற யாவருக்கும், உண்மையாய்த் தம்மை நோக்கிக் கூப்பிடுகிற யாவருக்கும், கர்த்தர் சமீப 19 மாயிருக்கிறார்.—அவர் தமக்குப் பயந்தவர்களுடைய விருப்பத்தின்படி செய்து, அவர்கள் கூப்பிடுதலைக் கேட்டு, அவர்களை 20 இரட்சிக்கிறார்.—கர்த்தர் தம்மில் அன்புகூருகிற யாவரையும் காப்பாற்றி, துன் 21 மார்க்கர் யாவரையும் அழிப்பார்.—என் வாய் கர்த்தரின் துதியைச் சொல்வதாக; மாம்சதேகமுள்ள யாவும் அவருடைய பரிசுத்தநாமத்தை எப்பொழுதும் என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கக்கடவது.

146 அல்லேலூயா, என் ஆத்துமாவே, 2 கர்த்தரைத் துதி. — நான் உயிரோடிருக்கும்மட்டும் கர்த்தரைத் துதிப்பேன்; நான் உள்ளளவும் என் தேவனைக் கீர்த்தனம் 3 பண்ணுவேன்.—பிரபுக்களையும், இரட்சிக்கத் திராணியில்லாத மனுபுத்திரனையும் நம் 4 பாதேயுங்கள்.—அவனுடைய ஆவி பிரியும், அவன் தன் மண்ணுக்குத் திரும்புவான்; அந்நாளிலே அவன் யோசனைகள் 5 அழிந்துபோம்.—யாக்கோபின் தேவனைத் தன் துணையாகக் கொண்டிருந்து, தன் தேவனாகிய கர்த்தர்மேல் நம்பிக்கையை வைக் 6 கிறவன் பாக்கியவான்.—அவர் வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள யாவையும் உண்டாக்கினவர்; அவர் என்றென்றைக்கும் உண்மையைக் 7 காக்கிறவர். — அவர் ஒடுக்கப்பட்டவர்களுக்கு நியாயஞ்செய்கிறார்; பசியாயிருக்கிறவர்களுக்கு ஆகாரங் கொடுக்கிறார்; கட்டுண்டவர்களைக் கர்த்தர் விடுதலையாக்குகி 8 றார்.—குருடரின் கண்களைக் கர்த்தர் திறக்கிறார்; மடங்கடிக்கப்பட்டவர்களைக் கர்த்தர் தூக்கிவிடுகிறார்; நீதிமான்களைக் கர்த் 9 தர் சிநேகிக்கிறார்.—பரதேசிகளைக் கர்த்தர் காப்பாற்றுகிறார்; அவர் திக்கற்ற பிள்ளையையும் விதவையையும் ஆதரிக்கிறார்; துன்மார்க்கரின் வழியையோ கவிழ்த்துப் 10 போடுகிறார்.-கர்த்தர் சதாகாலங்களிலும் அரசாளுகிறார்; சீயோனே, உன் தேவன் தலைமுறை தலைமுறையாகவும் ராஜரிகம் பண்ணுகிறார். அல்லேலூயா.

147 கர்த்தரைத் துதியுங்கள்; நம்முடைய தேவனைக் கீர்த்தனம் பண்ணுகிறது நல்லது, துதித்தலே இன்பமும் ஏற்றதுமாயிருக்கிறது.-கர்த்தர் எருசலேமைக் கட்டு 2 கிறார்; துரத்துண்ட இஸ்ரவேலரைக் கூட்டிச் சேர்க்கிறார்.—இருதயம் நொறுங்குண் 3 டவர்களைக் குணமாக்குகிறார், அவர்களுடைய காயங்களைக் கட்டுகிறார். — அவர் 4 நட்சத்திரங்களின் இலக்கத்தை எண்ணி, அவைகளுக்கெல்லாம் பேரிட்டு அழைக்கிறார்.—நம்முடைய ஆண்டவர் பெரிய 5 வரும் மகா பெலமுள்ளவருமா யிருக்கிறார்; அவருடைய அறிவு அளவில்லாதது.- கர்த்தர் சாந்தகுணமுள்ளவர்களை உயர்த் 6 துகிறார்; துன்மார்க்கரைத் தரைமட்டும் தாழ்த்துகிறார்.

கர்த்தரைத் துதியுடன் பாடிக்கொண் 7 டாடுங்கள்; நம்முடைய தேவனைச் சுரமண்டலத்தால் கீர்த்தனம்பண்ணுங்கள்.- அவர் வானத்தை மேகங்களால் மூடி, பூமி 8 க்கு மழையை ஆயத்தப்படுத்தி, மலைகளில் புல்லை முளைப்பிக்கிறார். — அவர் மிருக 9 ஜீவன்களுக்கும் கூப்பிடுகிற காக்கைக் குஞ்சுகளுக்கும் ஆகாரங்கொடுக்கிறார். — அவர் குதிரையின் பலத்தில் விருப்பமாயி 10 ரார்; வீரனுடைய கால்களில் பிரியப்படார்.—தமக்குப் பயந்து, தமது கிருபைக் 11 குக் காத்திருக்கிறவர்கள்மேல் கர்த்தர் பிரியமாயிருக்கிறார்.

எருசலேமே, கர்த்தரை ஸ்தோத்திரி; 12 சீயோனே, உன் தேவனைத் துதி. — அவர் 13 உன் வாசல்களின் தாழ்ப்பாள்களைப் பலப்படுத்தி, உன்னிடத்திலுள்ள உன் பிள்ளைகளை ஆசீர்வதிக்கிறார்.—அவர் உன் எல்லைகளைச் 14 சமாதானமுள்ளவைகளாக்கி, உசிதமான கோதுமையினால் உன்னைத் திருப்தியாக்குகிறார்.—அவர் தமது வார்த்தையைப் பூமி 15 யிலே அனுப்புகிறார்; அவருடைய சொல் மகா தீவிரமாய்ச் செல்லுகிறது.-பஞ்சைப் 16 போல் உறைந்த மழையைத் தருகிறார்; சாம்பலைப்போல உறைந்த பனியைத் தூவுகிறார்.—அவர் தமது கல்மழையைத் துணிக் 17 கைகளாக அனுப்புகிறார்; அவருடைய குளிருக்கு முன்பாக நிற்பவன் யார்?— அவர் தமது வார்த்தையை அனுப்பி, 18 அவைகளை உருகப்பண்ணுகிறார்; தமது காற்றை வீசும்படி செய்ய, தண்ணீர்கள்

19 ஓடும்.—யாக்கோபுக்குத் தம்முடைய வசனங்களையும், இஸ்ரவேலுக்குத் தமது பிரமாணங்களையும் தமது நியாயங்களையும் 20 அறிவிக்கிறார்.—அவர் வேறே எந்த ஜாதிக்கும் இப்படிச் செய்ததில்லை; அவருடைய நியாயங்களை அறியாமற் போகிறார்கள். அல்லேலூயா.

148 அல்லேலூயா, வானங்களில் உள்ளவைகளே, கர்த்தரைத் துதியுங்கள்; உன் 2 னதங்களில் அவரைத் துதியுங்கள்.—அவருடைய தூதர்களே, நீங்கள் யாவரும் அவரைத் துதியுங்கள்; அவருடைய சேனைகளே, நீங்கள் யாவரும் அவரைத் துதியுங் 3 கள்.—சூரிய சந்திரரே, அவரைத் துதியுங்கள்; பிரகாசமுள்ள சகல நட்சத்திரங்க 4 ளே, அவரைத் துதியுங்கள்.—வானாதி வானங்களே, அவரைத் துதியுங்கள்; ஆகாய மண்டலத்தின்மேலுள்ள தண்ணீர்களே, 5 அவரைத் துதியுங்கள்.—அவைகள், கர்த்தரின் நாமத்தைத் துதிக்கக்கடவது; அவர் கட்டளையிட அவைகள் சிருஷ்டிக் 6 கப்பட்டது.—அவர் அவைகளை என்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் நிலைக்கும்படி செய்தார்; மாறாத பிரமாணத்தை அவைகளுக்கு நியமித்தார்.

7 பூமியிலுள்ளவைகளே, கர்த்தரைத் துதியுங்கள்; மகாமச்சங்களே, சகல ஆழங் 8 களே,—அக்கினியே, கல்மழையே, உறைந்த மழையே, மூடுபனியே, அவர் சொற் 9 படி செய்யும் பெருங்காற்றே,—மலைகளே, சகல மேடுகளே, கனிமரங்களே, சகல 10 கேதுருக்களே,—காட்டு மிருகங்களே, சகல நாட்டு மிருகங்களே, ஊரும் பிராணிகளே, 11 இறகுள்ள பறவைகளே,—பூமியின் ராஜாக்களே, சகல ஜனங்களே, பிரபுக்களே, பூமியிலுள்ள சகல நியாயாதிபதிகளே,— 12 வாலிபரே, கன்னிகைகளே, முதிர்வயதுள்ளவர்களே, பிள்ளைகளே, கர்த்தரைத் துதி 13 யுங்கள்.—அவர்கள் கர்த்தரின் நாமத்தைத் துதிக்கக்கடவர்கள்; அவருடைய நாமம்மாத்திரம் உயர்ந்தது; அவருடைய மகிமை பூமிக்கும் வானத்திற்கும் மேலா 14 னது.—அவர் தம்முடைய பரிசுத்தவான்கள் யாவருக்கும், தம்மைச் சேர்ந்த ஜனமாகிய இஸ்ரவேல் புத்திரருக்கும் கொண்டாட்டமாக, தம்முடைய ஜனத்திற்கு ஒரு கொம்பை உயர்த்தினார். அல்லேலூயா.

149 அல்லேலூயா, கர்த்தருக்குப் புதுப் பாட்டைப் பாடுங்கள்; பரிசுத்தவான்களின் சபையிலே அவருடைய துதி விளங்கு 2 வதாக.—இஸ்ரவேல் தன்னை உண்டாக்கினவரில் மகிழவும், சீயோன் குமாரர் தங்கள் 3 ராஜாவில் களிகூரவுங் கடவர்கள்.—அவருடைய நாமத்தை நடனத்தோடே துதித்து, தம்புரினாலும் கின்னரத்தினாலும் அவரைக் 4 கீர்த்தனம் பண்ணக்கடவர்கள்.—கர்த்தர் தம்முடைய ஜனத்தின்மேல் பிரியம் வைக்கிறார்; சாந்தகுணமுள்ளவர்களை இரட்சிப்பினால் அலங்கரிப்பார்.

5 பரிசுத்தவான்கள் மகிமையோடே களிகூர்ந்து, தங்கள் படுக்கைகளின்மேல் கெம் 6 பீரிப்பார்கள்.—ஜாதிகளிடத்தில் பழிவாங் 7 கவும், ஜனங்களை தண்டிக்கவும், — அவர்களுடைய ராஜாக்களைச் சங்கிலிகளாலும், அவர்களுடைய மேன்மக்களை இருப்பு விலங்குகளாலும் கட்டவும், எழுதப்பட்ட நியாயத்தீர்ப்பை அவர்கள்பேரில் செலுத் 8 தவும்.—அவர்கள் வாயில் கர்த்தரை உயர்த்தும் துதியும், அவர்கள் கையில் இருபுறமும் 9 கருக்குள்ள பட்டயமும் இருக்கும்.—இந்தக் கனம் அவருடைய பரிசுத்தவான்கள் யாவருக்கும் உண்டாகும். அல்லேலூயா.

150 அல்லேலூயா, தேவனை அவருடைய பரிசுத்த ஸ்தலத்தில் துதியுங்கள்; அவருடைய வல்லமை விளங்கும் ஆகாயவிரிவைப் பார்த்து அவரைத் துதியுங்கள்.— 2 அவருடைய வல்லமையுள்ள கிரியைகளுக்காக அவரைத் துதியுங்கள்; மாட்சிமை பொருந்திய அவருடைய மகத்துவத்திற் 3 காக அவரைத் துதியுங்கள்.—எக்காளதொனியோடே அவரைத் துதியுங்கள்; வீணையோடும் சுரமண்டலத்தோடும் அவரைத் 4 துதியுங்கள்.—தம்புரோடும் நடனத்தோடும் அவரைத் துதியுங்கள்; யாழோடும் தீங்குழலோடும் அவரைத் துதியுங்கள்.— 5 ஓசையுள்ள கைத்தாளங்களோடும் அவரைத் துதியுங்கள்; பேரோசையுள்ள கைத்தாளங்களோடும் அவரைத் துதியுங்கள்.

6 சுவாசமுள்ள யாவும் கர்த்தரைத் துதிப்பதாக. அல்லேலூயா.

THE PROVERBS

# நீதிமொழிகள்



1 தாவீதின் குமாரனும் இஸ்ரவேலின் ராஜாவுமாகிய சாலொமோனின் நீதிமொழிகள்:— 2 இவைகளால் ஞானத்தையும் போதகத்தையும் அறிந்து, புத்திமதிகளை உணர்ந்து,— 3 விவேகம், நீதி, நியாயம், நிதானம் என்பவைகளைப்பற்றிய உபதேசத்தை அடையலாம்.— 4 இவைகள் பேதைகளுக்கு வினாவையும், வாலிபருக்கு அறிவையும் விவேகத்தையும் கொடுக்கும்.— 5 புத்திமான் இவைகளைக் கேட்டு, அறிவில் தேறுவான்; விவேகி நல்லாலோசனைகளை அடைந்து;— 6 நீதிமொழியையும், அதின் அர்த்தத்தையும், ஞானிகளின் வாக்கியங்களையும், அவர்கள் உரைத்த புதைபொருள்களையும் அறிந்துகொள்வான்.

7 கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்தின் ஆரம்பம்; மூடர் ஞானத்தையும் போதகத்தையும் அசட்டைபண்ணுகிறார்கள்.

8 என் மகனே, உன் தகப்பன் புத்தியைக் கேள், உன் தாயின் போதகத்தைத் தள்ளாதே.— 9 அவைகள் உன் சிரசுக்கு அலங்காரமான முடியும், உன் கழுத்துக்குச் சரப்பணியுமாயிருக்கும்.

10 என் மகனே, பாவிகள் உனக்கு நயங்காட்டினாலும் நீ சம்மதியாதே.— 11 எங்களோடே வா, இரத்தஞ்சிந்தும்படி நாம் பதிவிருந்து, குற்றமற்றிருக்கிறவர்களை முகாந்தரமின்றிப் பிடிக்கும்படி ஒளித்திருப்போம்;— 12 பாதாளம் விழுங்குவதுபோல் நாம் அவர்களை உயிரோடே விழுங்குவோம்; குழியில் இறங்குகிறவர்கள் விழுங்கப்படுவதுபோல் அவர்களை முழுமையும் விழுங்குவோம்;— 13 விலையுயர்ந்த சகலவிதப் பொருள்களையும் கண்டடைவோம்; கொள்ளைப்பொருளினால் 14 நம்முடைய வீடுகளை நிரப்புவோம் —எங்களோடே பங்காளியாயிரு; நம்மெல்லாருக்கும் ஒரேபை இருக்கும் என்று அவர்கள் சொல்வார்களாகில்;— 15 என் மகனே, நீ அவர்களோடே வழிநடவாமல், உன் காலை அவர்கள் பாதைக்கு விலக்குவாயாக.— 16 அவர்கள் கால்கள் தீங்குசெய்ய ஓடி, இரத்தஞ்சிந்தத் தீவிரிக்கிறது.— 17 எவ்வகையான பட்சியானாலும் சரி, அதின் கண்களுக்கு முன்பாக வலையை விரிப்பது விருதா.— 18 இவர்களோ தங்கள் இரத்தத்திற்கே பதிவிருக்கிறார்கள், தங்கள் பிராணனுக்கே ஒளிவைத்திருக்கிறார்.— 19 பொருளாசையுள்ள எல்லாருடைய வழியும் இதுவே; இது தன்னையுடையவர்களின் உயிரை வாங்கும்.

20 ஞானமானது வெளியே நின்று கூப்பிடுகிறது, வீதிகளில் சத்தமிடுகிறது.— 21 அது சந்தடியுள்ள தெருக்களின் சந்திலும் ஒலிமுகவாசலிலும் நின்று கூப்பிட்டு, பட்டணத்தில் தன் வார்த்தைகளை வசனித்துச் சொல்லுகிறது:— 22 பேதைகளே, நீங்கள் பேதைமையை விரும்புவதும், நிந்தனைக்காரரே, நீங்கள் நிந்தனையில் பிரியப்படுவதும், மதியீனரே, நீங்கள் ஞானத்தை வெறுப்பதும், எதுவரைக்கும் இருக்குப்? — 23 என் கடிந்துகொள்ளுதலுக்குத் திரும்புங்கள்; இதோ, என் ஆவியை உங்களுக்கு அருளுவேன், என் வார்த்தைகளை உங்களுக்குத் தெரிவிப்பேன்.

24 நான் கூப்பிட்டும், நீங்கள் கேட்கமாட்டோம் என்கிறீர்கள்; நான் என் கையை நீட்டியும் கவனிக்கிறவன் ஒருவனும் இல்லை.— 25 என் ஆலோசனையையெல்லாம் நீங்கள் தள்ளி, என் கடிந்துகொள்ளுதலை வெறுத்தீர்கள். — 26 ஆகையால், நானும் உங்கள் ஆபத்துக்காலத்தில் நகைத்து, நீங்கள் பயப்படுங்காரியம் வரும்போது ஆகடியம்பண்ணுவேன். — 27 நீங்கள பயப்படுங்காரியம் புசல்போல் வரும்போதும், ஆபத்து சூறாவளிபோல் உங்களுக்கு நேரிடும்போதும், நெருக்கமும் இடுக்கணும் உங்கள்மேல் வரும்போதும், ஆகடியம்பண்ணுவேன். — 28 அப்பொழுது அவர்கள் என்னை நோக்கிக் கூப்பிடுவார்கள்; நான் மறுஉத்தரவு கொடுக்கமாட்டேன்; அவர்கள் அதிகாலையிலே என்னைத் தேடுவார்

29 கள், என்னைக் காணமாட்டார்கள்.—அவர்
கள் அறிவை வெறுத்தார்கள், கர்த்தருக்
குப் பயப்படுதலைத் தெரிந்துகொள்ளாமற்
30 போனார்கள்.—என் ஆலோசனையை அவர்
கள் விரும்பவில்லை; என் கடிந்துகொள்
ளுதலையெல்லாம் அசட்டைபண்ணினார்
31 கள்.—ஆகையால் அவர்கள் தங்கள் வழி
யின் பலனைப் புசிப்பார்கள்; தங்கள் யோ
32 சனைகளினால் திருப்தியடைவார்கள்.—பே
தைகளின் மாறுபாடு அவர்களைக் கொல்
லும், மூடரின் நிர்விசாரம் அவர்களை அழி
33 க்கும். — எனக்குச் செவிகொடுக்கிறவன்
எவனோ, அவன் விக்கினமின்றி வாசம்
பண்ணி, ஆபத்திற்குப் பயப்படாமல்
அமைதியாயிருப்பான்.

**2** என் மகனே, நீ உன் செவியை ஞானத்
திற்குச் சாய்த்து, உன் இருதயத்தைப் புத்
திக்கு அமையப்பண்ணும்பொருட்டு, —
2 நீ என் வார்த்தைகளை ஏற்றுக்கொண்டு,
என் கட்டளைகளை உன்னிடத்தில் பத்திரப்
3 படுத்தி,—ஞானத்தை வா என்று கூப்பி
ட்டு, புத்தியைச் சத்தமிட்டு அழைத்து,—
4 அதை வெள்ளியைப்போல் நாடி, புதை
யல்களைத் தேடுகிறதுபோல் தேடுவாயா
5 கில்,—அப்பொழுது கர்த்தருக்குப் பயப்
படுதல் இன்னதென்று நீ உணர்ந்து, தே
வனை அறியும் அறிவைக் கண்டடைவாய்.-
6 கர்த்தர் ஞானத்தைத் தருகிறார்; அவர்
வாயினின்று அறிவும் புத்தியும் வரும்.—
7 அவர் நீதிமான்களுக்கென்று மெய்ஞ்ஞானத்
தை வைத்துவைத்திருக்கிறார்; உத்தமமாய்
நடக்கிறவர்களுக்கு அவர் கேடகமாயிருக்
8 கிறார்.—அவர் நியாயத்தின் நெறிகளைத் தற்
காத்து, தம்முடைய பரிசுத்தவான்களின்
9 பாதையைக் காப்பாற்றுகிறார்.—அப்பொ
ழுது நீதியையும், நியாயத்தையும், நிதானத்
தையும், சகல நல்வழிகளையும் அறிந்து
கொள்ளுவாய்.

10 ஞானம் உன் இருதயத்தில் பிரவேசித்து,
அறிவு உன் ஆத்துமாவுக்கு இன்பமாயிருக்
11 கும்போது,—நல்யோசனை உன்னைக் காப்
பாற்றும், புத்தி உன்னைப் பாதுகாக்கும்.—
12 அதினால் நீ துன்மார்க்கனுடைய வழிக்கும்,
13 மாறுபாடு பேசுகிற மனுஷனுக்கும்,—அந்த
காரவழிகளில் நடக்க நீதிநெறிகளை விட்டு,-
14 தீமைசெய்ய மகிழ்ந்து, துன்மார்க்கரு
டைய மாறுபாடுகளில் களிகூருகிறவர்க
15 ளுக்கும்,—மாறுபாடான பாதைகளிலும்
கோணலான வழிகளிலும் நடக்கிறவர்க
16 ளுக்கும் நீ தப்புவிக்கப்படுவாய்.-தன் இள
வயதின் நாயகனை விட்டு, தன் தேவனு
டைய உடன்படிக்கையை மறந்து,—இச் 17
சகமான வார்த்தைகளைப் பேசும் அந்நிய
பெண்ணாகிய பரஸ்திரீக்கும் தப்புவிக்கப்ப
டுவாய்.—அவளுடைய வீடு மரணத்துக் 18
கும், அவளுடைய பாதைகள் மரித்தோ
ரிடத்துக்கும் சாய்கிறது.—அவளிடத்தில் 19
போகிறவர்களில் ஒருவரும் திரும்புகிற
தில்லை, ஜீவபாதைகளில் வந்து சேருகிறது
மில்லை.—ஆதலால் நீ நல்லவர்களின் வழி 20
யிலே நடந்து, நீதிமான்களின் பாதைகளைக்
காத்துக்கொள்வாயாக.—செவ்வையானவர் 21
கள் பூமியிலே வாசம்பண்ணுவார்கள்; உத்
தமர்கள் அதிலே தங்கியிருப்பார்கள்.—
துன்மார்க்கரோ பூமியிலிருந்து அறுப்பு 22
ண்டுபோவார்கள்; துரோகிகள் அதில் இரா
தபடிக்கு நிர்மூலமாவார்கள்.

**3** என் மகனே, என் போதகத்தை மறவா
தே; உன் இருதயம் என் கட்டளைகளைக்
காக்கக்கடவது. — அவைகள் உனக்கு 2
நீடித்த நாட்களையும், தீர்க்காயுசையும்,
சமாதானத்தையும் பெருகப்பண்ணும்.—
கிருபையும் சத்தியமும் உன்னை விட்டு 3
விலகாதிருப்பதாக; நீ அவைகளை உன் கழுத்
திலே பூண்டு, அவைகளை உன் இருதயமா
கிய பலகையில் எழுதிக்கொள்.—அதினால் 4
தேவனுடைய பார்வையிலும் மனுஷரு
டைய பார்வையிலும் தயையும் நற்புத்தி
யும் பெறுவாய்.

உன் சுயபுத்தியின்மேல் சாயாமல், உன் 5
முழு இருதயத்தோடும் கர்த்தரில் நம்பிக்
கையாயிருந்து,—உன் வழிகளிலெல்லாம் 6
அவரை நினைத்துக்கொள்; அப்பொழுது
அவர் உன் பாதைகளைச் செவ்வைப்படுத்
துவார்.—நீ உன்னை ஞானியென்று எண் 7
ணாதே; கர்த்தருக்குப் பயந்து, தீமையை
விட்டு விலகு.—அது உன் நாபிக்கு ஆரோக் 8
கியமும், உன் எலும்புகளுக்கு ஊணுமா
கும்.

உன் பொருளாலும், உன் எல்லா விளை 9
வின் முதற்பலனாலும் கர்த்தரைக் கனம்
பண்ணு.—அப்பொழுது உன் களஞ்சியங் 10
கள் பூரணமாய் நிரம்பும்; உன் ஆலைகளில்
திராட்சரசம் புரண்டோடும்.

என் மகனே, நீ கர்த்தருடைய சிட்சை 11
யை அற்பமாக எண்ணாதே, அவர் கடிந்து
கொள்ளும்போது சோர்ந்துபோகாதே.—
தகப்பன் தான் நேசிக்கிற புத்திரனைச் சிட் 12
சிக்கிறதுபோல, கர்த்தரும் எவனிடத்தில்
அன்புகூருகிறாரோ அவனைச் சிட்சிக்கிறார்.

13 ஞானத்தைக் கண்டடைகிற மனுஷ
னும், புத்தியைச் சம்பாதிக்கிற மனுஷ
14 னும் பாக்கியவான்கள்.—அதின் வர்த்தகம்
வெள்ளி வர்த்தகத்திலும், அதின் ஆதாயம்
15 பசும்பொன்னிலும் உத்தமமானது.—முத்
துக்களைப்பார்க்கிலும் அது விலையேறப்பெற்
றது; நீ இச்சிக்கத்தக்கதொன்றும் அதற்கு
16 நிகரல்ல.—அதின் வலதுகையில் தீர்க்கா
யுசும், அதின் இடதுகையில் செல்வமும்
17 கனமும் இருக்கிறது. — அதின் வழிகள்
இனிதான வழிகள், அதின் பாதைகளெல்
18 லாம் சமாதானம்.—அது தன்னை அடைந்
தவர்களுக்கு ஜீவவிருட்சம், அதைப் பற்
றிக்கொள்ளுகிற எவனும் பாக்கியவான்.

19 கர்த்தர் ஞானத்தினாலே பூமியை அஸ்தி
பாரப்படுத்தி, புத்தியினாலே வானங்களை
20 ஸ்தாபித்தார்.—அவருடைய ஞானத்தினா
லே ஆழங்கள் பிரிந்தது, ஆகாயமும் பனி
யைப் பெய்கிறது.

21 என் மகனே, இவைகள் உன் கண்களை
விட்டுப் பிரியாதிருப்பதாக; மெய்ஞ்ஞா
னத்தையும் நல்லாலோசனையையும் காத்
22 துக்கொள்.—அவைகள் உன் ஆத்துமாவுக்கு
ஜீவனும், உன் கழுத்துக்கு அலங்காரமு
23 மாயிருக்கும்.—அப்பொழுது நீ பயமின்றி
உன் வழியில் நடப்பாய், உன் கால் இட
24 றாது.—நீ படுக்கும்போது பயப்படாதிருப்
பாய்; நீ படுத்துக்கொள்ளும்போது உன்
25 நித்திரை இன்பமாயிருக்கும்.—சடிதியான
திகிலும், துஷ்டர்களின் பாழ்க்கடிப்பும்
26 வரும்போது நீ அஞ்சவேண்டாம்.—கர்த்
தர் உன் நம்பிக்கையாயிருந்து, உன் கால்
சிக்கிக்கொள்ளாதபடி காப்பார்.

27 நன்மை செய்யும்படி உனக்குத் திராணி
யிருக்கும்போது, அதைச் செய்யத்தக்கவர்
28 களுக்குச் செய்யாமல் இராதே.—உன்னி
டத்தில் பொருள் இருக்கையில் உன் அய
லானை நோக்கி: நீ போய்த் திரும்ப வா, நா
ளைக்குத் தருவேன் என்று சொல்லாதே.—
29 அச்சமின்றி உன்னிடத்தில் வாசம்பண்
ணுகிற உன் அயலானுக்கு விரோதமாகத்
தீங்கு நினையாதே.

30 ஒருவன் உனக்குத் தீங்கு செய்யாதி
ருக்க, காரணமின்றி அவனோடே வழக்கா
31 டாதே.—கொடுமையுள்ளவன்மேல் பொ
றாமைகொள்ளாதே; அவனுடைய வழிக
ளில் ஒன்றையும் தெரிந்துகொள்ளாதே.-
32 மாறுபாடுள்ளவன் கர்த்தருக்கு அருவருப்
பானவன்; நீதிமான்களோடே அவருடைய
33 இரகசியம் இருக்கிறது.—துன்மார்க்கனு
டைய வீட்டில் கர்த்தரின் சாபம் இருக்
கிறது, நீதிமான்களுடைய வாசஸ்தலத்தை
யோ அவர் ஆசீர்வதிக்கிறார்.—இகழ்வோ 34
ரை அவர் இகழுகிறார்; தாழ்மையுள்ளவர்
களுக்கோ கிருபையளிக்கிறார்.-ஞானவான் 35
கள் கனத்தைச் சுதந்தரிப்பார்கள்; மதிகே
டரோ கனவீனத்தை அடைவார்கள்.

பிள்ளைகளே, நீங்கள் தகப்பன் போத 4
கத்தைக் கேட்டு, புத்தியை அடையும்படி
கவனியுங்கள். — நான் உங்களுக்கு நற் 2
போதகத்தைத் தருகிறேன்; என் உபதே
சத்தை விடாதிருங்கள்.—நான் என் தகப் 3
பனுக்குப் பிரியமான குமாரனும், என்
தாய்க்கு மிகவும் அருமையான ஒரே பிள்
ளையுமானவன்.—அவர் எனக்குப் போதித் 4
துச் சொன்னது: உன் இருதயம் என்
வார்த்தைகளைக் காத்துக்கொள்ளக்கட
வது; என் கட்டளைகளைக் கைக்கொள்,
அப்பொழுது பிழைப்பாய்.— ஞானத்தைச் 5
சம்பாதி, புத்தியையும் சம்பாதி; என்
வாயின் வார்த்தைகளை மறவாமலும் விட்டு
விலகாமலும் இரு.—அதை விடாதே, அது 6
உன்னைத் தற்காக்கும்; அதின்மேல் பிரிய
மாயிரு, அது உன்னைக் காத்துக்கொள்
ளும்.— ஞானமே முக்கியம், ஞானத்தைச் 7
சம்பாதி; என்னத்தைச் சம்பாதித்தாலும்
புத்தியைச் சம்பாதித்துக்கொள்.—நீ அதை 8
மேன்மைப்படுத்து, அது உன்னை மேன்
மைப்படுத்தும்; நீ அதைத் தழுவிக்கொண்
டால், அது உன்னைக் கனம்பண்ணும்.—
அது உன் தலைக்கு அலங்காரமான முடி 9
யைக் கொடுக்கும்; அது மகிமையான
கிரீடத்தை உனக்குச் சூட்டும்.

என் மகனே, கேள், என் வார்த்தைகளை 10
ஏற்றுக்கொள்; அப்பொழுது உன் ஆயுசின்
வருஷங்கள் அதிகமாகும். — ஞானமார்க் 11
கத்தை நான் உனக்குப் போதித்தேன்;
செவ்வையான பாதைகளிலே உன்னை நடத்
தினேன்.—நீ அவைகளில் நடக்கும்போது 12
உன் நடைகளுக்கு இடுக்கண் உண்டாவ
தில்லை; நீ அவைகளில் ஓடினாலும் இடற
மாட்டாய். — புத்திமதியை உறுதியாய்ப் 13
பற்றிக்கொள், அதை விட்டுவிடாதே;
அதைக் காத்துக்கொள், அதுவே உனக்கு
ஜீவன்.

துன்மார்க்கருடைய பாதையில் பிரவே 14
சியாதே; தீயோருடைய வழியில் நட
வாதே.—அதை வெறுத்துவிடு, அதின் வழி 15
யாய்ப் போகாதே; அதை விட்டு விலகிக்
கடந்துபோ. — பொல்லாப்புச் செய்தா 16

லொழிய அவர்களுக்கு நித்திரை வராது;
அவர்கள் யாரையாகிலும் விழப்பண்ணா
திருந்தால் அவர்கள் தூக்கம் கலைந்து
17 போம். — அவர்கள் ஆகாமியத்தின் அப்
பத்தைப் புசித்து, கொடுமையின் இரசத்
18 தைக் குடிக்கிறார்கள்.—நீதிமான்களுடைய
பாதை நடுப்பகல்வரைக்கும் அதிகமதிக
மாய்ப் பிரகாசிக்கிற சூரியப்பிரகாசம்போ
19 லிருக்கும். — துன்மார்க்கருடைய பாதை
யோ காரிருளைப்போலிருக்கும்; தாங்கள்
இடறுவது இன்னதில் என்று அறியார்கள்.
20 என் மகனே, என் வார்த்தைகளைக் கவ
னி; என் வசனங்களுக்கு உன் செவியைச்
21 சாய்.—அவைகள் உன் கண்களை விட்டுப்
பிரியாதிருப்பதாக; அவைகளை உன் இருத
22 யத்துக்குள்ளே காத்துக்கொள்.—அவைக
ளைக் கண்டுபிடிக்கிறவர்களுக்கு அவைகள்
ஜீவனும், அவர்கள் உடலுக்கெல்லாம்
23 ஆரோக்கியமுமாம்.—எல்லாக் காவலோ
டும் உன் இருதயத்தைக் காத்துக்கொள்,
அதினிடத்தினின்று ஜீவஊற்று புறப்ப
24 டும்.—வாயின் தாறுமாறுகளை உன்னைவிட்
டகற்றி, உதடுகளின் மாறுபாட்டை உனக்
25 குத் தூரப்படுத்து.—உன் கண்கள் நேராய்
நோக்கக்கடவது; உன் கண்ணிமைகள்
உனக்கு முன்னே செவ்வையாய்ப் பார்க்
26 கக்கடவது. — உன் கால்நடையைச் சீர்
தூக்கிப் பார்; உன் வழிகளெல்லாம் நிலை
27 வரப்பட்டிருப்பதாக. — வலதுபுறமாவது
இடதுபுறமாவது சாயாதே; உன் காலைத்
தீமைக்கு விலக்குவாயாக.

5 என் மகனே, என் ஞானத்தைக் கவ
னித்து, என் புத்திக்கு உன் செவியைச்
2 சாய்; — அப்பொழுது நீ விவேகத்தைப்
பேணிக்கொள்வாய், உன் உதடுகள் அறி
வைக் காத்துக்கொள்ளும்.

3 பரஸ்திரீயின் உதடுகள் தேன்கூடுபோல்
ஒழுகும்; அவள் வாய் எண்ணெயிலும்
4 மிருதுவாயிருக்கும்.—அவள் செய்கையின்
முடிவோ எட்டியைப்போலக் கசப்பும்,
இருபுறமுங் கருக்குள்ள பட்டயம்போல்
5 கூர்மையுமாயிருக்கும்.—அவள் காலடிகள்
மரணத்துக்கு இறங்கும்; அவள் நடை
6 கள் பாதாளத்தைப் பற்றிப்போகும். — நீ
ஜீவமார்க்கத்தைச் சிந்தித்துக்கொள்ளாத
படிக்கு, அவளுடைய நடைகள் மாறிமாறி
விகாரப்படும்; அவைகளை அறிய முடியாது.

7 ஆதலால் பிள்ளைகளே, இப்பொழுது
எனக்குச் செவிகொடுங்கள்; என் வாயின்
8 வசனங்களை விட்டு நீங்காதிருங்கள்.—உன்
வழியை அவளுக்குத் தூரப்படுத்து; அவ
ளுடைய வீட்டின் வாசலைக் கிட்டிச் சே
ராதே. — சேர்ந்தால் உன் மேன்மையை 9
அந்நியர்களுக்கும், உன் ஆயுசின் காலத்
தைக் கொடூரருக்கும் கொடுத்துவிடுவாய்.-
அந்நியர் உன் செல்வத்தினால் திருப்தியடை 10
வார்கள்; உன் பிரயாசத்தின் பலன் புறத்தி
யாருடைய வீட்டில் சேரும்.—முடிவிலே 11
உன் மாம்சமும் உன் சரீரமும் உருவழி
யும்போது நீ துக்கித்து:—ஐயோ, போத 12
கத்தை நான் வெறுத்தேனே, கடிந்துகொள்
ளுதலை என் மனம் அலட்சியம் பண்ணி
னதே! — என் போதகரின் சொல்லை நான் 13
கேளாமலும், எனக்கு உபதேசம்பண்ணி
னவர்களுக்கு என் செவியைச் சாயாமலும்
போனேனே!—சபைக்குள்ளும் சங்கத்துக் 14
குள்ளும் கொஞ்சங்குறைய எல்லாத் தீமை
க்குமுள்ளானேனே! என்று முறையிடுவாய்.

உன் கிணற்றிலுள்ள தண்ணீரையும், 15
உன் துரவில் ஊறுகிற ஜலத்தையும் பானம்
பண்ணு. — உன் ஊற்றுகள் வெளியிலும் 16
உன் வாய்க்கால்கள் வீதிகளிலும் பாய்வ
தாக. — அவைகள் அந்நியருக்கும் உரிய 17
வைகளாயிராமல், உனக்கே உரியவைக
ளாயிருப்பதாக.—உன் ஊற்றுக்கண் ஆசீர் 18
வதிக்கப்படுவதாக; உன் இளவயதின் மனை
வியோடே மகிழ்ந்திரு. — அவளே நேசிக் 19
கப்படத்தக்க பெண்மானும், அழகான வ
ரையாடும்போலிருப்பாளாக; அவளுடைய
ஸ்தனங்களே எப்பொழுதும் உன்னைத்
திருப்தி செய்வதாக; அவளுடைய நேசத்
தால் நீ எப்பொழுதும் மயங்கியிருப்பா
யாக.—என் மகனே, நீ பரஸ்திரீயின்மேல் 20
மயங்கித் திரிந்து, அந்நிய ஸ்திரீயின் மார்
பைத் தழுவவேண்டியதென்ன? — மனுஷ 21
னுடைய வழிகள் கர்த்தரின் கண்களுக்கு
முன்பாக இருக்கிறது; அவனுடைய வழிக
ளெல்லாவற்றையும் அவர் சீர்தூக்கிப்
பார்க்கிறார்.—துன்மார்க்கனை அவனுடைய 22
அக்கிரமங்களே பிடித்துக்கொள்ளும்; தன்
பாவக்கயிறுகளால் கட்டப்படுவான்.—
அவன் புத்தியைக் கேளாததினால் மடிந்து, 23
தன் மதிகேட்டின் மிகுதியினால் மயங்கிப்
போவான்.

என் மகனே, நீ உன் சிநேகிதனுக்காகப் 6
பிணைப்பட்டு, அந்நியனுக்குக் கையடித்
துக் கொடுத்தாயானால்,—நீ உன் வாய்மொ 2
ழிகளால் சிக்குண்டாய், உன் வாயின் வார்த்
தைகளால் பிடிபட்டாய். — இப்பொழுது 3
என் மகனே, உன் சிநேகிதனுடைய கை

